Date

For

From

Story of My Life
by H Keller
in Tamil
pub by Jothi Nilayam
in India
3000 copies were
printed

எமது அடுத்த வெளியீடு :

## நண்பகலில் இருட்டு

ஆர்தர் கெய்ஸ்லர்

எழுதிய

*உலகப் பிரசித்திபெற்ற*

*அரசியல் நாவல்*

க. நா. சுப்ரமண்யம் *மொழி பெயர்ப்பு.*

# என் கதை

ஹெலன் கெல்லர்

மொழிபெயர்ப்பு

க. நா. சுப்ரமண்யம்

ஜோதி நிலையம்

திருவல்லிக்கேணி :: சென்னை-5.

# முன்னுரை

ஹெலன் கெல்லருடைய இந்த சுயசரிதம் அவர் கலாசாலையில் படிக்கும்போதே எழுதப்பட்ட ஒரு நூல். வெளியே பரவியிருந்த பல நம்பமுடியாத வதந்திகளை மறுப்பதற்காகவும், கண்ணும் காதுமற்ற ஒரு சிறுமியின் பிடிவாதமான முயற்சிகளையும் லக்ஷியங்களையும் எடுத்துச் சொல்வதற்காகவும் எழுதப்பட்டது. தனக்கு நன்மை செய்தவர்களுக்கு நன்றி கூற வேண்டும் என்கிற உணர்ச்சியும் அவளுக்குத் தோன்றியிருக்கலாம். உலகத்தின் சிறந்த சுயசரிதங்களுடன் இடம் பெறத்தக்க இந்த நூல் எவ்வளவோ கஷ்டங்களுக்கிடையேயும் வெற்றி கிட்டும், விடா முயற்சியும் சமயத்தில் உதவி செய்பவர்களும் இருந்தால், என்பதை நன்கு அறிவுறுத்துகிறது. ஹோமருக்கும் மில்டனுக்கும் அடுத்தபடியாக ஹெலன் கெல்லர் என்று சொல்லக் கூடியவகையிலே இந்நூலுக்கு இலக்கிய மதிப்பு உண்டு.

### கடிதங்கள்

1887 முதல் 1901 வரையில் ஹெலன் கெல்லர் எழுதிய பல கடிதங்கள் இந்த 'என் கதை' வரலாற்றை ஒட்டியவை என் கதையில் தெளிவாகாத சில விஷயங்களைப் பற்றி மட்டும் இங்கு குறுகிய அளவில் அந்தக் கடிதங்களில் கிடைக்கும் செய்திகளை எழுதலாம் என்று எண்ணுகிறேன். எழுத்துக்கூட்டக் கற்றுக்கொள்ள ஆரம்பித்து நாலு மாதங்களாவதற்குள்ளாகவே ஹெலன் தன் உறவினர்களுக்கும், தன் அன்பைக் கவர்ந்த எண்ணிறந்த நண்பர்களுக்கும் கடிதங்கள் எழுத ஆரம்பித்துவிட்டாள். எழுத்து என்கிற சாதனம் அவளுக்குக் கைவந்த விதத்தை அவளுடைய முதல் கடிதங்கள் நமக்குத் தெளிவாக்குகின்றன. நாளடைவில் அவளுடைய எழுத்து வன்மையும் நண்பர்களின் எண்ணிக்கையும் அதிகரிக்கின்றன.

தன் தாயாருக்கும் உறவினர்களுக்கும் அவள் தனக்கு ஏற்பட்ட புதுப்புது அனுபவங்களைச் சொல்லி ஆனந்தித்திருக்கிறாள் பல கடிதங்களில். எட்டு வயது நிரம்புமுன், 1888-ல், அமெரிக்க தேசம் ஸ்தாபிதமானது பற்றித் தான் அறிந்துகொண்ட சரித்திரக் கதையை ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறாள். போஸ்டனில் இருந்த பெர்க்கின்ஸ் ஸ்தாபனம் எனும் குருடர் பள்ளித்தலைவர் அனக்னூஸுக்கு அவள் பல கடிதங்கள் எழுதினாள். இவற்றில் அக்டோபர் 17, 1888ல் அவள் எழுதிய கடிதம் முக்கியமானது; தன்னைப்போலப் பாதிக்கப்பட்ட சிறுவர் சிறுமியர் பற்றி அவள் கவலை கொள்வது அந்தக் கடிதத்தில் முதல் முதலாக வெளியாகிறது. படிப்பது, இலக்கியம், பாஷை முதலியனபற்றி அவள் பிஞ்சு உள்ளத்தின் சிந்தனைகள் அந்தக் கடிதத்திலே இடம் பெற்றிருக்கின்றன. 1889ம் வருஷ ஆரம்பத்தில் வேறு ஒரு நண்பருக்கு எழுதிய கடிதத்தில் வானசாஸ்திரம்பற்றி எழுதியிருக்கிறாள். 1889க்குப் பிறகும் அவள் எழுதிய கடிதங்களில் அவளுக்கென்று ஏற்பட்டுவிட்ட தனி நடை தெள்ளத் தெளியக் காணப்படுகிறது. 1889 நவம்பரிலே அவள் கவி·விட்டியரின் கவிதை இரண்டைப் படித்தனுபவித்துவிட்டுப் பாராட்டி எழுதினாள். "தோட்டத்தில் உலாவும்போது அங்குள்ள மலர்கள் என் கண்ணில் படுவதில்லை. ஆனால் அவற்றின் மணத்தை நான் நுகருகிறேன். மலர் என்பது என்னைப்பற்றியவரையில் உண்மையான, அழகான ஒரு அனுபவம்தான்" என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருக்கிறாள் ஹெலன். ஆலிவர் வெண்டல் ஹோல்ம்ஸ் என்கிற ஆசிரியரைச் சந்தித்த பிறகு ஹெலன் 1890 மார்ச்சில் அவருக்கு முதல் கடிதம் எழுதினாள். "நான் உங்களுக்குக் கடிதம் எழுதுகிறேன்; ஏனென்றால் நான் உங்களிடம் அன்பு கொண்டவள்" என்று ஆரம்பித்திருக்கிறாள். அன்பு என்கிற நியதியும், மதமும், தத்துவமும் அவள் கடிதங்கள் பலவற்றில் இடம் பெறுகின்றன. தத்துவ தரிசனங்கள் சம்பந்தமாகவும், அவற்றின் அசைக்க முடியாத முடிவுகள் பற்றியும் ப்ரூக்ஸ் எனும் நண்பருக்கு ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறாள்; தனக்கு எட்டுகிறவிதத்தில் கடவுள் என்கிற தத்துவம்பற்றி அந்தக் கடிதத்தில் விவா

இத்திருக்கிருள். "உங்களுக்குத் தெரிந்தது, உண்மை என்று நீங்கள் மனமொப்பி அறிந்ததை, எனக்கும் சொல்லுங்கள்" என்று ஆர்வத்துடன் கேட்டிருக்கிருள்.

"உன் கடிதங்களில் காணப்படும் பாஷைநயம், பாஷைத் தெளிவு எனக்கு ஆச்சரியம் தருவதாக இருக்கிறது" என்று ஆசிரியர் ஹோல்ம்ஸ் 1890ல் அவளுக்கு எழுதிய கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிருர். நல்ல இலக்கியத்தை ரசிக்கவும், நல்ல அனுபவங்களை அறிந்து பெறவும், நல்ல சிந்தனைகளைச் சிந்திக்கவும் கண்ணும் காதும் அவசியமே இல்லை என்கிற அளவுக்கு, ஹெலனின் கடிதங்களைக் கண்டு, அவள் நண்பர்கள் எண்ணி ஆச்சரியப்பட்டார்கள். ஒன்பது பத்து வயது ஆவதற்கு முன்னரே ஹெலன் புஸ்தகங்களுக்குத் தன் உள்ளத்தைப் பறி கொடுத்துவிட்டாள் என்பதை அவள் கடிதங்கள் பல நமக்கு அறிவுறுத்துகின்றன. "இங்கே வாசகசாலையில் ஏராளமான புஸ்தகங்கள் இருக்கின்றன—நேர்த்தியான விதமாக நான் என் பொழுதைப் போக்கலாம்" என்று 1890ல் தன் தாயாருக்கு எழுதிய கடிதத்தில் குறிப்பிட்டிருக் கிருள். கவி விட்டியரின் பிறந்தநாளை ஞாபகம் வைத்துக் கொண்டு அவருக்கு எழுதினுள் ஹெலன். "எனக்கு வந்த நூறுக்கு மேற்பட்ட கடிதங்களில் உன்னுடையது எனக்கு மிகவும் பிடித்திருந்தது" என்று கவி அவளுக்குப் பதில் எழுதினுர்.

1891லும் அதற்கடுத்த வருஷமும் டாம் என்கிற ஒரு குருட்டு ஊமைப் பையன்பற்றி ஹெலன் தன் கடிதங்களில் பலருக்கு எழுதினுள். டாமியை குருடர் பள்ளியில் சேர்த்து, தொடர்ந்து படிக்கவைக்கப் பணம் தேவையாக இருந்தது. தைரியமாக "பணம் சம்பாதிப்போம்" என்ருள் ஹெலன். அவசியமான செலவுகளை குறைத்துக் கொண்டு தானே சேமநிதி சேர்த்து அவனுக்குத் தந்தாள். பண உதவி கேட்டுத் தன் நண்பர்கள் பலருக்கும் கடிதங்கள் எழுதினுள். ஹெலனுக்குப் பிரியமான நாய் ஒன்று இறந்துவிட்டது; புது நாய் வாங்க அவளுக்குப் பண உதவி செய்யப் பலர் முன்வந்தனர். நாய் வேண்டாம்—அவர்கள் தரும் பணம் டாமியின் படிப்புக்கு உதவட்டும்

என்று பல நண்பர்களுக்கும் எழுதினுள் ஹெலன். இங்கிலாந்திலிருந்தும்கூட டாமியின் கல்விக்காகப் பணம் வந்து சேர்ந்தது. "போஸ்டன் ஹெரால்டு" என்று ஒரு பத்திரிகை மூலம் ஆயிரத்தி அறுநூறு டாலர்கள் சேர்ந்ததாக ஹெலனின் கடிதத்திலிருந்து நாம் அறிந்து கொள்கிறேம்.

"பனிராஜா" கதை வியவகாரத்தால் மனமொடிந்த சிறுமி ஹெலன் ஒரு ஏழெட்டு மாதங்கள் யாருக்குமே கடிதங்கள் எழுதவில்லை என்று தெரிகிறது. ஆனுல் 1892 மே மாதத்திலிருந்து அந்தத் துயரம் முடிவுற்று விட்டது. அவள் மீண்டும் தன் நண்பர்களுக்குக் கடிதம் எழுதத் தொடங்கிவிட்டாள். "சந்த நிகோலஸ்" எனும் பத்திரிகைக்கு அவள் எழுதிய கடிதம் அவள் எழுத்திலேயே ஜூன் 1892ல் பிரசுரமாயிற்று. கண்ணில்லாத குழந்தைகளுக்கு உபயோகப்படுவதற்காகப் பணம் கொடுக்க வெகு சிரமப்பட்டு ஒரு விருந்து நடத்தி அவள் இரண்டாயிரம் டாலர்கள் சேகரித்து பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்துக்கு அளித்தாள்.

இந்த அதிசயப் பெண்ணைப்பற்றி அந்த நாளைய பத்திரிகைகளில் பொறுப்பில்லாத பல செய்திகள் வெளிவந்தன. மேதையிலும் மேதை என்றனர் ஒரு சாரார்; அவள் அறியாதது ஒன்றும் இல்லை என்றனர் சிலர். அவள் தெய்வீக வரம் பெற்று வந்தவள் என்றுர்கள் சிலர். இதெல்லாம் புரட்டு, பொய் என்று ஒரு கட்சி. யாரோ எதையோ செய்து ஹெலன் பெயரில் விளம்பரப்படுத்தி உலகை ஏமாற்றுகிறுர்கள் என்பது ஒரு சிலருடைய வாதம். ஹெலனைப் பற்றிய வரையிலும் இரண்டு கட்சிகளுமே சாரமற்றவைதான் எனினும் பல பத்திரிகைகளுக்கும், வெளிவந்த செய்திகள் பற்றி விசாரித்து எழுதிய பல நண்பர்களுக்கும் பதில் எழுத வேண்டிய சிரமமான காரியத்தை ஹெலன் நிறைவேற்றினுள்.

1893-ல் ஹெலன் தன் தாயாருக்குத் தான் நயாகரா நீர்வீழ்ச்சியைப் போய்ப் பார்த்து அனுபவித்தது பற்றி எழுதி இருக்கிறுள். அதே வருஷக் கடைசியில் தன் ஊரில் "ஹெலன் கெல்லர் பொது வாசகசாலை" என்று ஒரு வாசகசாலை நிருவ அவள் முயற்சி செய்தாள்

"சீஸர் என்றால் சாமானியப்பட்டவனா? கொடுங்கோலன்; அவன் இடும் உத்திரவுகளை யாரும் மீறமுடியாது. ஆற்றலற்ற என்னைப்போன்ற ஒரு சிறுமி அவனை அறிந்து கொள்ள வேண்டுமானால் சிரமப்பட்டுத்தானே ஆக வேண்டும்? அவன் எழுதிய அழகிய லத்தீன் பாஷை இருக்கிறதே—அது எவ்வளவு கடினமானது!" என்று 1894-ல் எழுதிய ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறாள் ஹெலன். 1895-ல் ஒரு சந்தர்ப்பத்தில் மார்க் ட்வெய்னைத் தான் சந்தித்தது பற்றி எழுதியிருக்கிறாள்; "அழுகை வருகிற வரையில் எங்களைச் சிரிக்கப்பண்ணினார் அவர். எத்தனை கதைகளை எவ்வளவு அழகாகச் சொன்னார்" என்கிறாள். பல கடிதங்களில் பரீக்ஷைகள், பாடங்கள் முதலியன பற்றி விரிவாக எழுதியிருக்கிறாள். மேதையோ அல்லவோ அவள்—யார் சொல்லமுடியும்? ஆனால் அவளும் மற்ற மாணவ மாணவிகளைப் போலத்தான். கணக்குப் பாடம் அவளுக்கு லேசில் வரவில்லை; மிகவும் கசக்கிறது. கணக்கில் தன் முயற்சிகளையும், வெற்றி தோல்விகளையும் பற்றி அவள் பல நண்பர்களுக்கு எழுதிய கடிதங்களில் எழுதியிருக்கிறாள்.

"நானும் என் சக மாணவிகளைப்போல இருந்தால்?" என்று 1898-ல் எழுதிய கடிதம் ஒன்றில் ஏங்குகிறாள். ஆனால் அதைத் தொடர்ந்து, "அசட்டு யோசனைகளால் என்ன லாபம்? புஸ்தகங்களில் காணக்கிடக்கும் இன்பங்கள் போல வேறு எங்கே எப்படி யாருக்குத்தான் கிடைத்து விடமுடியும்? என் வாழ்வைச் சிறப்புறச் செய்ய அது ஒன்றே போதுமே!" என்று எழுதித் திருப்திப்பட்டுக் கொள்கிறாள். கண்ணில்லாதவர்களுக்கும் செவிடர்களுக்கும் வாழ்க்கையின் அழகுகளை எல்லாம் அறிவிக்கச் செய்யப்படும் முயற்சிகளைப் பாராட்டிப் பெருமையுடன், நன்றி செலுத்துகிற பாணியிலே, ஒரு நண்பருக்கு எழுதுகிறாள். "நேற்றைக்கின்று நாங்கள் முன்னேறி விட்டோம்!" என்றும், "அன்புள்ள இடத்தில் எதுதான் சாத்தியமாகாமல் போய்விடும்?" என்றும் பெருமிதத்துடன் தன் கடிதங்களில் ஹெலன் எழுதியிருக்கிறாள். தன் உபாத்தியாயர் கீத்துக்குத் தெரிந்த அளவுக்கு லத்தீன்,

கிரேக்க பாஷை இலக்கண விதிகள் சிசரோ, ஹோமர் இவர்களுக்கும் கூடத் தெரியாதே என்று ஹாஸ்யத்துடனும் கசப்புடனும் எழுதியிருக்கிறாள். காலேஜ் படிப்புப் படித்துப் பட்டம் பெறுவது என்கிற லக்ஷியத்துடன் ஹெலன் பல வருஷங்களாகவே உழைத்து வந்தாள். ஆனால் "காலேஜ் படிப்பால் என்ன லாபம்? மற்ற மாணவ மாணவிகளைப்போல நீயும் பட்டம் பெறுவதென்பது அப்படி என்ன பிரமாதமான லக்ஷியம்? உனக்கு எழுதும் திறமை இருக்கிறது. அதைப் போற்றி வளர்த்துப் பயனடையலாமே. பரீக்ஷை எழுதுவதிலும் பாடங்களைப் படித்து உருப்போடுவதிலும் ஏன் உன் சக்தியையும் காலத்தையும் விரயமாக்குகிறாய்?" என்று காலேஜ் அதிகாரி தன்னைக் கேட்டதாக அவள் ஒரு கடிதத்தில் எழுதியிருக்கிறாள். அதைத் தொடர்ந்து பின் வருமாறு சொல்லியிருக்கிறாள்: "அவள் கேட்டது நியாயம். அவள் வார்த்தைகள் இதமானவையே. ஆனாலும் என்னுடைய பலநாள் ஆசையைத் திடுதிப்பென்று தியாகம் செய்துவிட நான் தயாராக இல்லை."

ராட்கிளிப் காலேஜில் சேர்த்துக்கொள்ளச் சொல்லி அவள் செய்து கொண்டிருந்த விண்ணப்பத்துக்குப் பதில் வரத் தாமதமாயிற்று. கார்னெல், ஷிகாகோ சர்வ கலா சாலை அதிகாரிகள் அவளை வலியவந்து தங்கள் கல்லூரியில் சேர அழைத்தார்கள் என்று அவள் கடிதங்களிலிருந்து தெரிய வருகிறது. கண் காதற்றவர்களுக்கு ஒரு பெரிய புது ஸ்தாபனம் நிறுவவேண்டும் என்கிற ஒரு காரியத்திலே ஹெலனின் நண்பர்கள் 1900-ல் ஈடுபட்டிருந்தார்கள். அதுபற்றி ஹெலன் தன் நண்பர்களுடனெல்லாம் தன் கடிதங்கள் மூலம் விவாதித்திருக்கிறாள். மனித குலத்தின் அறிவிலும் வளர்ச்சியிலும் அவர்களும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டும் என்பது நியாயம்தானே? குருடர், செவிடரைத் தனியாக ஒதுக்கிவிட்டு அவர்களுக்குக் கல்வி புகட்டுவது தவறு என்றும், சாதாரண மாணவ மாணவிகளுடன் அவர்களும் படிக்க ஏற்பாடுசெய்து அதற்கு உதவி செய்வதற்கு ஒரு பெரும் ஸ்தாபனம் நிறுவவேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறார் டாக்டர்

பெல் என்று ஹெலன் தன் கடிதம் ஒன்றில் எழுதியிருக்கிருள். தன்னுடைய ஆங்கில வியாச போதகாசிரியர் கோப்லந்துக்கு ஹெலன் எழுதிய கடிதத்தில், "பிறருடைய சிந்தனையையும், அனுபவங்களையுமே நான் இதுவரை ஏற்று இருந்து விட்டேன் இனி என் சொந்த அனுபவங்களையும் சிந்தனைகளையுமே அங்கீகரித்து என் எழுத்தின் மூலம் வெளிக் கொணர முயலுவேன். அது எனக்குச் சாத்தியமாகாவிட்டால் நான் இனி எழுதவே மாட்டேன்" என்று எழுதியிருக்கிருள்.

"குருடர்களில் அநேகமாக எல்லோருமே ஏழைகள் தான். ஆனல் குருடர்களிடம் நட்புக் கொண்டுள்ள பணக்காரர்கள் பலர் இருக்கிருர்கள். அவர்கள் முன் வந்து உதவலாமே" என்று குருடர்களுக்காக ஒரு பத்திரிகை நடத்தும் யோசனை பற்றி ஒரு கடிதத்தில் அபிப்பிராயம் தெரிவித்தாள் ஹெலன். எல்லாம் அறிந்த சிறந்த விஞ்ஞானி, டெலிபோன் என்கிற ஒரு சாதனத்தை கண்டு பிடித்த டாக்டர் பெல்லுக்குக் கண்ணும் காதும் அற்ற சிறுமி ஹெலன் ஒரு உதவி செய்துவிட முடிகிறது. *1901*-ல் ஹெலன் எழுதிய ஒரு கடிதத்தில் அவள் எழுதியிருக்கிருள்: "பட்டங்களைப் பறக்கவிட்டு, அவை பறப்பதைக் கவனித்து, சிந்தித்து, எதிர்காலத்து ஆகாய விமானங்களின் உத்திகளையும் தந்திரங்களையும் அறிகிற முயற்சியில் ஈடுபட்டிருக்கிருர் டாக்டர் பெல். அவர் பறக்க விடுகிற பட்டங்களைக் கம்பிகள் கொண்டு கட்டியிருக்கிருர் என்று அறிந்தேன் நான். சில கம்பிகள் அளவு சரியாக இல்லை; பட்டம் மேலே போனதும் அந்தக் கம்பிகள் அறுந்துவிடும் என்றேன் நான். நான் சொன்னதைப் பாராட்டவில்லை அவர். ஆனல் நான் சொன்ன பட்டங்களின் கம்பிகள் அறுந்தே போய்விட்டன. இப்போது டாக்டர் பெல் என்னைக் கேட்காமல் பட்டங்களைக் கட்டுகிற கம்பிகளின் நீளத்தை கூட்டுவதோ, குறைப்பதோ இல்லை." கண்களில்லாத சிறுமி ஹெலன் கெல்லருக்கு இது பெரிய வெற்றிதான்.

ஹெலன் கெல்லரின் கடிதங்களிலிருந்து அவளுடைய இளமைப் பருவத்து வாழ்வை, அவள் ஆசைகளையும் ஏக்கங்களையும், நாம் பூரணமாக அறிய முடிகிறது.

## கல்வி முறை

ஹெலன் கெல்லருக்கு உபயோகப்பட்ட கல்வி முறையையும், அந்த முறையைப் பின்பற்றிய மிஸ் ஸல்லி வனையும் பற்றி ஹெலன் கெல்லரின் கதையைப் பதிப்பித்த மேசி என்பவர் ஆராய்ந்து விரிவாக ஒரு பகுதியில் எழுதி யிருக்கிறார். மிஸ் ஸல்லிவனுக்கும் கண்கள் சரியாக இல்லை; அவள் வாழ்க்கையில் பல வருஷங்கள் கண்களில் லாமலே இருந்தவள். தன் பிழைப்பு நடக்கவேண்டுமே என்று, கூலிக்காகத்தான், முதலில் ஹெலனுக்குக் கல்வி கற்றுத்தர மிஸ் ஸல்லிவன் ஏற்றுக்கொண்டாள். ஆனால் ஹெலனிடம் அவளுக்கு அன்பு விழுந்துவிட்டது; ஹெலனுக்கும் அவளிடம் அன்பு விழுந்துவிட்டது; ஒருவ ரில்லாமல் மற்றவரில்லை என்று ஏற்பட்டுவிட்டது.

ஹெலனுக்குக் கல்வி புகட்டுவதில் முறையாக எதை யும் செய்யவேண்டும் என்று முன் கூட்டியே திட்டமிட்டுக் கொண்டெல்லாம் தொடங்கவில்லை மிஸ் ஸல்லிவன். அவ்வப்போது எழுந்த சந்தர்ப்பங்களைப் பூரணமாகப் பயன் படுத்திக்கொண்டு அவள் தன் மாணவிக்குக் கல்வி புகட்டி னாள். மனோதத்துவ சாஸ்திரத்திலோ, அந்த சாஸ்தி ரத்தை அனுஷ்டிப்பதாகச் சொல்லும் சாஸ்திரிகளிடமோ, மிஸ் ஸல்லிவனுக்குச் சிறிதும் நம்பிக்கை கிடையாது. ஹெலன் விஷயத்தில் அவள் ஒருநொடி நேரத்தில் தீர்மா னித்து வகுத்த முறைகள் பிரமாதமான வெற்றியைத் தந்தன. ஆனால் ஹெலன் போன்ற துடியான மாணவிக்கு எந்தக் கல்வி முறையைப் பின்பற்றிப் போதித்திருந்தாலும் பலன் தந்திருக்கும் என்பது நிச்சயமே!

ஹெலன் கெல்லரின் அறிவுத்தாகத்தையும், உணர்ச்சி வேகத்தையும் அன்பு ஆழத்தையும் தெளிவாக்கக் கூடிய பல சம்பவங்களை, மிஸ் ஸல்லிவனும் பதிப்பாசிரியர் மேசியும் திரட்டி நமக்குத் தந்திருக்கிறார்கள். ஒரு நாட்டிய கோஷ்டி யைச் சித்திரிக்கும் சிற்பங்களைத் தன் கையால் தொட்டுப் பார்த்தறிந்துகொண்ட ஹெலன் "பாடகர்கள் எங்கே?" என்று விசாரித்து அந்தப் பாட்டுக் கோஷ்டியையும் தடவிப் பார்த்து அறிந்துகொள்ள முயன்றாள். "இவர்களில்

ஒருத்தி வாயை மூடிக்கொண்டிருக்கிருள்" என்ருள். கண்ணுள்ளவர்களில் யாரும் அதுவரை அந்தப் பாட்டுக் கோஷ்டியை அவ்வளவு கூர்ந்து பார்த்ததில்லை. ஒரு உருவத்தின் உதடுகள் இறுக மூடித்தானிருந்தன.

ஒருதரம் மாணவியும் உபாத்தியாயினியும் ஒரு இரும்பு உருக்கும் கூடத்துக்குள் சென்ருர்கள். "சூரியன் இங்கே வந்து விட்டதா என்ன?" என்று கேட்டாளாம் ஹெலன்.

ஷேக்ஸ்பியர் நாடகங்களில் மிகவும் தேர்ந்தவர் என்று பெயர் பெற்ற டாக்டர் பர்ணெஸ் என்பவர் ஒருதரம் ஹெலனிடம் ஷேக்ஸ்பியர் என்கிற மனிதன் பற்றி நிச்சயமாகத் தெரிந்தது மூன்றே மூன்று விஷயங்கள்தான்—அவன் பிறந்து பெயரிடப்பட்டான்; கல்யாணம் செய்துகொண்டான்; இறந்தான்—அவ்வளவுதான் என்ருர். உடனே "அவசியமானதை யெல்லாம்தான் செய்து விட்டானே" என்ருள் ஹெலன்.

ஜெப்பர்ஸன் என்கிற நடிகன் ஹெலனுடைய தலையைப் பிடித்துப் பார்த்து அதிலிருந்த முண்டுகளுக்கெல்லாம் இன்னின்ன பலன் என்று சொன்ஞர். "இந்த முண்டு உனக்குள்ள சண்டை போடும் குணத்தைக் காட்டுகிறது" என்ருர். "கஷ்டங்களைத் தவிர வேறு எதையும் நான் எதிர்த்துச் சண்டை செய்வதில்லை" என்ருள் ஹெலன்.

## இன்று வரை

ஹெலன் கெல்லரின் இந்த நூல் 1902-ம் வருஷம் வரையில் அவளுடைய வாழ்க்கை வரலாற்றைக் கூறுகிறது. அதற்குப் பிறகு அவள் வாழ்க்கைச் சம்பவங்களை இங்கு இந்த முன்னுரையில் விரிவாகச் சொல்லவேண்டிய அவசியமில்லை, கல்வியிலே வெற்றிபெறத் தொடங்கிய உடனேயே அவளுடைய பிற்கால வாழ்க்கைப் போக்கு தீர்மானமாகிவிட்டது. 1904-ம் ஆண்டிலே அவர் ராட்கிளிப் காலேஜிலிருந்து சிறப்புடன் பட்டம்பெற்று வெளியேறிஞள். அவளுடைய விடாமுயற்சியும், பிடிவாத குணமும், தன்னைப் போலப் பாதிக்கப்பட்டவர்கள் எல்லோருக்கும் உதவவேண்

டும் என்கிற பரந்த அன்பும் அருளும் ஒரு விரிந்த உலகத்தைச் சிருஷ்டித்துதந்தன. அந்த உலகத்துக்கு அவள் போட்டியற்ற ராணி. கண்ணற்றவர்கள், காதற்றவர் நன்மையை நாடி அவள் இடைவிடாது, அலுப்புசலிப்பில்லாமல் உழைத்து வந்திருக்கிருள். இந்த அரை நூற்றுண்டில் உலகத்தில் உள்ள குருடர்கள் செவிடர்கள் சார்பில் அவள் ராக்ஷஸ முயற்சிகள் செய்திருக்கிருர்கள். கண்களும் கரதும் படைத்த மக்கள் தங்களுடைய ஏழைச் சகோதரர்களை மறந்துவிடாதிருப்பதற்காக அவள் இடைவிடாமல் பிரசங்கங்கள் செய்திருக்கிருர். கட்டுரைகள எழுதியிருக்கிருள். பல தடவைகள உலகைச் சுற்றி வந்திருக்கிருள், "நடு ஆறு", "என் பிற்கால வாழ்க்கை", "ஹெலன் கெல்லரின் ஜர்னல்" முதலிய நூல்கள் "என் கதை"யைத் தொடர்ந்து சொல்லுகின்றன.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதி நாட்களிலே மார்க் ட்வெயின் என்கிற அமெரிக்க ஆசிரியன் ஹெலன் கெல்லரையும், நெபோலியனேயும் ஒப்பிட்டுத் தன் முடிவைச் சொன்ஞன்: "இந்த நூற்றுண்டில் பெரியவர்கள் என்று சொல்லக்கூடியவர்கள் இருவர்–நெப்போலியனும், ஹெலன் கெல்லரும்." மார்க் ட்வெயின் இப்படிச் சொன்னபோது ஹெலன் கெல்லருக்கு வயது இருபதாகவில்லே. அவளுடைய வாழ்நாளில் பெரும் பகுதி இப்போது இருபதாம் நூற்றுண்டிலே கழிந்திருக்கிறது. ஆரம்ப காலத்தியதைப் போன்ற போராட்டங்களே அவர் பின்னர் நடத்தவேண்டியதாகயில்லே. உலகம் அவரை அங்கீகரிக்கத் தயாராகத்தான் இருந்தது. அவள் கொண்டுதந்து அன்பு எனும் தத்துவத்துக்குச் செவிசாய்க்கத் தயாராகவே இருந்தது. ஆனுலும் இந்த இருபதாம் நூற்றுண்டிலே இரண்டு பெரிய உலக யுத்தங்கள் ஏற்பட்டு அலேமோதி ஓய்ந்துவிட்டன. ஹிட்லரும் ஸ்டாலினும் தோன்றித் தங்கள் நாடகங்களேயெல்லாம் நடித்திக் காட்டிவிட்டுப் போய்விட்டார்கள். சூரியன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யமே அஸ்தமிக்கிற நிலேமைக்கு வந்துவிட்டது. குருடர்கள் செவிடர்கள் ஊமைகள் மட்டுமல்ல—ஆசியர்களும்கூட மனிதர்கள்தான் என்கிற உணர்ச்சி பெருகி உலகில் வியர்பிக்கத் தொடங்கி

யிருக்கும்காலம் இது. இதையெல்லாம் மனத்தில் வைத்துக்கொண்டு ஒப்பிடும்போது ஹெலன் கெல்லர் என்கிற உருவத்துக்கு விசேஷமான அர்த்தம் ஒன்று இருப்பதாகத்தான் தோன்றுகிறது.

அவளுடைய அனுபவங்கள் சாதாரண மனிதனுடைய அனுபவங்களைப்போலப் பன்மடங்கானவை; ஆழத்தில் ஆயிரம் மடங்காவது இருக்கும்; விஸ்தாரத்தில் அதையும் விட அதிகமிருக்கும். அமெரிக்காவின் ஜனாதிபதிகளும், இங்கிலாந்து தேசத்து ராஜாக்களும் ராணிகளும், ஐரோப்பாவிலுள்ள பல தேசத்துத் தலைவர்களும் பெரியவர்களும் ஹெலன் கெல்லரைப் பற்றி அன்புடன் கேட்டு அறிந்து கொண்டிருக்கிறார்கள். கண்ணற்ற ஹோமர் எழுதியதுபோன்ற ஒரு காவியத்தை எழுத வில்லை அவள்; உண்மைதான். ஆனால் அது போன்ற, அதற்குச் சிறிதும் சளைக்காத ஒரு காவியத்தைத் தன் வாழ்விலே வாழ்ந்துகாட்டியிருக்கிறாள் அவள்.

இந்தியர்களாகிய நமக்கெல்லாம் ஆத்மீகமான விஷயங் களில் வெளிப்படையாக இல்லாவிட்டாலும், ரத்தத்திலே ஊறிப்போன ஒரு நம்பிக்கை உண்டு. ஆத்மீகமான வெற்றி கள்தான் வெற்றிகள், புற உலக வெற்றிகள் அழிபவை, நிலைக்காதவை என்று அறிந்தவர்கள் நாம். ஹெலன் கெல்லரின் போராட்டங்களும் வெற்றிகளும் நமக்கு எளிதில் புரிந்துவிடுகிற மாதிரித்தான் இருக்கின்றன.

உதவியற்றவர்களுக்கு உதவிதேடி அவள் செய்யும் முயற்சிகள் மனிதகுலம் இன்றோடு அழிந்து விடாது என்கிற நம்பிக்கையை நமக்கு ஊட்டுகிற ரீதியிலே அமைந் துள்ளன. மனிதர்கள் மனிதர்களாக அடுத்துவரும் தலை முறைகளில் வாழ மாட்டார்கள் என்று சிலசமயம் நமக்குள் ளாகவே ஏற்பட்டு விடுகிற பீதியைப் போக்க ஹெலன் கெல்லரின் கதையும் உருவமும் நமக்கு உதவுமென்றே நான் நினைக்கிறேன். கருணை என்கிற கொள்கையை மனிதர் களிடையே ஸ்தாபித்து, அன்பு ராஜ்யத்தை உருவாக்க இரண்டாயிரத்தைந்நூறு வருஷங்களுக்கு முன் நம்

மிடையே வந்த புத்தன் சிஷ்யையோ இவர் என்று எண்ணத் தோன்றுகிறது.

அது எப்படியானாலும் இருக்கட்டும். கருணை, அன்பு என்கிற தத்துவங்களை எந்த ரீதியில், எந்த அளவில் எப்படி ஸ்தாபிக்க விரும்பினாலும் அது இன்றைய பகைப் புலனில் மிகவும் அவசியமாகப் போற்றப்பட வேண்டிய விஷயமாகிறது. அன்பு அவசியமில்லை, வெறுப்புத்தான் வாழ்க்கையின் தேவை என்று தெரிந்தோ தெரியாமலோ விஷமூட்டும் தத்துவங்கள் இருபதாம் நூற்றாண்டிலே மனிதர்களிடையே கடைப்பிடிக்கப் படுகின்றன என்று கண்டு, எதிர்காலம் என்கிற நம்பிக்கையை இழந்துவிட்டு நடுங்குகிற மனிதர்களுக்கு ஹெலன் கெல்லரின் பேச்சும் செயல்களும் ஆர்வமும் அன்பும் கதையும் பெரிதும் உதவும் என்றே நான் நினைக்கிறேன். இன்றுள்ள உலகில் கண் இல்லாதவர்களுக்கும் காதில்லாதவர்களுக்கும், மட்டும்தானா உதவி தேவை?

தாம்பரம்
28—2—55

க. நா. சுப்ரமண்யம்

# என் கதை

## 1

ஒருவித பயத்துடன் தான் நான் என் கதையைச் சொல்லத் தொடங்குகிறேன். தங்க நிறமான மூடுபனியே யானாலும் விஷயத்தை மறைக்கிற ஒரு திரையைத் தூக்கு வதற்கு—என் இளமைப் பருவத்தை மறைக்கிற திரையைத் தூக்குவதற்கு–எனக்கு ஓர் அர்த்தமற்ற, காரணம் சொல்ல முடியாத அச்சம் ஏற்படுகிறது. சுயசரிதம் எழுதுவது என்பது சிரமமான காரியம்தான். ஆரம்பநாட்களைப் பற்றிய என் ஞாபகங்களை ஒழுங்குபடுத்த நான் முயலும்போது, உண்மையும் கற்பனையும் இரண்டறக் கலந்து நிற்கின்றன— நேற்று என்பதை இன்றுடன் பிணைக்கும் வருஷச் சங்கிலியின்கரணைகளில் உண்மையும் கற்பனையும் சரிசமமாக கலந்து முறுக்கப்பட்டிருக்கின்றன. வளர்ந்து பெரியவளாகி விட்டவள் தன் குழந்தைப் பருவத்து நினைப்புக்களைத் தன் மனதுக்குகந்தவாறு தீட்டுகிறாள். என் வாழ்க்கையின் ஆரம்பநாட்களைப் பற்றிய சில நினைவுகள் அழுத்தமாக நிலைத்து நிற்கின்றன. ஆனால் மற்றப் பகுதிகளிலெல்லாம் "வாழ்க்கையெனும் சிறைக்கூடச் சுவர்களின்நிழல்கள் தான் படர்ந்திருக்கின்றன. தவிரவும் என் குழந்தைப் பருவத்து நினைவுகள் பலவற்றின் துயரமும் இன்பமும் ஒருங்கே மறைந்துவிட்டன. அவற்றின் வேகம், கூர்மை மழுங்கி விட்டது. பிற்காலத்திய முக்கிய சம்பவங்கள் பலவற்றினால் ஆரம்பகாலத்திய நிகழ்ச்சிகள் பல மறைந்து மங்கிவிட்டன.

ஆகவே, வாசிப்பவர்களுக்கு சிரமம் அதிகமில்லாதிருப்பதற்காக, அதிமுக்கியம், அவசியம் என்று எனக்குத் தோன்றிய சிற்சில சம்பவங்களையும் சந்தர்ப்பங்களையும் மட்டுமே நான் இங்கு, விவரிக்க முயலுகிறேன்.

வட அலபாமா மாகாணத்தைச் சேர்ந்த டஸ்கும்பியா என்ற சிறிய நகரில் ஜூன் 27, 1880-ல் நான் பிறந்தேன்.

என் தகப்பனாரின் மூதாதையான காஸ்பார் கெல்லர் என்பவர் ஸ்விட்ஜர்லாந்திலிருந்து வந்து அமெரிக்காவில் மேரிலாந்து பகுதியில் குடியேறியவர். ஸ்விட்ஜர்லாந்தில் அவருடைய மூதாதைகளில் ஒருவர் ஜூரிக் நகரில் செவிடர்களுக்குக் கல்வி புகட்டுபவராக இருந்தார் என்பது ஆச்சரியப்படவேண்டிய விஷயமே. அவர் செவிடர்களுக்குக் கல்வி கற்பிப்பது சம்பந்தமாக ஆராய்ச்சிநடத்தி அதுபற்றி ஒரு புஸ்தகமே எழுதியிருக்கிறார். ஆயினும் அதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை என்றும் சொல்லலாம். எல்லா அரசர்களுக்குமே மூதாதையர்களில் ஒருவனாவது அடிமையாக இருந்திருப்பான்; எல்லா அடிமைகளுக்குமே மூதாதையர்களில் ஒருவனாவது அரசனாக இருந்திருப்பான்.

காஸ்பார் கெல்லரின் மகன்—என் பாட்டனார்—அலபாமா பிரதேசத்தில் விஸ்தாரமான பூமியை வளப்படுத்தி நாளடைவில் அதைத் தனதாக்கிக் கொண்டார். டஸ்கும்பியாவிலிருந்து பிலடெல்பியா நகருக்கு அவர் வருஷத்துக்கு ஒருமுறை சாமான்கள் வாங்கச் செல்வது வழக்கம் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். குதிரை மேல் செல்வாராம். அந்தப் பிரயாணங்களை அழகாக, தத்ரூபமாகச் சித்தரித்து அவர் எழுதிய பல கடிதங்கள் என் தந்தையிடம் இருந்தன.

என் பாட்டி கெல்லர், அலெக்ஸாண்டர்மூர் என்பவரின் மகள். (மூர் என்பவர் ல பேயத்தின் சகா). என் பாட்டியி

னுடைய தாத்தா வர்ஜினியாவின் அரசப் பிரதிநிதியாக அடிநாட்களில் சேவை செய்த அலெக்ஸாண்டர் ஸ்பாட்வுட் என்பவர். ராபர்ட் இ. லீ என்பவருக்கும் உறவினள் என் பாட்டி.

என் தகப்பனுர் பெயர் ஆர்தர் எச். கெல்லர். அவர் ஐக்ய சேனையில் ஒரு தளபதி. என் தாயார், கேட் ஆடம்ஸ், அவருடைய இரண்டாவது மனைவி. வயசில் அவருக்கு மிகவும் இளையவள். என் தாயாருக்குத் தாத்தா மஸாசுஸெட்ஸைச் சேர்ந்தவர்; பெயர் பெஞ்சமின் ஆடம்ஸ். அவர் மனைவியின் பெயர் ஸூஸன்னு குட்ஹ்யூ. அவர்களுடைய மகன் சார்லஸ் ஆடம்ஸ் என்பவர். மஸாசுஸெட்ஸிலிருந்து அவர் ஆர்கன்ஸாஸூக்கு (ஹெலனு என்கிற நகருக்கு) குடியேறினர். உள்நாட்டு யுத்தம் தொடங்கியபோது, அவர் தென்பகுதியுடன் சேர்ந்து சண்டைபோட்டார்; சேனையில் பிரிகேடியர் ஜனரல் பதவி வரை எட்டினர். லூஸி ஹெலன் எவரெட் என்கிற மாதைக் கல்யாணம் செய்துகொண்டார். எவரெட் குடும்பம் பிரசித்தி பெற்ற குடும்பம். எட்வர்டு எவரெட், டாக்டர் எட்வர்டு எவரெட் ஹேல் முதலியோர் அந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள். யுத்தம் ஓய்ந்தபிறகு, அந்தக் குடும்பம் மெம்பிஸிக்கு (டென்னஸி) நகர்ந்தது.

என் கண்ணையும் காதையும் ஒருங்கே பறித்த வியாதியால் நான் பீடிக்கப்படும்வரை நாங்கள் ஒரு சிறிய வீட்டில் வசித்து வந்தோம். அதில் ஒரு பெரிய கூடம் இருந்தது. ஒரு சிறிய அறையும் இருந்தது. இந்தச் சிறிய அறையில் தான் வேலைக்காரர்கள் படுத்து உறங்கினர்கள். தெற்கு மாகாணங்களில் சமயத்துக்கு உபயோகப்படட்டும் என்று வீட்டுக்கருகிலே ஒரு சிறிய வீடும் அமைத்துக்கொள்வது வழக்கம். உள்நாட்டு யுத்தம் முடிந்ததும் என் தகப்பனுர்

எங்கள் பண்ணையிலே இந்த மாதிரிச் சிறியவீடு ஒன்று கட்டினார். கல்யாணம் செய்துகொண்டதும் என் தாயாரும் அவரும் இந்தச் சிறிய வீட்டிலே போய் வசிக்கத் தொடங்கினார்கள். அந்த வீட்டிலே திராக்ஷைக் கொடிகளும், கொடி ரோஜாக்களும், காலேமந்தாரைக் கொடிகளும் படர்ந்து அடர்ந்திருந்தன. தோட்டத்திலிருந்து பார்த்தால், லதாக்ருஹம் மாதிரியே யிருக்கும். வாசல் வழியை மஞ்சள் ரோஜாக் கொடியும், தெற்கு பிரதேசங்களுக்கே உரிய ஸ்மிலாக்ஸ் கொடியும் படுதாப்போட்டு மறைத்தன. பாடும் பறவைகளும், தேனீக்களும் அங்கு இஷ்டப்படி பறந்து திரிந்தன.

குடும்பம் பூராவும் வசித்துவந்த கெல்லர் வீடு எங்கள் லதாக்கிருஹத்திலிருந்து அதிக தூரம் இல்லை. வீட்டுக்கே ஐவி பச்சை என்று பெயர். ஏனென்றால் வீடு, மரங்கள், வேலிகள் எல்லாவற்றிலுமே பச்சைப்பசேல் என்று ஐவிக் கொடி படர்ந்திருந்தது. பழைய பாணியில் அமைந்திருந்த அதனுடைய விஸ்தாரமான தோட்டம்தான் என் இளமைப் பருவத்தின் ஸ்வர்க்க பூமி.

என் உபாத்தியாயினி வந்து சேரும் முன் நான் கையால் தொட்டும் மூக்கால் முகர்ந்தும் முதலில் பூக்கிற ஊதாப் பூக்களையும் லில்லிகளையும் "கண்டு" கொண்டு விடுவேன். கோபம்வந்தால் ஆறுவதற்கு நான் முகத்தைக் குளுமையான அந்த வேலிகளிலும் புல் பூண்டுகளிலும் புதைத்துக்கொண்டு எத்தனையோ நாட்கள் படுத்துக் கிடந்திருப்பேன். பூக்கள் நிறைந்த அந்தத் தோட்டத்திலே இடம் தெரியாமல் உலாத்துவதிலேதான் — அடாடா! என்ன இன்பம்! கண் தெரியாது, எங்கிருக்கிறேம் என்று தெரியாது. ஆனால் திராக்ஷைக் கொடியையும் ரோஜாக் கொடியையும் தொட்டுப்பார்த்தே நான் கண்டுகொள்வேன்—

இது தோட்டத்தின் மூலையில் இடிந்து விழுந்துகொண் டிருக்கும் கோடைக் குடிலின் மேல் படர்ந்துள்ள கொடி என்று அறிந்துகொள்வேன். பக்கத்தில் ஓடும் கிளீமாடிஸ் கொடி! தவழும் மல்லிகை! பட்டுப்பூச்சி அல்லிகள்! ஆனால் எல்லாவற்றையும்விட அழகானவை அந்த ரோஜாக்கள் தான். தென்பிராந்தியத்தில் அந்த வீட்டிலிருந்த அந்த ரோஜாக்களைப் போல வேறு ரோஜாக்களை நான் வடக்கே எங்கேயும் கண்டதில்லை. தோரணம் தோரணமாகக் கொடிகள் தொங்கிக் கொண்டிருக்கும். காற்றிலே அவற்றின் நறுமணம் கலந்து நிறைந்து வீசும். அந்த மணம் மண் கலக்காத மணம்! காலை வேளையிலே, பனியிலே மூழ்கி எழுந்த அந்த மலர்கள் என் கைக்கு எவ்வளவு மிருதுவாகவும், எவ்வளவு பரிசுத்தமாகவும் இருந்தன! கடவுளின் தோட்டத்திலே உண்டு என்கிறார்களே — ஆஸ் படெல் என்கிற மலர்கள், அவை இப்படித்தான் இருக்குமோ?

என் வாழ்க்கையின் ஆரம்பம் எளியதாகத்தான் இருந் தது; எந்தச் சின்ன வாழ்க்கையின் ஆரம்பத்தையும் போலத்தான் இருந்தது. குடும்பத்திலே முதல் குழந்தை வரும், பார்க்கும், வெற்றிபெறும். என் கதையும் அதுவே தான். எனக்கு என்ன பெயர் வைப்பது என்பது பற்றி விவாதம் நடக்கத்தான் நடந்தது. குடும்பத்தில் முதல் குழந்தைக்கு நல்ல பெயர் அமையவேண்டும் என்பதுபற்றி யாருக்கும் சந்தேகமேயில்லை. மில்டிரெட் காம்பெல் என்கிற பெயரைச் சொன்னார் அப்பா. அதற்குப் பிறகு அவர் விவாதத்தில் கலந்துகொள்ளவில்லை. அது என் முன் னோர்களில் மதிப்புக்குரிய ஒருவரின் பெயராம். என் தாயாருக்குத் தன் தாயாரின் பெயரையே எனக்குச் சூட்ட வேண்டும் என்று ஆசை. அவள் பெயர் ஹெலன் எவரெட்,

ஆனல் ஆலயத்துக்கு என்னை எடுத்துப்போகிற உத்ஸாகத்திலே எனக்குத் தீர்மானித்த பெயரை தகப்பனர் மறந்துவிட்டார். அதுவும் அவர் சம்பந்தப் பட்டுக் கொள்ளாத தீர்மானம்! பெயர் கேட்டபோது பாட்டியின். பெயர் என்பதற்குமேல் எதுவும் அப்பாவுக்கு ஞாபகமில்லை ஹெலன் ஆடம்ஸ் என்று சொல்லிவிட்டார்.

ஆதி நாட்களிலிருந்தே நான் அழுத்தமுள்ளவளாகவும், பிடிவாதக்காரியாகவும், குறுகுறுப்புள்ளவளாகவும் இருந்தேன் என்று சொல்லுகிறார்கள். யார் எது செய்தாலும் அதைப்போலவே நானும் செய்வேனும்! பிடிவாதம் பிடித்துச் செய்வேனும்! பிறந்த ஆருவது மாசத்திலேயே "How d'ye" (சௌக்கியமாக) என்று கேட்க ஆரம்பித்து விட்டேனும். ஒரு நாள் "டீ! டீ! டீ!" என்று ஸ்பஷ்டமாகக் கூச்சல் போட்டு எல்லோருடைய கவனத்தையும் கவர்ந்து விட்டேனும். எனக்கு வியாதி வந்தபிறகும்கூட பழைய வார்த்தைகளில் ஒன்று எனக்கு நன்ருக ஞாபகம் இருந்தது. "தண்ணீர்" (water) என்கிற வார்த்தை. பேசச் சக்தியற்றுப் போய்விட்ட பிறகும்கூட அந்த வார்த்தையை எண்ணி எதையோ உச்சரிப்பதை நான் நிறுத்தவில்லை. எழுத்துக் கூட்ட வருகிறவரையில் "வா . . வா" (Water என்பதற்கு) என்று சொல்வதை நான் நிறுத்தவில்லை. எனக்கு ஒரு வயசு பூர்த்தியானபோது நான் நடக்கத் தொடங்கிவிட்டேன் என்று சொல்கிருர்கள். குளிப்பாட்டிவிட்டு என்னைத்தன் மடியில் வைத்துக்கொண்டிருந்தாளாம் என் தாயார். தரையிலே சூரிய ஒளியில் குறுக்கிட்ட இலைகள் நாட்டியமாடிக்கொண்டிருந்ததைக் கண்டு அவற்றைக் கையில் பிடிக்க ஆரவாரம் செய்துகொண்டே நான் அம்மாவின் மடியைவிட்டு எழுந்து ஓடினேனும். ஆனல் அந்த வேகம் நீடிக்கவில்லை. கீழே

தடுக்கி விழுந்து அம்மாவை எடுத்துக்கொள்ளச் சொல்லி அழத் தொடங்கிவிட்டேனும்.

இன்பமயமான அந்தப் பருவம் நீடிக்கவில்லை. ஒரு குறுகிய வஸந்தம். அதிலே பக்ஷிகளின் மயக்கும் குரல்கள் நிறைந்திருந்தன. அதைத் தொடர்ந்து ஒரு கோடை. அதில் பழங்கள் கனிந்து குலுங்கின; ரோஜாக்கள் மலர்ந்து மணம் வீசின. தங்கமும் ரத்தச் சிவப்பும் நிறைந்த ஒரு இலையுதிர் காலமும் சென்றது. வாழத் துடித்துக்கொண்டு இன்பமயமான வாழ்வு வாழ்ந்த ஒரு குழந்தையின் பூரண மான நாட்கள் இவைதான். அடுத்துவந்த துயரம் நிறைந்த பிப்ரவரி மாதத்தில் எனக்கு நோய் கண்டது. படுத்து விட்டேன். என் கண்களை மூடிக்காதுகளையும் அடைத்து விட்ட நோய் அது. புதுசாகப் பிறந்த குழந்தைபோல அந்த நோயின்போது எனக்குப் பிரக்ஞையே அற்று விட்டது. வயிற்றிலும் மூளையிலும் அடைப்பு ஏற்பட்டு விட்டது என்றார்கள். நான் பிழைக்கவேமாட்டேன் என்று தான் டாக்டர் நினைத்தாராம். ஒரு நாள் அதிகாலையில், வந்த மாதிரியே அவசரமாகக் காரணமில்லாமலே, ஜுரம் திடீரென்று நின்றுவிட்டது. அன்று என் குடும்பத்தார் சந்தோஷப்பட்டார்கள். ஆனால் அவர்களில் யாருக்கும், ஏன், அந்த டாக்டருக்கும்கூட தெரியாது, எனக்கு இனிக் கண் திறக்காது என்றோ, காது இனிக் கேளாது என்றோ அவர்களில் யாரும் நினைக்கவேயில்லை.

அந்த ஜுரத்தையும் நோயையும் பற்றிய என் நினை வுகள் குழப்பமாகவேதான் இருக்கின்றன. என் தாயின் பரிவுதான் எனக்கு ஞாபகம் இருக்கிறது. என்முக்கலுக்கும் முனகலுக்கும், வலிக்கும் ஜுரத்துக்கும் ஆறுதல் அளிக் கிற வகையிலே காத்துக் கண்காணித்து செய்வன செய் தவள் என் அம்மாதான். அரைத் தூக்கத்திலிருந்து

விழித்துக்கொள்வேன்; ஒளியை நாடித் தவம் கிடப்பது போக, ஒளி கண்ணை உறுத்தியது என்று திரும்பிப் படுப்பேன்; சிறிது சிறிதாகப் பார்வை மங்கியது என்று நினைவுக்கு வருகிறது. ஏதோ உருத்தெரியாத பயங்கரமான சொப்பனம்போலத் தோன்றுகிறதே தவிர, இனம் தெரிந்து கொள்ளும்படியாக நினைவுகள் எதுவும் இல்லை இப்போது எனக்கு அந்த ஜுரம்பற்றி என்றுதான்சொல்லவேண்டும். அந்த மௌனமும் இருட்டும் நாளடைவில் எனக்குப் பழகி விட்டன. நாளடைவில் இதற்கு மாறுபட்ட ஒருநிலைமையும் இருந்தது என்பதே எனக்கு ஞாபகம் வருவதில்லை. என் உள்ளத்துக்கு விடுதலை தரவந்த அவள்—என் உபாத்தியாயினி—வரும் வரையில் வேறு ஒளியும் சப்தமும் நிறைந்த உலகம் எனக்குத் தெரியவே தெரியாது என்று சொல்லலாம். ஆனால் என் வாழ்க்கையில் முதல் பத்தொன்பது மாசங்களில் நான் பசும்புல் தரைகளையும், அகன்று விரிந்த வயல்களையும், தளிர்நிறைந்த வானத்தையும், மரங்களையும், வண்ணப் பூக்களையும் கண்டு களித்திருந்தேன். அந்த ஞாபகத்தை முழுவதும் என்னைச் சூழ்ந்த இருட்டு அழித்து விடவில்லை என்றே சொல்லவேண்டும். ஒரு தரம் கண் கொண்டு பார்த்துவிட்டால் போதாதா? "உலகமே நம்முடையதுதான் உலகில் நாம் கண்டதெல்லாம் அழியாத நிரந்தரமான காட்சிகள்! சந்தேகம் என்ன?

## 2

நான் நோய்வாய்ப்பட்டு எழுந்த பிறகு சில மாதங்களில் நடந்தது என்ன என்பது எதுவும் எனக்கு ஞாபகம் இல்லை. அம்மாவின் மடியிலேயே உட்கார்ந்திருப்பேன், அல்லது அவளுடைய ஆடையின் தலைப்பை பிடித்துக் கொண்டு, அவள் வேலை செய்யும்போதெல்லாம் அவளுடன்

நடமாடுவேன். எதிர்ப்பட்டதை எல்லாம் கையால் தடவித் தடவிப் பார்ப்பேன்; அசைவது எல்லாவற்றையும் கவனிப்பேன். இப்படியே பல விஷயங்களைப் "பார்க்க" அறிந்துகொண்டேன் நான். பிறருக்கு எதுவும் தெரிவிக்க வேண்டிய அவசியம் ஏற்படாமலா இருக்கும்? சைகைகள் காட்டத் தொடங்கினேன். தலையை ஆட்டினால் "இல்லை" என்றும், மேலும் கீழும் ஆட்டினால் "ஆமாம்" என்றும், தொட்டிழுத்தால் "வா" என்றும், பிடித்துத் தள்ளினால் "போ" என்றும் அர்த்தம். எனக்கு ரொட்டி வேண்டியதாக இருந்தால், ரொட்டிகளைத் துண்டு போட்டு அதில் வெண்ணை தடவுகிற காரியத்தைச் செய்து காட்டுவேன். ஐஸ் க்ரீம் வேண்டுமென்றால், ஐஸ் க்ரீம் செய்வதற்குக் கடைவதுபோல கைகளால் கடைந்து காட்டி, குளிரால் நடுக்குவதுபோல நடுக்கிக் காட்டுவேன். தவிரவும் பல விஷயங்களை என் தாயார் எனக்குப் புரியும்படியாக அறிவுறுத்தினாள். அம்மாவுக்கு எது வேண்டும் என்று கேட்டாலும் அதைப் புரிந்துகொண்டு, கொண்டுவந்து தருவேன். அவள் எங்கே போகவேண்டும் என்று சொல்கிறாள் என்று புரிந்துகொண்டு, போவேன். அந்த நீண்ட இரவிலே பளிச்சிடுகிறதும், ஒளி நிறைந்ததுமான பல விஷயங்கள் என் தாயாரால் எனக்குக் கிடைத்தவை தான்.

சுற்றி நடப்பதில் பல விஷயங்கள் எனக்குத் தெரிந்தன. ஐந்து வயதாகும்போது சலவை செய்து வந்திருந்த துணிகளை எடுத்து மடித்துவைக்கக் கற்றுக் கொண்டேன். அம்மாவோ, அத்தையோ அணிந்து கொண்டிருக்கும் ஆடைகளிலிருந்தே அவர்களில் யார் வெளியே போகிறார்கள் என்று அறிந்துகொண்டு விடுவேன். அவர்களுடன் நானும் வெளியே கிளம்பத் தயாராகி

விடுவேன். யாராவது விருந்தாளிகள் வந்தால், என் பெற்ரேர் என்னைக் கூப்பிடாமல் இருக்கமாட்டார்கள். அவர்கள் போகும்போது கைகளை ஆட்டி விடை கொடுத்து அனுப்புவேன். ஒரு நாள் என் தாயாரைப் பார்க்கச் சில கனவான்கள் வந்தார்கள் ; வெளிக் கதவு திறந்து மூடும் சப்தம் கேட்டதும் எனக்குத் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. யாரும் என்னைத் தடுத்து நிறுத்துமுன், மாடியில் என் அறைக்கு ஓடினேன். ஜோராக ஆடை உடுத்துகிற உத்தேசத்துடன் நான் மற்றவர்கள் நிற்பது போல நிலைக்கண்ணாடி முன் நின்று, தலையில் எண்ணை தடவி வாரி விட்டேன். முகத்தில் பவுடரை எடுத்துப் பூசிக்கொண்டேன். தலைக்கு ஒரு போர்வையை எடுத்துப் போர்த்திக் கொண்டேன். அந்த போர்வையின் மடிப்புகள் தோள்பட்டையில் வந்துவிழுந்தன. இடுப்பிலே பெரியபாவாடையைப் புரளப்புரளக் கட்டிக்கொண்டு, கீழே வந்திருந்த விருந்தாளிகளைச் சந்திக்கப் போனேன்.

மற்றவர்களிடமிருந்து நான் வித்தியாசப்பட்டிருந்தேன் என்பதை எப்போது நான் புரிந்துகொண்டேன் என்பது எனக்கு ஞாபகம் இல்லை. என் உபாத்தியாயினி வந்து சேருமுன் நான் அறிந்துகொண்டு விட்டேன் என்றுதான் சொல்லவேண்டும். என் தாயாரும் நண்பர்களும் ஏதாவது காரியம் ஆகவேண்டுமானல் என்னைப் போல சைகைகள் காட்டுவது கிடையாது; வாயால் பேசினர்கள் என்பதை நான் கவனியாமல் இல்லை. சிலசமயம் யாராவது இரண்டு பேர் பேசிக் கொண்டிருக்கும்போது நான் அவர்களுடைய உதடுகளில் கை வைத்துக் கவனிப்பேன். எனக்குப் புரியாது ; கோபம் வரும். நான் என் உதடுகளை அசைப்பேன் ; கைகால்களையும் ஆட்டுவேன் ; பலன் இராது. சிலசமயம் கையையும் காலையும் உதைத்துக்

கொண்டு ஆத்திரத்தில் விழுந்து புரளுவேன். சலிக்கும் வரையில் ஆர்ப்பாட்டம் செய்வேன்.

நான் இப்படிச் சில சமயம் பிடிவாதமாகவும், அசட்டுத் தனமாகவும் நடந்துகொண்டது என் தாதி எல்லாவுக்கு மிகவும் வருத்தத்தைத் தந்தது என்பது எனக்கும் தெரிந்தது. கோபமும் ஆத்திரமும் தீர்ந்தபின் எனக்கும் வருத்தமாகத்தான் இருக்கும். ஆனால் மறுபடியும் எனக்குக் கோபம் வராமல் இராது. மூர்க்கத்தனமும், பிடிவாத குணமும் மீண்டும் மீண்டும் என்னை வந்து பிடித்தன. எனக்கு வேண்டியது ஏதாவது கிடைக்காது போய்விட்டால் எனக்குக் கோபமும் ஆத்திரமும் அளவுக்கு மீறியே வந்துவிடும். பல்லைக் கடித்துக்கொண்டு விழுந்து உதைத்துக்கொண்டு ஒரே அமர்க்களம் செய்து விடுவேன்.

நீக்ரோ சமையற்காரியின் பெண்—அவள் பெயர் மார்த்தா வாஷிங்டன்; பெல் என்கிற ஒரு கிழட்டு நாய்; இரண்டு பேரும்தான் அந்த நாட்களில் எனக்கு நண்பர்கள். அவர்களிருவரும்தான் சதா என்னுடன் இருப்பார்கள். என்னுடைய சைகைகளை மார்த்தா வாஷிங்டன் நன்கு புரிந்துகொள்வாள்; என்னிஷ்டப்படி யெல்லாம் அவளை ஆட்டிவைப்பதில் எனக்குப் பரம திருப்தி. அவளும் ஆக்ஷேபம் சொல்லமாட்டாள். சொன்னபடி கேட்டுவிட்டால் நான் அவளைக் கடித்துக் தொந்தரவு செய்யமாட்டேன் என்பது அவளுக்கு நன்கு தெரியும். நான் பலசாலி; எப்போதும் சுருசுருப்பாக இருப்பேன்; எது செய்தாலும் அதன் பலாபலன்களைப் பற்றி எனக்குக் கவலை என்பதே சிறிதும் கிடையாது. என் இஷ்டப்படித்தான் யாரும் நடக்கவேண்டும். இதில் எனக்குத் தயக்கம் என்பது சிறிதும் கிடையாது. பல்லாலும் நகத்தாலும் கடித்துக் கீறி என் இஷ்டப்படி

தான் பிறர் நடக்க வேண்டும் என்று வற்புறுத்தி விடுவேன். நானும் மார்த்தா வாஷிங்டனும் சமையல் அறையில் வெகுநேரம் இருப்போம். அங்கு நடக்கும் காரியங்களில் நாங்களும் பங்கு எடுத்துக்கொள்வோம். மாவுஉருண்டைகள் உருட்டுவோம்; ஐஸ்க்ரீம் செய்ய உதவுவோம்; காபி அரைத்துக் கொடுப்போம்; கோழிகளுக்கும் வான்கோழிகளுக்கும் உணவளிப்போம். அந்தக் கோழிகளும் வான்கோழிகளும் எங்களைக் கண்டு பயப்படாது; என் கையிலிருந்து உணவு எடுத்து அருந்தும். நான் அவற்றைப் பிடித்துத் தடவிக் கொடுப்பேன். ஒரு நாள் ஒரு பெரிய வான்கோழி என் கையிலிருந்த ஒரு டொமாடோவை லபக்கென்று கவ்விக்கொண்டு ஓடிப்போய் விட்டது. அந்த வான்கோழியின் உதாரணம் காரணமாகத்தானோ என்னவோ; நானும், மார்த்தா வாஷிங்டனும் சமையற்காரி புதுசாகத் தயார் செய்திருந்த கேக்கைத் திருடிக்கொண்டு போய், மரப்பரணில் உட்கார்ந்து தின்று தீர்த்து விட்டோம். அதைத் தின்ற காரணமாக எனக்கு வயிற்றை வலித்தது. திருட்டு வான்கோழிக்கும் வயிற்றை வலித்ததோ என்னவோ; எனக்குத் தெரியாது.

கினிக்கோழி தன்னுடைய முட்டைகளை கண்ணுக்குத் தெரியாத இடங்களில் இட்டு ஒளித்து வைக்கும். நீண்ட புல்லிலே மறைவிடங்களிலே இந்தக் கோழியின் முட்டைகளைத் தேடுவதிலே நான் நேரம் போக்குவேன். மார்த்தா வாஷிங்டனிடம் முட்டை தேடப் போகலாமா என்று கேட்க எனக்கு வாய் கிடையாது. ஆனால் என் கையை மடக்கி வட்டமாக பூமிமேல் வைப்பேன். மார்த்தாவுக்குப் புரிந்து விடும். அதிர்ஷ்டவசமாக ஏதாவது முட்டைகள் எங்கள் கையில் அகப்பட்டுவிட்டால், அவளை அந்த முட்டைகளை எடுத்துவர நான் அனுமதிக்கவே மாட்டேன். அவள் கால்

தடுக்கி விழுந்து முட்டைகளை உடைத்து விட்டாளானால் என்ன பண்ணுவது என்று எனக்குப் பயம்! நான்தான் எடுத்துப் போவேன்.

தானியம் சேகரித்து வைத்திருக்கும் கொட்டகைகள், குதிரைகள் கட்டியிருக்கும் லாயம், மாலையிலும் காலையிலும் பால் கறக்கப் பசுக்கள் கட்டும் முற்றம், இங்கெல்லாம் நின்று பொழுது போக்குவது என்கிறகாரியங்கள் மார்த்தாவுக்கும் எனக்கும் அலுக்கவே அலுக்காது. எங்கள் கவனத்தைக்கவர அங்கு எண்ணற்ற விஷயங்கள் இருந்தன. பால் கறப்பவர்கள் பசுக்களின்மேல் என் கைகளை வைத்துக்கொள்ள அனுமதி தருவார்கள். சில சமயம் மாடு என்னை உதைக்கும் அல்லது வாலால் விசிறும்.

கிறிஸ்துமஸ் பண்டிகைக்குத் தயார் செய்கிற நாட்கள் எனக்கு எப்போதுமே இன்பம் தரும். அதெல்லாம் என்ன, எதற்காக என்றுகூட எனக்குச் சரிவரத் தெரியாது. ஆனால் வீட்டிலே மனத்தை மயக்கும் வாசனைகள் பரிமளித்திருக்கும். சதா தின்பதற்குச் சிற்றுண்டிகள் ஏதாவது கிடைத்துக்கொண்டேயிருக்கும். தின்பதற்கு எதுவும் தராவிட்டால் நானும் மார்த்தாவும் ஏதாவது அமர்க்களம் செய்து விடமாட்டோமா? எல்லோருடைய வழிகளிலும் விழுந்து அவர்களுடைய கால்களை நாங்கள் தடுக்கிவிட்டுக் கொண்டுதான் இருந்தோம். அதனாலெல்லாம் எங்கள் ஆனந்தம் குறைவதில்லை. சிலசமயம் பெரியவர்களுக்கு உதவியும் செய்வோம் நாங்கள். மசாலா அரைத்துத் தருவோம்; அல்லது திராக்ஷைகள் பொறுக்கித் தருவோம். சிலசமயம் திண்பண்டங்களைக் கிளற உபயோகித்த ஸ்பூன்களை எங்களிடம் தருவார்கள்—நக்கி நக்கி

அவற்றைச் சுத்தம் செய்து இன்புறுவோம். மற்றவர்கள் கட்டித் தொங்க விடுகிருர்களே என்பதற்காக, கிறிஸ்து வின்போது நானும் என் ஸ்டாகிங்ஸைக் கட்டித் தொங்க விடுவேன். ஆனல் என்ன வெகுமதிகள் கிடைக்கும் என்பது பற்றி எனக்கு அதிகத் துடிப்போ ஆர்வமோ இருந்ததாக ஞாபகம் இல்லை. அதற்காக அதிகாலையிலேயே எழுந்த தாகவும் எனக்கு நினைப்பில்லை.

என்னைப்போலவே மார்த்தா வாஷிங்டனும் விஷமக் காரிதான். வெப்பமான ஒரு ஜூலையில் மாலைவேளையில் இரண்டு குழந்தைகள் வராந்தாப் படிகளில் காலைத் தொங்கவிட்டுக்கொண்டு உட்கார்ந்திருந்தன. ஒரு குழந்தை கருங்காலி போலக் கருப்பு. அந்தக் குழந்தையின் தலைமயிர் முடிச்சு முடிச்சாக, சுருள்வதற்காக பூட்ஸ் கயிறு களால் திட்டுத் திட்டாகக் கட்டி விடப்பட்டிருந்தது. இன்னெரு குழந்தை வெள்ளைக் குழந்தை. தங்கநிறமான அதனுடைய தலைமயிர் நீளமாகத் தொங்கியது. ஒரு குழந்தைக்கு வயது ஆறு. மற்றதற்கு வயது ஒன்றிரண்டு அதிகம் இருக்கும். சின்னது குருடு—நான்தான். மற்றவள் மார்த்தா வாஷிங்டன். கத்திரிக்கோலை வைத்துக்கொண்டு நாங்கள் இருவரும் காகிதப் பொம்மைகள் கத்திரித்துக் கொண்டிருந்தோம். ஆனல் இந்த விளையாட்டு சீக்கிரமே அலுத்துவிட்டது. எங்கள் கத்திரிக்கோலால் எதிரில் இருந்த செடி கொடிகள் எல்லாவற்றையும் கத்திரித் தோம். பிறகு மார்த்தாவின் தலைமயிர் முடிச்சுகளை நான் கத்திரித்தேன். முதலில் அவள் ஆக்ஷேபித்தாள், பிறகு சம்மதித்தாள். பிறகு என் தலைமயிரை அவள் கத்திரிக்கத் தொடங்கினள். அதிகம் கத்திரிக்குமுன் என் அம்மா குறுக்கிட்டு என் நீண்ட தலைமயிரைக் காப்பாற்றி விட்டாள்.

என்னுடைய இன்னொரு விளையாட்டுத் தோழியான பெல் என்கிற நாய்க்குக் கிழடு தட்டிவிட்டது. ஓடியாடி என்னுடன் விளையாடுவதைவிட அதற்கு அடுப்பங்கரையில் சோம்பலாகப் படுத்திருப்பதுதான் பிடித்த விஷயம் என்னுடைய சைகை பாஷையை அதற்குக் கற்றுக் கொடுக்க நான் செய்த முயற்சிகள் சிறிதும் பலன் அளிக்க வில்லை. பெல் என் கைகளைக் கவனிப்பதேயில்லை. சில சமயம் நான் அதற்கு ஏதாவது சொல்லித்தர முயலும் போது அது உடம்பைச் சிலிர்க்கும், சோம்பல் முறிக்கும்; வேட்டைக்குத் தயாராகும் வேட்டைநாய் போல நிமிரும். ஏன் இப்படிச் செய்தது அது என்று எனக்குத் தெரியாது. ஆனால் நான் சொல்வதை அது கவனிப்பதில்லை என்பது பற்றி எனக்குக் கோபம் வரும். அதைப் போட்டு அடித்து விடுவேன். அப்போதும்கூட பெல் தன் சோம்பேறித் தனத்தை விட்டுவிடாமல், இரண்டொருதரம் அலக்ஷிய மாகக் குரைத்துவிட்டு, எதிர்ப்பக்கம்போய் மீண்டும்படுத்து விடும். எனக்கும் அலுத்துவிடும். அதிருப்தியுடன் விளை யாடுவதற்கு மார்த்தாவைத் தேடிப் போய்விடுவேன்.

அந்த இளமைப் பருவத்து நினைவுகளில் பல என் மனத்தில் ஆழமாகப் பதிந்துள்ளன. தெளிவாக, தனியாக, திட்டுத் திட்டாக அவை நிற்கின்றன. மௌனமும் இருட்டும் நிறைந்த, ஒரு லக்ஷியமுமில்லாத அந்த நாட்களின் நினைவுகள் என் மனத்தின் ஆழத்திலே அழிக்கமுடியாதபடி அழுத்தமாகப் பதிந்திருக்கின்றன.

ஒரு நாள் என் மேலாடையின்மேல் தண்ணீர் சிந்தி விட்டது. முன்னறையில் எரிந்துகொண்டிருந்த கணப் பண்டையில் ஈரம் உலரட்டும் என்று என் மேலாடையை விரித்தேன். என் அவசரத்துக்கு மேலாடை காயவில்லை, ஆகவே கணப்பை நெருங்கி அதன் மேலேயே மேலாடை

யைப் போட்டுவிட்டேன். நெருப்புப் பற்றிக்கொண்டு விட்டது. என்னைச் சுற்றிலும் தீ. என் ஆடைகள் முழுவதும் தீ பற்றிக்கொண்டது. பீதிநிறைந்த என் கூக்குரல் என்னுடைய கிழட்டுத் தாதி, வினி என்பவள் காதில் விழுந்தது. அவள் வந்து என்மேல் ஒரு கம்பளிப் போர்வையை போர்த்தித் தீயை அணைத்தாள். என் தலைமயிர் தீய்ந்தது. கையில் சில இடங்களில் தீப்புண்கள் பட்டன. அதைத் தவிர அதிகக் காயம் ஏற்படவில்லை எனக்கு.

சற்றேறக்குறைய இதே சமயத்தில் பூட்டு சாவி என்பதன் உபயோகத்தை அறிந்துகொண்டேன் நான். ஒரு நாள் காலை என் அம்மாவை நான் உக்கிராண அறையில் விட்டுப் பூட்டிவிட்டேன். அங்கே அவள் மூன்றுமணி நேரம் அடைபட்டுக்கிடந்தாள். கதவை அவள் எவ்வளவு தட்டியும் திறப்பதற்கு ஆளில்லை. வேலைக்காரர்கள் எல்லோரும் வீட்டின் வேறு ஒரு பகுதியில் இருந்தனர். அம்மா தட்டிக்கொண்டிருந்த கதவில் சாய்ந்துகொண்டே நான் ஆனந்தமாகச் சிரித்துக்கொண்டிருந்தேன். இந்த என்னுடைய குறும்புத்தனத்தால் என் பெற்றோருக்குத் தெரிந்துவிட்டது—எனக்குக் கல்வி கற்றுத்தர ஏதாவது ஏற்பாடு செய்யாவிட்டால் ஏதாவது அனர்த்தங்கள் விளையும் என்று. என் உபாத்தியாயினி, மிஸ் ஸல்லிவன், வந்ததும், அவளையும் ஒருதரம் அவள் அறையில் போட்டுப் பூட்டிவிட்டேன். மிஸ் ஸல்லிவனிடம் தரச் சொல்லி அம்மா என்னிடம் ஏதோ ஒரு சாமான் தந்தாள். அதை அவளிடம் தந்துவிட்டு, கதவைச் சாத்தி வெளியே பூட்டிவிட்டேன். சாவியை எடுத்து முன்கூடத்திலிருந்த பீரோவுக்கு அடியில் ஒளித்து வைத்துவிட்டேன். யாரிடமும் சாவி எங்கிருக்கிறது என்று சொல்ல மறுத்துவிட்டேன். என் தகப்பனார்

ஏணியைக்கொண்டுவந்து வைத்து ஜன்னல் வழியாக மிஸ் ஸல்லிவனைத் தூக்கிவந்தார். அதுபற்றி என் ஆனந்தத்தைச் சொல்லிமாளாது. பலமாதங்களுக்குப் பிறகு தான் நான் சாவியை எடுத்துக்கொடுத்தேன்.

எனக்கு ஐந்தாவது வயது நடந்துகொண்டிருக்கும் போது, நாங்கள் அந்தச் சிறிய லதாக்கிருஹத்தை விட்டு வேறு ஒரு பெரிய வீட்டுக்குக் குடிபோனோம். என் குடும்பத்தில் என் தந்தையும் தாயும் தவிர, இரண்டு மூத்த (அரை) சகோதரர்களும், பின்னர் ஒரு சிறிய சகோதரியும்—அவள் பெயர் மில்டிரெட் — இருந்தனர். என் தகப்பனாரைப்பற்றி எனக்கிருக்கிற முதல் ஞாபகம் இதுதான்; மலைபோல இரண்டு பக்கமும் அடுக்கி இருக்கிற பத்திரிகைகளுக்கு மத்தியில், கையில் ஒரு பத்திரிகையைப் பிரித்து வைத்துக்கொண்டு பார்த்துக் கொண்டிருக்கிறார் அவர். அந்தப் பத்திரிகையை முகத்துக்கெதிரில் பிரித்துக்கொண்டு அவர் என்ன செய்கிறார் என்றுதான் எனக்குத் தெரியவில்லை. அவர் செய்கிற மாதிரியே நானும் செய்தேன். அவர் மூக்குக் கண்ணாடியைக்கூட நான் அணிந்துகொண்டு பார்த்தேன். அப்படியும் புதிர் விடுபடவில்லை. பல வருஷங்கள் படிப்பது என்றாலே என்ன என்பது எனக்குத் தெரியாமல்தான் இருந்தது. பின்னர்தான் பத்திரிகைகள் என்றால் என்ன என்பது எனக்குத் தெரிந்தது; என் தகப்பனார் இந்த மாதிரிப் பத்திரிகைகளில் ஒன்றின் ஆசிரியர் என்பதும் தெரிந்தது.

என் தகப்பனார் அன்பும் பிரியமும் உள்ளவர். யாரையும் கடிந்துகொள்ளமாட்டார். அவருக்குத் தன் குடும்பத்தினிடம் ஈடுபாடு அதிகம். வேட்டையாடுகிற சமயங்களில் தவிர வேறு எச்சமயத்திலும் தன் குடும்பத்தைவிட்டுப்

போகமாட்டார். அவர் பெரிய வேட்டைக்காரர் என்றும், குறிபார்த்துச் சுடுவதில் நிபுணர் என்றும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன். தன் குடும்பத்துக்கு அடுத்தபடியாக, அவருக்குத் தன் வேட்டை நாயினிடமும்,துப்பாக்கியிடமும் தான் ஈடுபாடு. விருந்தோம்புவதில் சிறந்தவர். சில சமயம் அவர் விருந்தாடிகளை அழைத்துவருவது என் தாயாருக் குச் சிரமமாகக்கூட இருக்கும். சாதாரணமாக யாராவது விருந்தாடி யில்லாமல் மாலையில் வீடு திரும்பமாட்டார் அவர். அவர் வீட்டைச் சுற்றியிருந்த பெரிய தோட்டத் தைப்பற்றி அவருக்குப் பெருமை அதிகம். அந்தப் பிராந் தியத்திலேயே பெரிய மூலாம் பழங்களும் ஸ்டிராபெர்ரிகளும் அவர் தோட்டத்திலேதான் விளைந்தன என்பது மிகவும் பிரசித்தம். தோட்டத்தில் பழுத்த முதல் திராக்ஷை களையும், பொறுக்கி எடுத்த பழங்களையும் எனக்குக் அவர் கொணர்ந்து தருவார். அவர் என்னைத் தொடுவதே அருமையும் அன்பும் நிறைந்த அனுபவமாக இருக்கும் எனக்கு. தோட்டத்தில் ஒவ்வொரு மரத்தையும் செடி யையும் கொடியையும் என்னைத் தொடச்சொல்லி எனக்கு அறிமுகம் செய்துவைப்பார். என்னைத் திருப்தி செய் விப்பது எல்லாவற்றிலும் அவரும் திருப்தியடைந்தார்.

அவர் கதைகள் சொன்னல் பிரமாதமாக இருக்கும். எனக்குப் பாஷை கைவந்தபிறகு அவருடைய கதைகளில் சுவாரஸ்யமானவற்றில் பலவற்றை என் கையில் எழுத்துக் கூட்டி எழுதுவார் அவர். சமயம் வாய்க்கும்போது என்னை அந்தக் கதைகளைத் திருப்பிச் சொல்லச் சொல்லிக் கேட்டு ஆனந்திப்பார்.

1896-ல், கோடைகாலத்திய இன்பமான நாட்களை வட மாகாணங்களில் நான் ஆனந்தமாகக் கழித்துக்கொண் டிருக்கும்போது என் தகப்பனர் இறந்துவிட்ட செய்தி

எனக்குக் கிடைத்தது. சில நாள் நோய்வாய்ப்பட்டிருந்துவிட்டு, மிகவும் அதிகமாகக் கஷ்டப்பட்டுவிட்டு, திடீரென்று ஒருநாள் இறந்துவிட்டார். இதுதான் என்னுடைய முதல் துக்கம். சாவு என்பது பற்றி என்னுடைய முதல் சொந்த அனுபவம்.

என் தாயாரைப் பற்றி எப்படி எழுதுவது நான்? எனக்கும் அவளுக்கும் இடையே இருந்த நெருக்கம் அப்படிப் பட்டது; அவளைப் பற்றி எழுதுவது என்பதே சரியல்ல என்று சொல்லக்கூடிய அளவுக்கு எங்கள் நெருக்கம் இருந்தது.

வெகுநாள் வரையில் என் தாயாருக்கும் எனக்கும் இடையே குறுக்கிட்ட என் தங்கையிடம் எனக்குக் கோபம் தான். என் தங்கையின் வரவால் என் தாயாருக்கு என்னிடம் உள்ள பிரியம் குறைந்துவிட்டது என்பது எனக்குத் தெளிவாகவே தெரிந்தது. என் தங்கையிடம் எனக்குச் சொல்லமுடியாத பொறுமைதான். என் தங்கையோ வெனில் என் தாயாரின் மடியை விட்டு அசைவதே கிடையாது. என் ஸ்தானத்தில் அவள் உட்கார்ந்திருந்தாள். என் தாயாரின் கவனத்தையும் காலத்தையும் பூராவும் அவள் கவர்ந்துவிட்டாள் என்று எனக்குக் கோபம் கோபமாக வந்தது. எல்லாவற்றிற்கும் மேலே ஒருநாள் நடந்த ஒரு சம்பவம் என் கோபத்தை இன்னும் அதிகமாக அவமதிப்பது போல இருந்தது.

அந்த நாட்களில் எனக்கு மிகவும் பிரியமான ஒரு பொம்மை இருந்தது. அதை நான் சதா சர்வதா கொஞ்சுவேன். கொஞ்சுகிற சாக்கில் அதை இல்லாதபாடும் படுத்திவைப்பேன். பின்னர் அதற்குப் பெயர் நான்ஸி என்று வைத்தேன். என் கோபம், அடி, திட்டு, வசவு பாராட்டுதல், முத்தம் எல்லாவற்றிற்கும் இலக்கு அந்தப்

பொம்மைதான். அதைப் படுத்தினபாட்டில் பொம்மை கிழிந்து அழுக்கேறிவிட்டது. என்னிடம் பேசுகிற பொம்மைகள் இருந்தன; அழுகிற பொம்மைகள் இருந்தன; கண்களை மூடிமூடித் திறக்கிற பொம்மைகள் இருந்தன. ஆனால் அவைகள் எல்லாவற்றையும்விட எனக்குப் பிடித்தமான பொம்மை அந்த நான்ஸி பொம்மைதான், பாவம்! அதற்கு ஒரு தொட்டில் உண்டு. தொட்டிலில் நான்ஸியைப் படுக்கவைத்து அதை ஒரு மணி நேரம் இரண்டுமணி நேரம் இடைவிடாது ஆட்டுவேன். தொட்டிலையும் என் பொம்மையையும் வெகு ஜரூராக, கவனமாக நான் காத்துவந்தேன். ஆனால் ஒருநாள் என் சின்னத்தங்கை அந்தத் தொட்டிலில் படுத்து உறங்குவதை நான் அறிந்துவிட்டேன். அவ்வளவுதான்! என் பிரியத்துக்கு பாத்திரமில்லாத ஒருத்தி அந்தத் தொட்டிலில் படுத்து உறங்குவதா என்று எனக்கு வந்த கோபத்துக்கு அளவேயில்லை. தொட்டில்மேல் பாய்ந்து ஒரு எட்டில் அதைக் கவிழ்த்துவிட்டேன். தங்கச்சி விழுந்து அடிபட்டு இறந்துகூடப் போயிருப்பாள்; சமயத்தில் என் தாயார் வந்து விழஇருந்த குழந்தையைத் தாங்கி எடுத்துக்கொண்டு விட்டாள். பார்வையோ சப்த ஜாலங்களோ எட்டாத தனிமையிலே வாழுகிறவர்களுக்கு வார்த்தைகள், காட்சிகள், செய்கைகள் இல்லாததால் தோழமை என்கிற உணர்ச்சியே இல்லாமல் போய்விடுகிறது. மனுஷ்யத்துவம் பொருந்திய என் உரிமைகளை அறிந்துகொண்ட பின்னர்தான் அன்புஎன்கிற பிணைப்பை அறிந்து அதற்கு நான் அடிமையானேன். மில்ட்ரெட் என்கிற என் தங்கையும் நானும் ஒருவரோடொருவர் அன்புடன், இரண்டு உள்ளங்களும் பொருந்தி ஒருமிக்க, வாழ்க்கைப் பாதையிலே கைகோத்துக்கொண்டு உலாவினோம். அப்பொழுதும்கூட என்னால் பேசமுடியாது; என்னுடைய விரல் பாஷையை அவளால் அறிந்துகொள்ள

முடியாது. அப்படியும் நாங்கள் இருவரும் நெருங்கி வளர்ந்து தோழிகளானோம்.

## 3

இடையில் என் மனத்தில் எழுந்த உணர்ச்சிகளை வெளியே தெரியச் சொல்லவேண்டும் என்கிற அவா எனக்குள் வளர்ந்தது. நான் உபயோகப்படுத்தக்கூடிய சைகைகள் என் எண்ணங்களை வெளிப்படுத்தப் போதவில்லை. ஏதாவது சொல்ல நினைத்துச் சொல்லமுடியாமல் அவஸ்தைப் படும்போதெல்லாம் என்னுடைய ஆங்காரமும் கோபமும் அதிகரித்தது. என் கண்ணுக்கு அகப்படாத கைகள் என்னைக் கட்டிப்பிடித்துச் சிறைப்பிடித்து நிறுத்திவைத்திருப்பது போன்ற ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. அந்தச் சிறையிலிருந்து என்னை விடுவித்துக்கொள்ள நான் வெகுவாகப் பாடுபட்டேன். நான் போராடினேன் என்றால் அது மிகையே ஆகாது. ஆனால் என் போராட்டங்களுக்குப் பலன்தான் ஏற்படவில்லை. ஆனாலும் எனக்குள்ளாக மட்டும் தோல்வியை ஏற்றுக்கொள்வதில்லை என்று ஒரு பிடிவாதம் இருந்தது. இந்தாலும் உடல் சோர அழத் தொடங்கிவிடுவேன் நான். அம்மா அருகில் இருந்தால் அவள் மடியில் அடைக்கலம் புகுந்துவிடுவேன். எந்தக் காரணத்துக்காக என் உணர்ச்சிப் புயல் வீசியது என்பது கூட எனக்குச் சிலசமயம் மறந்துவிடும். சில நாட்களில் இந்த உணர்ச்சிப் போராட்டம் மிகைப்பட்டது. தினசரி, சில நாட்களில் மணிக் கொருதரம்கூட, மனத்தில் உள்ளதை வெளிப்படுத்த அறியாமல் தவித்துத் தடுமாறி அழத் தொடங்கிவிடுவது சகஜமாகிக் கொண்டிருந்தது.

என் பெற்றோர்களுக்கும் துயரம் தந்தன என் போராட்டங்கள். ஆனால் என்ன செய்வது என்றுதான் அவர்

களுக்கும் தெரியவில்லை. குருடு செவிடுகளுக்குப் பள்ளிக் கூடம் எதுவும் சமீபத்தில் இல்லை. டஸ்கும்பியா என்கிற அந்த சிறிய முடுக்குப் பிரதேசத்து ஊருக்கு, காதும் கண் ணும் அற்ற ஒரு குழந்தைக்குப் பாடம் சொல்லித்தர யார் வருவார்கள் ? எங்கள் நண்பர்களும் உறவினர்களும் இந்தக் குருட்டுச் செவிடுக்கு யார் கல்வி புகட்ட முடியும் என்று தான் எண்ணினார்கள். என் தாயாருக்கு மட்டும் சொல்ப நம்பிக்கை இருந்தது. அவள் டிக்கன்ஸினுடைய "அமெ ரிக்கக் குறிப்புகள்" என்கிற புஸ்தகத்தில் லாரா ப்ரிட்ஜ்மன் என்பவள் குருடியாகவும் செவிடியாகவும் இருந்தவள். எனி னும் அவளுக்குக் கல்வி புகட்டப்பட்டது என்று படித்திருந் தாள். குருடர் செவிடர்களுக்குக் கல்வி புகட்ட ஒரு வழி கண்டுபிடித்த டாக்டர் ஹௌவ் என்பவர் இறந்து விட்டார். அவர் இறந்து பல வருஷங்களாகின்றன என்ப தும் ஞாபகம் வந்தது அவளுக்கு. அந்த ஞாபகம் அவள் நம்பிக்கையை வெகுவாகக் குலைத்தது. அவர் வகுத்த வழியும் அவருடன் மறைந்துவிட்டதோ, என்னவோ. அப் படியே அந்த வழி இன்னமும் வழக்கிலிருந்தாலும், அதைப் பின்பற்றித் தன் பெண், இந்தக் குருட்டுச் செவிட்டுச் சிறுமி லாபம் அடைய முடியும் என்பது என்ன நிச்சயம் ?

நம்பிக்கையில்லை என்று விடப்பட்ட பல கண்களைப் பரிசோதித்துத் திறந்துவிட்டிருந்த ஒரு டாக்டர் பால்டிமோர் நகரிலிருப்பதாக என்னுடைய ஆறுவது வய தில் என் தகப்பனார் கேள்விப்பட்டார். என் கண்கள் திறக்க வழியுண்டா என்று பார்க்க அந்த டாக்டரிடம் என்னை அழைத்துப்போவது என்று என் பெற்றோர் தீர்மானித்தனர்.

எனக்கு அந்தப் பிரயாணம் நன்கு ஞாபகம் இருக்கிறது. உல்லாசமான பிரயாணம் அது. வழியில் ஒருத்தி என்

னிடம் ஒரு பெட்டி நிறையச் சங்குகள் தந்தாள். அவற்றில் ஓட்டைபோட்டுச் சங்கிலியாகக் கோர்க்கச் சொல்லித் தந்தார் என் அப்பா. ஒருமணி நேரம் அந்தச் சங்குகளை வைத்துக் கொண்டு திருப்தியாக விளையாடினேன் நான். கண்டக்டரும் என்னைப் பிரியமாக நடத்தினான். அவன் வண்டியில் டிக்கட் கொடுத்துக்கொண்டு சுத்தி வரும்போதெல்லாம், அவன் சட்டையைப் பிடித்துக்கொண்டு நானும் அவனுடன் போனேன். டிக்கட்டுகளில் ஓட்டைபோட அவன் கையில் வைத்திருந்த பஞ்ச் மெஷின் அற்புதமான ஆனந்தமான விளையாட்டுக் கருவி. ஓரத்தில் காலை மடக்கிச் சுருட்டிக் கொண்டு உட்கார்ந்தபடியே மணிக்கணக்காக அட்டைகளில் விதவிதமாக ஓட்டைகள் போட்டுக்கொண்டிருந்தேன்.

என் அத்தை துணிகளை வைத்துத் தைத்து எனக்கு ஒரு பொம்மை செய்து தந்தாள். உருவமேயற்ற, வேடிக்கையான பொம்மை அது. அஃதற்குக் காது, மூக்கு, கண், வாய் எதுவுமே இல்லை. குழந்தையின் கற்பனையில்கூட அதற்கு முகம் என்று சொல்லும்படியாக எதுவும் இல்லை. ஆனால் மற்ற எல்லாக் குறைகளையும்விட அதற்குக் கண்களில்லாததுதான் எனக்குப் பெரிய குறையாகப் பட்டது. விடாப்பிடியாக எல்லோரிடமும் இந்தக் குறையைச் சுட்டிக் காட்டினேன் நான். ஆனால் அந்தப் பொம்மைக்குக் கண்கள் வைக்க யாருக்கும் வழி தெரியவில்லை. என் மனத்தில் ஒரு யோசனை பளிச்சிட்டது; வழி தெரிந்துவிட்டது எனக்கு என் அத்தையின் மேல் கோட்டைத் தேடிக்கொண்டு போனேன். அதன் ஓரத்தில் உருண்டை மணிகள்—கண்ணாடியாலானவை—தைத்திருந்தன. இரண்டு மணிகளைப் பிடுங்கிக்கொண்டு வந்தேன். அத்தையிடம் தந்து அவற்றைக் கண்கள் இருக்கவேண்டிய இடத்தில் வைத்துப்

பொம்மையில் தைக்கச் சொன்னேன். என் கைகளை எடுத்து என் கண்களில் வைத்தாள் அத்தை. ஆமாம் என்பதாகத் தலையை வேகமாக ஆட்டினேன். கண்ணுடி மணிகளை வைத்துத் தைத்ததும் எனக்கு ஆனந்தம் கரை காண முடியவில்லை; கூத்தாடினேன். ஆனால் அதற்கு அடுத்த நிமிஷமே அந்தப் பொம்மையிலிருந்து என் கவனம் நழுவிவிட்டது. இத்தனையும் அந்த பால்டிமோர் பிரயாணத்தின்போது நடந்ததுதான். ஒரு தடவைகூட எனக்குக் கோபமோ ஆத்திரமோ வரவில்லை; என் உள்ளத்தில் சக்தியின்மைப் புயல் குமுறவில்லை. என் கை விரல்களையும் மனத்தையும் ஒருங்கே கவர்ந்த விஷயங்கள் பற்பல இருந்தன அந்தப் பிரயாணத்தில்.

பால்டிமோர் நகரத்தை அடைந்ததும், டாக்டர் சிஷோல்ம் எங்களைப் பிரியத்துடன் வரவேற்ருர். ஆனால் அவர் செய்யக்கூடியது எதுவும் இல்லை. எனிலும் எனக்குக் கல்வி புகட்டமுடியும் என்றும், அதற்கு டாக்டர் அலெக்ஸாண்டர் கிராஹம் பெல் என்பவர் உதவுவார் என்றும் அவர் என் தகப்பனரிடம் தெரிவித்தார். இந்த டாக்டர் பெல்வாஷிங்டன் நகரிலிருந்தார். செவிடு அல்லது குருடான குழந்தைகளுக்கான பள்ளிக்கூடங்களைப் பற்றி அவருக்குச் சகல விவரங்களும் தெரியும் என்ருர். பால்டிமோர் டாக்டர் சொன்னபடி, நாங்கள் வாஷிங்டனுக்குப் போனேம். என் அப்பாவுக்கு நம்பிக்கையில்லை; மனத்திலே அதைரியமும் துக்கமும் நிறைந்திருந்தது. அவர் மனத்திலிருந்தது எதுவும் எனக்குத் தெரியாது. ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குப் போவதில் உள்ள நூதனமான அனுபவத்தில் ஈடுபட்டவளாக நான் உத்ஸாகமாக இருந்தேன். குழந்தைதான் என்ருலும் டாக்டர் பெல்லின் கரை கடந்த அன்பு, இரக்கம், பரிவு என்கிற குணங்கள்

எனக்கும் உடனேயே தெரிந்தன. இந்தக் குணதிசயங்கள் அவரைப் பல்லாயிரக்கணக்கான மக்களுக்கு நண்பராக்கி யிருப்பது உண்மையல்லவா? அவருடைய அரும்பெரும் சாதனைகள் லக்ஷக்கணக்கான மக்களின் மனத்தைக் கவர்ந் தன. அவர் மடியில் உட்கார்ந்துகொண்டு நான் அவருடைய கடிகாரத்தைத் தொட்டுப் பார்த்தேன். அதை எனக்காக மணி அடிக்கவைத்துக் காட்டினர் அவர். என் சைகைகள் அவருக்குப் புரிந்தன. அது எனக்குத் தெரிந்த தும் எனக்கு அவரிடம் சுயமாகவே அன்பு ஏற்பட்டது. அந்தச் சம்பாஷணை தான் இருட்டான உலகிலிருந்து ஒளியுலகிற்கு எனக்கு வழிகாட்ட இருந்தது என்பது எனக்கு அப்போது தெரியாது. தனிமை நீங்கி, மனுஷ்யர் களிடையே ஒரு மனுஷியாவதற்கு எனக்கு வழி வகுத்துத் தந்தவர் அவர். கல்வி என்னும் கடலில் நீந்த எனக்குத் துணை செய்தவர் அவர்.

போஸ்டன் நகரில் இருந்த பெர்கின்ஸ் ஸ்தாபனம் குருடர்களுக்கு உதவுவதற்காக ஏற்பட்டது. அங்கேதான் டாக்டர் ஹௌவ் என்பவரும் உழைத்தார். அந்த ஸ்தாபனத்தின் தலைவர் பெயர் மிஸ்டர் அனக்னஸ். எனக் குக் கல்விபுகட்ட ஒரு உபாத்தியாயர் அகப்படுவாரா என்று மிஸ்டர் அனக்னஸுக்கு எழுதிக் கேட்கச் சொன்னர் டாக்டர் பெல். உடனேயே என் தகப்பனரும் எழுதினர். சில வாரங்களுக்குள்ளாகவே திருப்திகரமான பதிலும் வந்துவிட்டது. எனக்குக் கல்விபுகட்ட ஓர் உபாத்தியாயினி கிடைத்துவிட்டதாக மிஸ்டர் அனக்னஸ் எழுதினர். இது நடந்தது 1886 கோடையில். ஆனல் அடுத்த மார்ச்சு மாதத்தில்தான் மிஸ் ஸல்லிவன் வந்து சேர்ந்தாள்.

எகிப்திலிருந்து (இருளிலிருந்து) வெளியேறி (மோஸஸ் என்கிற தீர்க்கதரிசி மாதிரி) ஸினய் (ஒளி) என்கிற மலை

அடிவாரத்திலே நின்றேன் நான். அமானுஷ்யமான, தெய்வீகமான ஒரு சக்தி என் உள்ளத்தைத் தொட்டது. மூடியிருந்த என் கண்கள் "காண"த் தொடங்கின; எல்லையில்லாத எண்ணிக்கையற்ற அதிசயங்களைக் கண்டு களித்தன. என் எதிரிலிருந்த புண்ய மலையிலிருந்து ஒரு குரல் ஒலித்து என் காதுகளை நிரப்பியது. "அறிவு என்பது கண், காது, ஒளி எல்லாம்" என்றது அந்தக் குரல்.

## 4

என் வாழ்நாளிலேயே முக்கியமான நாள் அது. அன்று என் உபாத்தியாயினி, ஆன் மான்ஸ்பீல்டு ஸல்லி வன் என்கிற பெயருடையவள், என்னை வந்து அடைந்தாள். என் முந்திய வாழ்க்கையையும் இந்தத் தேதிக்குப்பின் என் வாழ்க்கையையும் ஒப்பிட்டுப் பார்த்து அந்த இரண்டுக் கும் உள்ள பிரமாதமான வித்தியாசங்களை எண்ணுந் தோறும் நான் ஆச்சரியத்தில் மூழ்குகிறேன். அவை இரண்டும் இரண்டு கோடிகள். முற்றிலும் புதுமையான வாழ்வு தொடங்கிற்று எனக்கு அன்று. 1887-ல் மார்ச் மாதம் 3-ந் தேதி அது. எனக்கு ஏழு வயதாக இன்னும் மூன்று மாதங்களிருந்தன.

அந்த முக்கியமான தினத்தன்று மாலை, நான் வெளி வாசலில் நின்றேன். ஊமையாக, இன்னது என்று விவரிக்க முடியாத ஒருபரபரப்புடன் நின்றேன். என்ன எதிர்பார்ப்பது என்று எனக்கு நிச்சயமாகத் தெரியாது. ஆனால் என் தாயாரின் பெருமூச்சுகளும், அவள் குறுக்கும் நெடுக்கும் நடந்து செய்துகொண்டிருந்த ஏற்பாடுகளும் அமர்க்களங் களும் எனக்குத் தெளிவாகவே அறிவுறுத்தின: ஏதோ

அசாதாரணமான ஒரு விஷயம் நிகழப்போகிறது என்று. ஆகவே நான் வெளியே வாசலில் போய் நின்றுகொண்டு வருவதை வரவேற்கத் தயாரானேன். வீட்டு வாசலிலே படர்ந்திருந்த காலைமந்தாரைப் புஷ்பக் கொடிகளில் சூரிய ஒளி தாக்கிப் பசுமையை பத்துமடங்காக்கியது. நிமிர்ந் திருந்த என் முகத்திலும் சூரிய ஒளி தாக்கியது; எனக்கு ஒளி தெரியாவிட்டாலும் வெப்பம் தெரிந்தது. இனிமை யான தென்பிராந்தியத்து வஸந்தத்தை வரவேற்கத் தலைக் காட்டியிருந்த தளிர்களும் மொக்குகளும் என் கைவிரல் களுடன் ஆனந்தமாக அளவளாவின. நிகழப்போகும் அதிசயம் என்ன என்று எனக்குத் தெரியாது. நான் அந்தச் சமயம் எதையும்பற்றி அதிகமாகக் கவலைப்பட வில்லை. கையாலாகாத ஒரு ஆத்திரம் ஓய்ந்து அப்போது தான் எல்லையற்ற அமைதியில், சிந்தனையற்ற அமைதியில் ஆழ்ந்திருந்தேன்.

ஆழ்ந்து சூழ்ந்துள்ள அடர்த்தியான மூடு பனியில் கடலில் கப்பலில் பிரயாணம் செய்திருக்கிறீர்களா? சுற்றிலும் ஒரே வெண்மையாக இருக்கும்; ஆனால் இருளை யும் விட அதி பயங்கரமானது அது; எதிரில் உள்ளது எதுவும் தெரியாது. ஒவ்வொரு அங்குலமாகக் கப்பல் கரைநோக்கி சர்வஜாக்கிரதையாக நகரவேண்டியதாக இருக்கும். எந்த நிமிஷம் என்ன நடக்குமோ என்று அறியாமல் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு எல்லோ ரும் காத்திருப்பார்கள். எனக்குக் கல்வி புகட்டும் முயற் சிகள் தொடங்குவதற்குமுன் மூடுபனியில் திக்குத்திசை தெரியாமல் மாட்டிக்கொண்ட அந்தக் கப்பல்போல இருந்தேன் நான். திசைகாட்டும் கருவியோ, ஆழம் பார்க்கும் கயிறோ கூட இல்லாத கப்பல் நான். கடற்கரை எவ்வளவு அருகில் இருக்கிறது என்று அறிந்துகொள்ள

எனக்கு எவ்வித துணையும் கிடையாது. "வெளிச்சம்! சிறிதாவது வெளிச்சம் வேண்டுமே!" என்று என் ஆத்மா வார்த்தைகள் அற்ற ஒரு மௌனத்தில் ஏங்கியது. அந்த நிமிஷத்திலே உய்யவழி எனக்கு ஏற்பட்டது. எனக்கு வழிகாட்ட ஒரு அன்பு ஒளி தோன்றியது.

என்னை யாரோ அணுகி வருகிற காலடிச் சப்தம் கேட்டது. என் தாயார்தான் வருகிறுளாக்கும் என்று எண்ணி என் கைகளை நீட்டினேன். யாரோ என் கையைப் பிடித்துக்கொண்டாள். என்னைக் கட்டி அணைத்து இறுகத் தழுவிக் கொண்டாள் ஒருத்தி. உலகில் உள்ளதை யெல்லாம் எனக்குச் சொல்லித்தர ஒருத்தி வந்துவிட்டாள். அதெல்லா வற்றையும்விடப் பெரிதாகச் சொல்ல வேண்டியது இதுதான்; தன்பால் என் உள்ளத்தைக் கவர்ந்து அடிமை கொள்ள அவள் வந்துவிட்டாள்.

என் உபாத்தியாயினி வந்ததற்கு மறுநாள் காலையில் அவள் என்னைத் தன் அறைக்குள் அழைத்துச் சென்றுள். என்னிடம் ஒரு பொம்மையைக் கொடுத்தாள். பெர்கின்ஸ் ஸ்தாபனத்திலுள்ள கண்களில்லாத குழந்தைகள் எனக்கு வெகுமதியாக அளித்திருந்த பொம்மை அது. லாரா ப்ரிட் ஜ்மனே அதற்கு ஆடைகள் தைத்து அணிவித்திருந்தாள் என்பது எனக்கு அப்போது தெரியாது; பின்னர்தான் தெரிந்துகொண்டேன். பொம்மையை வைத்துக்கொண்டு சிறிது நேரம் விளையாடினேன். பிறகு மிஸ் ஸல்லிவன் மெதுவாக என் கையைப் பிடித்து உள்ளங்கையில் d–o–l–l (பொம்மை) என்று எழுத்துக்கூட்டி எழுதினுள். இந்த விளையாட்டு எனக்கு ஆரம்பத்திலேயே பிடித்துவிட்டது— அவள் விரலால் எழுதிய மாதிரியே நானும் அவள் கையில் எழுதினேன். d–o–l–l என்று சரியாக எழுத அறிந்து

கொண்டதும் எனக்கே தோன்றிய ஆனந்தத்தையும் பெருமையையும் சொல்லிமாளாது. குழந்தைத்தனமான பெருமைதான் அது; குழந்தைத்தனமான ஆனந்தம்தான். அதனுலென்ன? உடனேயே கீழே ஓடிப்போய், என் அம்மாவின் கையைப் பிடித்து அவளுடைய உள்ளங் கையில் d–o–l–l என்கிற எழுத்துக்களை எழுதினேன். வார்த்தைகள், எழுத்துக்கள் என்பது எதுவுமே எனக்கு அப்போது தெரியாது. மிஸ் ஸல்லிவன் செய்தமாதிரியே நானும் செய்தேன்; அவ்வளவுதான். இதேமாதிரிப் பின் தொடர்ந்த பல நாட்களில் அ வ் வ ள வ ா க அர்த்தம் புரியாத பல வார்த்தைகளை எழுத்துக்கூட்டி விரலால் எழுதக் கற்றுக்கொண்டேன் நான்; குண்டூசி, தொப்பி, கோப்பை, நில், நட, உட்கார் என்பவை போன்ற பல வார்த்தைகளைக் கற்றுக் கொண்டேன் உபாத்தியா யினி வந்த பல வாரங்களுக்குப் பிறகுதான் எனக்குத் திடமாகத் தெரிந்தது; உலகில் உள்ள ஒவ்வொன்றுக்கும் தனித் தனியே பெயர் உண்டு என்கிற விஷயம் பல வாரங்களுக்குப் பிறகுதான் எனக்குத் தெரியவந்தது.

ஒரு நாள் நான் புதுப் பொம்மையை வைத்து விளையா டிக்கொண்டிருந்தேன். என்னுடைய பெரிய துணிப் பொம் மையை என் மடிமேல் போட்டாள் மிஸ் ஸல்லிவன். அதே சமயம் என் உள்ளங்கையில் விரலால் d-o-l-l என்று எழுதினுள். பொம்மை என்கிற பெயர் இரண்டு பொம்மை களுக்குமே பொருந்தும் என்று எனக்கு அறிவூட்ட முயன்றுள். அதே தினம் காலையில் "சொம்பு, தண்ணீர்" என்கிற வார்த்தைகள் பற்றி எனக்கும் மிஸ் ஸல்லிவனுக் கும் ஒரு போராட்டம் நடந்தது. சொம்பு என்றுல் சொம்பு தான் என்றும், தண்ணீர் என்றுல் தண்ணீர்தான் என்றும் எனக்குத் தெரிவிக்க மிஸ் ஸல்லிவன் வெகுவாகப் பாடு

பட்டாள். ஆனால் எனக்குப் பிடிபடவில்லை. சொம்பைத் தண்ணீர் என்றும், தண்ணீரைச் சொம்பு என்றும் எழுதினேன் நான். அதிகமாகத் தொந்திரவு செய்யாமல் அந்த விஷயத்தை அத்துடன் விட்டுவிட்டாள் அவள். ஆனால் கூடிய சீக்கிரமே மறுபடியும் சந்தர்ப்பம் கிடைத்தவுடன் சொம்பு, தண்ணீர் என்று மிஸ் ஸல்லிவன் ஆரம்பித்தாள். எனக்கு ஒரே ஆத்திரமாக வந்தது. புதுப் பொம்மையை எடுத்துத் தரையில் ஓங்கி அடித்தேன். அது தூள் தூளாக உடைந்து தெறித்தது. காலடியில் கிடந்த பொம்மைத் துணுக்குகள் எனக்கு எல்லையில்லா ஆனந்த மூட்டின. எனக்கு ஏற்பட்ட கோபத்தையும், அதன் விளைவாக நான் இழந்துவிட்ட பொம்மையையும் பற்றி எனக்கு எவ்வித வருத்தமும் தோன்றவில்லை. அப்படி அந்தப் பொம்மையிடம் எனக்கு ஒன்றும் பிரியமோ பிடித்தமோ ஏற்பட்டுவிடவில்லை. நான் குடியிருந்த அந்த இருள் உலகில் அன்பு என்கிற தளைகள் இன்னும் ஏற்படவில்லை. விருப்பு வெறுப்பு என்கிற உணர்ச்சிகள் அப்படி ஒன்றும் என் வாழ்வில் ஆட்சி செலுத்தவில்லை. உடைந்த பொம்மையைக் கூட்டி ஓர் ஓரமாக என் உபாத்தியாயினி ஒதுக்குவதை நான் உணர்ந்தேன். எனக்கு ஒரு திருப்தி ஏற்பட்டது; எந்த விதத்திலோ எனக்குத் தொந்திரவு கொடுத்துக்கொண்டிருந்த அந்தப் பொம்மை சிதறிவிட்டது பற்றி எனக்குக் கொஞ்சம் ஆறுதலாகக்கூட இருந்தது. என் தொப்பியை எடுத்து வந்தாள் மிஸ் ஸல்லிவன். வெளியே, வெப்பமான சூரிய ஒளியில் போகப் போகிறோம் என்று ஊகித்துக்கொண்டேன். வார்த்தைகள் அற்ற ஒரு நிலையைச் சிந்தனையென்று சொல்லலாமா? அது எனக்குத் தெரியாது. ஆனால் இந்த எண்ணம் என்னை ஆனந்தக் கூத்தாடச் செய்தது. குதித்துக் குதித்துக் கொண்டே கிளம்பினேன்.

தோட்டத்திலே இருந்த கிணற்றை நோக்கி நடந்தோம். வழிநெடுகக் காலே மந்தாரையின் நறுமணம் நிறைந்திருந்தது. கிணற்றுப் படி மேலும் மந்தாரைக்கொடி அடர்த்தியாகப்படர்ந்து ஏராளமாகப் பூத்திருந்தது. யாரோ கிணற்றிலிருந்து ஜலம் இழுத்து ஊற்றிக்கொண்டிருந்தார்கள். ஜலம் ஓடிய தாரையில் கை வைக்கச் சொன்னாள் மிஸ் ஸல்லிவன். என்னுடைய ஒரு கையில் குளுகுளுவென்று கிணற்று ஜலம் ஓட, இன்னொரு கையில் மிஸ் ஸல்லிவன் w-a-t-e-r (தண்ணீர்) என்று முதலில் வேகமாகவும் பிறகு மெதுவாகவும் எழுதிக் காட்டினாள். நான் அசையாமல் நின்றேன்; கையிலிருந்து என் மனத்திற்குள் பாய்ந்த அறிவை வாங்கிக்கொண்டு நின்றேன். ஏதோ மறந்து விட்ட ஒரு விஷயம் தெளிவாக, அழுத்தமாக எனக்குத் திடுதிப்பென்று ஞாபகம் வந்ததுபோல இருந்தது. என் மனத்தில் சிந்தனைகள் உருவெடுக்கத் தொடங்கிவிட்டன. பாஷையின் ரகஸியம் என் உள்ளத்தில் உருவாகிவிட்டது. தண்ணீர் என்றால் இதுதான் என்பது எனக்கு நிதரிசனமாகத் தெரிந்துவிட்டது. என்ன அதிசயமான குளுமை! என்ன அதிசயமான ஓட்டம்! உயிருள்ள அந்த வார்த்தை என் உள்ளத்தைக் கவ்வியது. இருளில் பிரகாசமான ஒளி ஏற்படுத்தித்தந்தது. என் உள்ளம் விரிந்து விசாலித்தது. எல்லை யில்லாத ஆனந்தத்தைத் தண்ணீர் என்கிற வார்த்தையிலே கண்டேன் நான். என்னைத் தடைப்படுத்தி நிறுத்திய தளைகள் இன்னும் எத்தனையோ இருந்தன. ஆனால் காலக் கிரமத்தில் அவையெல்லாம் அறுந்து விழுந்துவிடும் என்கிற நம்பிக்கை, வார்த்தைகளில் அகப்படாத ஒரு நம்பிக்கை, நானும் அறியாமலே என்னுள்ளே உதித்தது.

கிணற்றடியிலிருந்து நான் கிளம்பும்போது கற்றுக் கொள்ளக் கூடியதை யெல்லாம் கற்றுக்கொண்டு விடுவது

என்கிற ஒரு துடிப்புடன் கிளம்பினேன். ஒவ்வொன்றுக்கும் பெயர் உண்டு. ஒவ்வொரு பெயரும் ஒவ்வொரு வார்த்தை யாக உருவெடுத்தது. ஒவ்வொரு வார்த்தையையும் தொடர்ந்து ஒரு சிந்தனை ஓட்டம் இருந்தது. வீடு திரும்பும் வழியில் நான் தொட்ட ஒவ்வொருபொருளும் உயிர்பெற்றுத் துடிப்பதுபோல இருந்தது. மூடிய கண்களைக் கொண்டு நான் உலகில் உள்ள எல்லாவற்றையும் புதுப்பார்வை பார்த்தேன். வீட்டுக்குள் வரும்போது உடைந்து நொறுங்கிய என் பொம்மையின் ஞாபகம் வந்தது. மூலையில் கிடந்த துணுக்குகளைத் தடவித் தேடி எடுத்தேன். அவற் றைச் சேர்த்து மீண்டும் பொம்மையாக்க முயன்றேன். என் கண்களில் நீர் நிறைந்துவிட்டது. நான் செய்துவிட்ட காரியத்தின் முழு அர்த்தமும் எனக்கு அப்போது தான் புரிந்தது. தவறு செய்துவிட்ட உணர்ச்சியும், மன்னிப்புக் கேட்கிற பாவமும், வருத்தமும் என் மனத்திலே தோன்றின.

அன்று புது வார்த்தைகள் பலவற்றைக் கற்றுக் கொண்டேன். என்னென்ன வார்த்தைகளை அன்று முதல் தடவையாகக் கற்றுக்கொண்டேன் என்று இப் போது சொல்லத் தெரியவில்லை எனக்கு. அம்மா, அப்பா, தங்கை, உபாத்தியாயர் முதலிய வார்த்தைகள் அன்று எனக்குத் தெரியவந்தன. உலகம் என்கிற தத்துவம் "ஆரானின் கோல்போல" பூத்துக் குலுங்கியது என் உள்ளத்தில். அன்று நான் படுக்கையில் படுத்து உறங்கப் போகுமுன் மறுநாள் பொழுது எப்போது விடியும், கற்றுக் கொள்வதை எப்போது மீண்டும் தொடங்குவோம் என்று ஏங்கினேன். அதைப்போன்ற இன்ப நாள் அதற்குமுன் என்வாழ்வில் இருந்ததேயில்லை.

# 5

என் மனமும் ஆத்மாவும் விழித்தெழுந்த அந்த வருஷம் (1887) கோடையில் நடந்த பல விஷயங்கள் எனக்கு நன்கு ஞாபகம் இருக்கின்றன. கையால் தொட்ட எல்லா வற்றினுடைய பெயரையும் துடியாக விசாரித்து அறிந்து கொண்டேன். உலகுடன் என்னைப் பிணைத்த பிணைப்புகள் இறுகிக்கொண்டிருந்தன, எனக்குத் தன்னம்பிக்கையும் ஆனந்தமும் அதிகரித்துத் தினைதினை வளர்ந்தன.

டெய்ஸிப் பூக்களும் மற்றும் பல வண்ணப் பூக்களும் மலருகிற காலத்தில் மிஸ் ஸல்லிவன் என்னைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு வயல்வெளிகளில் சுற்றி வருவாள். குடியானவர்கள் பூமியை உழுது விதை விதைக்கப் பண்படுத்திக் கொண்டிருந்தார்கள். டென்னஸ்ஸி ஆற்று ஓரத்தில் மணிக்கணக்காக உட்கார்ந்து கொண்டு கைகளால் பேசுவோம். இயற்கை மனிதனுக்கு அளிக்கும் உதவிகளையும் பயன்களையும் நான் தெளிவாக அறிந்துகொண்டேன். மழை பெய்கிறது; வெய்யில் காய்கிறது; இரண்டுமாகச் சேர்ந்து பூமியிலிருந்து பல விதைகளை முளைக்க வைக்கின்றன. பார்க்க அழகாகவுள்ள மரங்கள், தின்னப் பழம் தரும் மரங்கள், எல்லாம் மனித குலத்துக்கு இயற்கையின் பிரஸாதங்கள். பறவைகள் எப்படித் தங்கள் கூடுகளைக் கட்டுகின்றன என்று அறிந்து கொண்டேன்; ஊர் ஊராய் அவை எந்தெந்தக் காலத்தில் பறந்து திரிந்து வாழுகின்றன, என்னென்னவற்றைத் தின்று காலங்கழிக்கின்றன என்று அறிந்துகொண்டேன். அணில், சிங்கம் மற்றும் பல ஜந்துக்களும் மிருகங்களும் பக்ஷி பறவைகளும், ஊர்வனவும் ஓடுவனவும் பறப்பனவும் எப்படி வாழுகின்றன என்று கேட்டுத் தெரிந்துகொண்டேன். என் அறிவு வளரவளர இவ்வுலகத்திலுள்ள வாழ்க்

கையில் எனக்கிருந்த ஈடுபாடும் ஆனந்தமும் அதிகரித்தன. கணக்கும் பூகோளமும் கற்றுக் கொடுத்தாள் மிஸ் ஸல்லிவன். ஆனால் அதைத் தொடங்குமுன் இயற்கைக் காட்சிகளில் அழகைக் காணவும், ரசிக்கவும் கற்றுக் கொண்டேன். தோட்டத்திலும் வயல் வெளியிலும் திரிவதிலே இன்பம் காணக் கற்றுக்கொண்டேன். ஒவ்வொரு புல்லையும் பூண்டையும் தடவிப் பார்த்து அதில் அழகை உணரக் கற்றுக்கொண்டேன். என் சின்னத் தங்கையின் கன்னச் சுழிப்பிலே, அவள் முகத்திலேயும் அழகைக் கண்டேன். இயற்கைக்கு அடுத்தபடியாக என் உள்ளத்தில் இடம் பெற்றது அவள்தான். "பறவைகளும், பூக்களும், மனித இனமும் ஒரே குலம்" என்கிற எண்ணம் ஏற்பட்டு என்னுள் வலுத்தது.

இயற்கை எப்போதுமே இரக்கத்துடனும் அன்புடனும் மனிதனை நடத்துவதில்லை என்று என் அனுபவத்திலேயே ஒருநாள் கண்டுகொண்டேன். ஒருநாள் நானும் மிஸ் ஸல்லிவனும் வழக்கம்போல எங்கெல்லாமோ வெகுதூரம் சுற்றிவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்தோம். காலை வேளை, சூரிய ஒளி நிறைந்ததாக நேர்த்தியாக இருந்தது. நாங்கள் வீடு திரும்பும்போது இறுக்கமாகவும் இருந்தது. வானத்திலே கருமேகங்களும் தோன்றிவிட்டன. வழியில் இருந்த பெரிய மரங்களினடியில் தங்கி இளைப்பாறிக்கொண்டே திரும்பினோம். வீட்டை அணுகிவிட்டோம். ஒரு பெரிய செர்ரீ மரத்தின் நிழலில் உட்கார்ந்திருக்கும்போது அலுப்பு மேலிட்டது. அந்த நிழலின் அருமை அப்போது எனக்கு நிதரிசனமாகத் தெரிந்தது. மரத்தின் கிளைகள் தாழ்ந்திருந்தன. மிஸ் ஸல்லிவனின் உதவியுடன் நான் கீழ்க்கிளை ஒன்றின்மேல் ஏறி உட்கார்ந்துகொண்டேன். மரக் கிளையில் மிகவும் குளுமையாகவும் மனத்துக்கு உல்

லாஸமாகவும் இருந்தது. மிஸ் ஸல்லிவன்தான் சொன்னாள். வீட்டுக்குப் போய் மத்தியான உணவை எடுத்துக் கொண்டு வந்தால், அங்கேயே இருவரும் ஆனந்தமாக உணவருந்தலாமே என்றாள். வீட்டுக்குப் போய் அவள் உணவைக் கொண்டுவரும் வரையில் நான் அந்த மரக் கிளையிலேயே அசையாமல் உட்கார்ந்திருப்பது என்று தீர்மானித்தேன்.

திடீரென்று மரத்தில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. குளுமையாக இருந்த மரக்கிளையில் இப்போது இறுக்கமாக இருந்தது. சூரிய வெப்பம் என்பதே எங்கும் இல்லாத மாதிரி ஒரு உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. ஒளியின்மை என்பதற்கு என்னைப்பற்றிய வரையில் வெப்பம் இன்மை என்றுதான் அர்த்தம். பூமியிலிருந்து ஒருவிதமான புது வாடை வீசியது. இடியும் மழையும் காற்றும் குமுறத் தொடங்குவதற்கான அறிகுறி அந்த வாடை என்பது எனக்கு அனுபவபூர்வமாகத் தெரியும். என்னுள்ளே வார்த்தைகளில் விவரிக்க வொண்ணாத பயம் குடி புகுந்தது. தனிமை என்பது என்ன என்பதை இப்போது உணர்ந்தேன் என்று சொல்லவேண்டும். என் நண்பர்கள் என்று சொல்லக்கூடியவர்கள் யாரும் அச்சமயம் அங்கில்லை. மரக்கிளையில் உட்கார்ந்திருந்த எனக்குத் தரையில், பழக்கமான பூமியில், காலடி வைத்தால் தேவலை என்றிருந்தது. எல்லையற்ற, முன்பின் அறியாத ஒரு கடல் என்னை விழுங்கக் காத்திருந்ததுபோல எனக்கு ஒரு உணர்ச்சி ஏற்பட்டது. நான் சந்தடி செய்யாமல், அசையத் துணியாமல், அப்படியே மரக்கிளையைக் கட்டி அணைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தேன். என் உயிரையே குடித்து விட ஒரு ராக்ஷஸன் தயாராகிக்கொண்டிருப்பதுபோல இருந்தது. என் உபாத்தியாயினி திரும்பி வரமாட்டாளா

என்று ஏங்கினேன். வராமலே இருந்துவிட்டாளானால் என்ன செய்வது என்றும் புரியவில்லை. மரக்கிளையை விட்டுக் கீழே இறங்கிவிட்டால் நல்லது. அதுதான் நான் முதலில் செய்யவேண்டிய காரியம் என்று எண்ணினேன்.

ஒரு விநாடி அங்கு ஆழ்ந்த மௌனம் நிலவியது. பிறகு திடீரென்று பல்லாயிரம் இலைகள் ஒரே சமயத்தில் சலசலத்தன. அந்த மரமே ஒருதரம் ஆடியது; குலுங்கியது. அந்தப் பிரும்மாண்டமான மரம் ஒரு புல் போலக் காற்றில் அலைந்தது. மரக்கிளையை நான் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிராவிட்டால் அந்த உலுக்கலில் கீழே விழவே விழுந்திருப்பேன். பூமியிலிருந்து பிய்த்துக் கொண்டு கிளம்பிவிடும்போல அந்த மரம் சாய்ந்தது; அலைந்தது. என்னைச் சுற்றிலும், எங்கும், இலைகள் விழுந்து பறந்தன. சிறுசிறு கிளைகள் முறிந்து விழுந்தன. கீழே குதித்துவிட்டால் நல்லதென்றிருந்தது எனக்கு. ஆனால் பீதியில் மரக்கிளையை இரண்டு கைகளாலும் இறுகப் பற்றிக்கொண்டு இருந்தேன். மரக்கிளையோடு கிளையாக ஒட்டிக்கொண்டேன். விர் விர் என்று என் உடலைத் தொடுகிறதுபோல மரத்தின் கிளைகள் விசிறி ஓய்ந்தன. விட்டு விட்டு இடித்த இடி அந்த மரத்தையே தாக்குவதுபோல இருந்தது; நான் தொத்திக்கொண்டிருந்த கிளையில் பாய்ந்து என் மேலும் பாய்ந்துவிடும்போல இருந்தது. மரமும் நானும் சேர்ந்து பூமியில் சாய்வோம் என்று என்னுள்ளே உணர்ச்சி ஓங்கி எழுந்தது. அந்த உணர்ச்சி உச்சத்தை எட்டும்போது என் உபாத்தியாயினி வந்து என்னைத் தொட்டுத் தூக்கிக் கீழே இறக்கிவிட்டாள். காலடியில் மண் பூமி பட்டதும் என் ஆனந்தம் எல்லையற்றதாகியது. ஆனந்த வேகத்தில் என் உடல் நடுங்க நான் என் உபாத்தியாயினியைக் கட்டி அணைத்துக்கொண்டேன்.

எனக்கு ஒரு புதுப் பாடம் தெரியவந்தது. "இயற்கை அன்னை தன் குழந்தைகளிடம் போர் தொடுக்கிறாள்; கருணையற்றவளாக இருக்கிறாள். மிருதுவான பாதத்திலே கூர்மையான நகங்களை மறைத்து வைத்திருக்கிறாள்" என்று தெரிந்துகொண்டேன்.

இந்த அனுபவத்திற்குப் பிறகு பல நாட்கள் வரையில் எனக்கு மரம் ஏறுவது என்றாலே பயம்தான். அதை எண்ணும்போதே பீதியடைவேன் நான். தழைத்துப் பூத்திருந்த, அடர்ந்த மிமோஸா மரம்தான் என்னை இந்தப் பயத்தை வெற்றிகொள்ளக் கடைசியில் ஒருநாள் தூண்டியது. ஓர் அழகான வஸந்தத்தின் காலைப்பொழுதில் அற்புதமான ஒரு வாசனை என் உள்ளத்தைக் கவர்ந்தது. அப்போது நான் ஏதோ வாசித்துக்கொண்டிருந்தேன். எழுந்து நின்று என் கைகளை முன்னால் நீட்டினேன். நான் இருந்த கோடைவிடுதியிலே வஸந்தம் என்கிற உயிர் பரவி வியாபித்து நிற்பதுபோல; தோன்றியது. "என்ன அது?" என்று என்னையே கேட்டுக்கொண்டேன். அது மிமோஸா மலர்களின் வாசனை என்பது எனக்கு அடுத்த விநாடியே தெரிந்துவிட்டது. தோட்டத்தின் ஒரு கோடியில், பாதை திரும்புகிற இடத்தில், வேலியோரமாக இருந்தது மிமோஸா மரம் என்பது எனக்குத் தெரியும். அதைத் தேடிக்கொண்டு, தட்டித் தடுமாறிக்கொண்டு சென்றேன். ஆம். அதோ, வெப்பமான சூரிய ஒளியில், மணம் வீசிக்கொண்டு நின்றது அந்த மரம். மலர் அடர்ந்த அதன் கிளைகள் தாழ்ந்து தரையைத் தொட்டன. உலகில் இவ்வளவு அழகான வஸ்து வேறு என்ன இருந்திருக்கிறது! மிமோஸா மலர்கள் தொட்டால் கருகிவிடும், அவ்வளவு மெலிந்தவை அவை. பூமியிலே தான் நின்றது; என்றாலும் அது சுவர்க்க லோகத்து

மரம். நான் போன பாதையெல்லாம் பூச் சொரிந்து நின்றது அந்த மரம். அதன் அடிப்பாகத்தைத் தொட்டுக் கொண்டே சற்றுத் தயங்கினேன். பிறகு எட்டுகிற உயரத்தில் பிரிந்த கிளையின்மேல் கால் வைத்து அந்த மரத்தில் ஏறி உட்கார்ந்துகொண்டேன். காய்ந்திருந்த மரப்பட்டை என் கைகளில் உறுத்திக் காயப்படுத்தியது. கிளைகளும் என் கைகளால் அணைக்க முடியாதபடி பெரிதாக இருந்தன. அசாதாரணமான, ஆச்சரியமான, எல்லை யற்ற இன்பம்தருவதான ஒரு காரியம் செய்வதுபோன்ற நினைப்பு ஏற்பட்டது எனக்கு. ஆகவே கிளைக்குக் கிளை ஏறினேன். பல நாட்களுக்குமுன் அந்த மரத்தோடு மரமாக வளர்ந்துவிடுகிறமாதிரி யாரோ ஒருவர் நிர்மாணித் திருந்த ஆசனத்தில் உட்கார்ந்தேன். வெகுநேரம் அந்த மிமோஸா மரத்தின்மேல் உட்கார்ந்திருந்தேன் நான். ஏதோ மேகத்தின் மேலேறிச் சஞ்சாரம் செய்யும் தேவதை என்று என்னைப்பற்றி நினைப்பு எனக்கு. அதற் குப் பிறகு அந்தத் தேவவிருக்ஷத்தின்மேல் பல மணி நேரம் பல நாட்கள் உட்கார்ந்திருக்கிறேன் நான். அப்படி உட் கார்ந்திருக்கும் நேரத்திலெல்லாம் என் சிந்தனைகள் நேர்த்தியான சிந்தனைகளாக என் கனவுகள் ஒளியும் பிரகாசமும் நிறைந்த கனவுகளாக இருக்கின்றன.

## 6

**பா**ஷைத் திறவுகோல் இப்போது எனக்குக் கிடைத்து விட்டது. அதை உபயோகித்துக் கற்றுக் கொள்ள நான் துடியாகத் துடித்தேன். காதால் வார்த்தைகளைக் கேட்டுக் குழந்தைகள் அதிகமாகச் சிரமப்படாமல் பாஷை யைக் கற்றுக்கொண்டு விடுகின்றன. பிறர் வாயிலிருந்து

வருகிற வார்த்தைகளைப் பறக்கும் பக்ஷிகளைப் பிடிப்பது போல அவர்கள் ஆனந்தமாகப் படித்துவிடுகிறார்கள். காதில்லாத குழந்தையின் விஷயம் இப்படியல்ல; மெதுவாக சிரமப்பட்டுத்தான் வார்த்தைகளை அது கற்றுக்கொள்ள முடியும். வழி எதுவானால் என்ன? முடிவு ஆச்சரியகர மானது, ஆனந்தமானது. ஒரு வஸ்துவின்பெயரைச்சொல்ல அறிந்துகொள்வது முதல் படிப்படியாக நகர்ந்து முன்னேறி வெகுதூரம் செல்கிறோம் நாம். திக்கித் திணறிச் சொல்லும் நம் முதல் வார்த்தைக்கும் ஷேக்ஸ்பியரின் கவிதையில் ஒரு வரியில் காணும் கருத்து ஆழத்துக்கும் உள்ள தூரம் அளவில் அடங்காது.

முதலில் என் உபாத்தியாயினி ஏதாவது ஒரு விஷயத் தைப்பற்றிச் சொன்னால், நான் அதிகமாகக் கேள்விகள் கேட்கமாட்டேன். என் சிந்தனைகளும் குறுகியவை; எண்ணங்களும் தீர்மானமான உருப் பெறாதவை; வார்த்தை களும் போதாது கேள்விகள் கேட்க. ஆனால் நாளடைவில், எனக்கு விஷயம் தெரியத் தெரிய, வார்த்தைகள் அதிக மாகப் பழகப்பழக, என் கேள்விகள் அதிகரித்தன. அவற்றின் ஆழம் ஆழ்ந்தது; அகலம் விரிந்தது. ஒரு விஷயத்தைப் பற்றியே திரும்பத் திரும்பத் கேட்டுத் தெரிந்துகொண்டேன். ஆவலுடனும், ஒரு துடிப்புடனும் விஷயத்தை கிரஹித்துக் கொண்டேன். சில சமயம் எப்போதோ ஒரு பழைய அனுபவத்தினால் மனசில் ஏற் பட்ட ஓர் உருவத்தை ஒரு புது வார்த்தை என் கற்பனையில் மீண்டும் தோற்றுவிக்கும்.

"அன்பு" என்கிற வார்த்தையின் அர்த்தத்தைப் பற்றி நான் முதல் முதலாகக் கேட்டறிந்துகொண்ட காலைப் பொழுது எனக்கு ஞாபகம் வருகிறது. எனக்கு அப்போது அதிகமாக வார்த்தைகள் தெரியாது. உரிய காலத்திற்கு

முன் எங்கள் தோட்டத்தில் பூத்திருந்த வயலெட் புஷ்பங்களைக் கொணர்ந்து என் உபாத்தியாயினியிடம் தந்தேன். அவள் எனக்கு ஒரு முத்தம் தர முயன்றாள். ஆனால் அப்போது எனக்கு என் தாயாரைத் தவிர யார் முத்தமிட்டாலும் பிடிக்காது. என்னைக் கட்டியணைத்துக் கொண்டு மிஸ் ஸல்லிவன் "நான் ஹெலனிடம் அன்பாயிருக்கிறேன்" என்று என் கையில் எழுதினாள்.

"அன்பு (காதல்) என்றால் என்ன?" என்று நான் கேட்டேன்.

என்னை இன்னும் இறுக அணைத்துக்கொண்டாள் மிஸ் ஸல்லிவன். "அன்பு என்பது இங்கிருக்கிறது' என்று என் இதயத்தைத் தொட்டுக் காட்டினாள். என் இதயம் "பட் பட்" என்று அடித்துத் துடித்துக் கொண்டிருந்தது எனக்கு அப்போதுதான் தெரியவந்தது. அவள் வார்த்தைகள் எனக்குச் சட்டென்று புரியவில்லை. என் கையால் தொடமுடியாத எதையும் புரிந்துகொள்ள எனக்கு அப்போது சக்தியில்லை.

என் உபாத்தியாயினியின் கையிலிருந்த வயலெட் பூக்களை முகர்ந்தபடியே பாதி சைகைகளாகவும் பாதி வார்த்தை யாகவும் கேட்டேன்: "மலரின் மணம்தான் அன்பா?" என்று.

"இல்லை."

சிறிது நேரம் யோசித்தேன். சூரிய உஷ்ணம் கதகதப்பாக இருந்தது.

"இதுதானே அன்பு?" அந்தக் கதகதப்பு வந்த திசையைக் காட்டி, "இதுதானே அன்பு?" என்று கேட்டேன்.

சூரியனின் கதகதப்பான உஷ்ணம்தான் உலகில் உள்ளது எல்லாவற்றையும் வளரச் செய்கிறது. சூரியனை விட அழகானது வேறு என்னதான் இருக்கமுடியும்? ஆனால் மிஸ் ஸல்லிவன் "இல்லை" என்று தலையை ஆட்டினாள். எனக்கு ஏமாற்றமாக இருந்தது; திகைப்பாகவும் இருந்தது. அன்பு என்றால் என்ன என்று என் உபாத்தியாயினியால் சொல்ல முடியவில்லை என்பது எனக்கு அசாதாரணமானதாகப்பட்டது; அசாத்தியமானதாகவும்பட்டது.

இதற்கு இரண்டொரு நாட்களுக்குப் பிறகு, ரகவாரியான பலவிதமணிகளை நான்கோர்த்துக்கொண்டிருந்தேன். இரண்டு பெரிய மணிகள், பிறகு மூன்று ஒரே மாதிரியான சிறு மணிகள் என்று ஒரு வரிசையில் சேர்த்துக்கொண்டிருந்தேன். நான் செய்த தவறுகளைச் சுட்டிக்காட்டித் திருத்தினாள் மிஸ் ஸல்லிவன். மிகவும் பொறுமையுடன் கடைசியில் நானாகவே ஒரு தவறைக் கண்டு பிடித்துத் திருத்தினேன். பிறகு ஒவ்வொரு தடவையும் மணியை எடுத்துக் கோர்க்கும்போதும் நிதானித்துச் செய்வேன். அந்தச் சமயம் மிஸ் ஸல்லிவன் என் நெற்றியைத் தொட்டாள். என் கையில் "யோசி" என்று எழுதிக் காட்டினாள்.

எனக்குப் புரிந்துவிட்டது. நான் நிதானித்துச் செய்த காரியத்துக்கு "யோசனை செய்வது" என்று பெயர் என்று புரிந்துகொண்டேன். கையால் தொடமுடியாத, அருவமான ஒரு விஷயத்தை நான் அறிந்துகொள்ளத் தொடங்கியது அன்றுதான்.

இதற்குப் பிறகு வெகு நேரம் நான் அசைவற்று இருந்தேன். யோசனையில் ஆழ்ந்திருந்தேன். என் முன் இருந்த மணிகளை நான் மறந்துவிட்டேன். யோசித்து

யோசித்து அன்பு என்றால் என்ன என்று கண்டு கொள்வது என்று முயற்சித்தேன். அன்று வானத்திலே மேகங்கள் இருந்தன. பகலில் முன்பகுதி பூராவும் சூரியனே வெளி வரவில்லை; சிறு தூறல் கூடத் தூறியது. ஆனால் நண் பகலில் சூரியன் மேக படலத்திலிருந்து வெளிப்பட்டுப் பிரகாசித்தது, "இது தானே அன்பு ?" என்று என உபாத்தியாயினியை மீண்டும் கேட்டேன்.

"சூரியன் தோன்றுவதற்குமுன் வானத்தில் உலாவிய மேகங்களைப் போன்றது அன்பு" என்றாள் மிஸ் ஸல்லிவன். பிறகு இந்த வார்த்தைகள் எனக்குப் புரியாதென்று இன்னும் எளியவார்த்தைகளில் சொன்னாள்: "மேகங்களைக் கையால் தொடமுடியாது; இல்லையா? ஆனால் மழையை உணரமுடிகிறது, மழை பெய்தால் மலர்கள் சந்தோஷமுறுகின்றன. உஷ்ணத்தில் தாக முற்ற பூமி மழையைக் குடிக்கிறது ஆனந்தமாக. அன்பு என்பதையும் கையால் தொடமுடியாது. ஆனால் அதனால் ஏற்படுகிற இன்பத்தை, ஆனந்தத்தை உணர முடிகிறது. அன்பு இல்லாவிட்டால் சந்தோஷம் என்பதே இராது. உனக்கு விளையாட வேண்டும் என்றுகூடத் தோன்றாது."

பின்னர்தான் அந்த அழகான உண்மை என் மனத் திற்குத் தெளிவாயிற்று. கண்ணுக்குத் தெரியாதபிணைகள் என் உள்ளத்தையும் மற்றவர்களுடைய உள்ளங்களையும் பிணைத்திருந்தன. அந்தப் பிணைகள்தான் அன்பு என்று அறிந்து கொண்டேன்.

எனக்குக்கல்விபுகட்டத் தொடங்கிய நாட்களிலிருந்தே மிஸ் ஸல்லிவன் ஒரு பழக்கம் செய்தாள். காது கேட்கிற குழந்தைக்குச் சொல்லித் தருகிறமாதிரியேதான் எனக்கும் சொல்லித்தந்தாள். இதில் ஒரே ஒரு வித்தியாசம்தான்

வாக்கியங்களை நாவால் உச்சரிப்பதற்குப் பதில் என் உள்ளங்கையில் அக்ஷரம் அக்ஷரமாக எழுதுவாள். எனக்குத் தெரியாத வார்த்தைகளையும் வாக்கியங்களையும் அவளே சொல்லுவாள். அவள் கேள்வியையும் என் பதிலையும் அவளே சொல்லுவாள். சம்பாஷணையில் என் பங்கையும் அவளே ஆரம்ப காலத்தில் பூர்த்தி செய்து வந்தாள்.

பல வருஷங்கள் இப்படிச் சொல்லித் தந்தாள். ஏனென்றால் தினசரி வழக்கிலிருக்கும் எளிய பதங்களையும் வாக்கியங்களையுங்கூட பேசமுடியாத குழந்தை சுலபத்தில் அறிந்து கொள்வதில்லை. காதுள்ள குழந்தை பிறர் பேசுவதையும் சொல்வதையும் கேட்டு அறிந்துகொண்டு விடுகிறது. வீட்டில் கேட்கிற பேச்சு அதன் சிந்தனையைத் தூண்டுகிறது. சம்பாஷணைத் திறனை வளர்க்கிறது. இந்தமாதிரிக் கேள்வி அறிவு செவிட்டுக் குழந்தைக்கு வர வழியில்லை. இதைத் தெரிந்துகொண்டு என் உபாத்தியாயினி எனக்கு இதற்குப் பதிலாகப் பேசச் சக்தி வர வேறு வழி வகுத்துக் கொடுத்தாள். தன் காதில் விழுந்ததையெல்லாம் எனக்கு என் உள்ளங்கையில் எழுதி எழுதி அறிவுறுத்தினாள். சம்பாஷணையில் நானும் எப்படி, எந்த வழிகளில் பங்கு கொள்ளவேண்டும் என்று என் கையில் எழுதி எழுதிக் காட்டினாள். நானாக ஒரு சம்பாஷணை துவக்குவது என்பது பல நாட்களுக்குப் பிறகுதான் எனக்கு வந்தது. கெட்டிக்காரத்தனமாகப் பேச்சில் கலந்துகொள்வது என்பது அதற்குப் பலநாள் கழித்துத்தான் எனக்கு வந்தது.

செவிடர்களும் குருடர்களும், சாதாரணமாக எந்தச் சம்பாஷணையிலுமே கலந்துகொள்வது என்பது துர்லபம் தான். ஒரே சமயத்தில் செவிடாகவும் குருடாகவும் இருப்பவர்களுக்கு இந்தச் சிரமம் இரட்டிக்கிறது. மனிதர்களின்

குரலில் உள்ள பாவம் எதுவும் இவர்களுக்குத் தெரியாது. வார்த்தைக்கு அர்த்தபுஷ்டி தரும் குரல் என்பதே என்ன என்பது இவர்களுக்குத் தெரியாது. தவிரவும் பேசும் போது ஏற்படுகிற முகபாவத்தையும் இவர்களால் காண முடியாது. நாக்கையும்விடக் கண்களால் வார்த்தைகளுக்கு அதிகமான அர்த்தபாவம் ஏற்பட முடியும் என்பது உலகம் அறிந்த விஷயம்தானே?

## 7

என் கல்வியில் மிகவும் முக்கியமான கட்டம் நான் படிக்கக் கற்றுக்கொண்டதுதான்.

சில வார்த்தைகளை எழுத்துக் கூட்ட நான் கற்றுக் கொண்டதுமே என் உபாத்தியாயினி எனக்குச் சில அட்டைகளைத் தந்தாள். அந்த அட்டைகளில் கைவிரலால் தடவி உணரும்படி எழுத்துக்கள் எழுதப்பட்டிருந்தன. அச்சிட்ட ஒவ்வொரு வார்த்தையும் ஒரு வஸ்து, ஒரு காரியம் அல்லது ஒரு குணத்தின் பெயர் என்பதை நான் அதி சீக்கிரமே உணர்ந்துகொண்டேன். சிறு சிறு வாக்கியங்கள் அமைக்கும்படியாக என்னிடம் ஒரு சட்டம் இருந்தது. ஆனால் அதில் வாக்கியங்கள் எழுதக் கற்றுக் கொள்ளுமுன் நான் வார்த்தை அட்டைகளைக்கொண்டே வாக்கியங்களை அமைப்பேன். "பொம்மை" "படுக்கையில்" "இருக்கிறது" என்கிற மூன்று வார்த்தைகளுக்குரிய அட்டைகளையும் எடுத்துச் சேர்த்து வைப்பேன். அதே சமயம் என் பொம்மையையும் எடுத்துப் படுக்கையில் போடுவேன்.

"பெண்" என்கிற வார்த்தை அட்டையை என் சட்டையில் குத்திக்கொண்டு நான் நின்றேன் என்று

மிஸ் ஸல்லிவன் சொல்லுகிருள். எனக்குப் பக்கத்தில் "இங்கே" "நிற்கிருள்" என்கிற வார்த்தைகளையும் எடுத்து வைத்துக் கொண்டேனும். இந்தமாதிரி வார்த்தைகளையும், வார்த்தை அட்டைகளையும் வைத்துக் கொண்டு விளையாடுவதில் எனக்கு இருந்த ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. என் உபாத்தியாயினியும் மணிக் கணக்காக என்னுடன் இந்த விளையாட்டில் கலந்து கொள்வாள். என் அறையில் இருந்த சாமான்களை எல்லாம் வைத்து, வார்த்தை அட்டைகளையும் சேர்த்து வாக்கியங்களாகச் செய்து ஆனந்திப்பேன் நான்.

எழுத்து அட்டையிலிருந்து புஸ்தகங்களுக்கு நகர அதிக நாளாகவில்லை. ஆரம்ப வாசகத்தில் கையால் தடவி எனக்குத் தெரிந்த பழக்கமான வார்த்தைகளை எல்லாம் தேடி எடுத்து விடுவேன். ஒளிந்து பிடித்து விளையாடுவது போன்றது இந்த விளையாட்டு. இப்படியே நான் வாசிக்கவும் ஆரம்பித்துவிட்டேன். தொடர்ந்து கதைகளைப் படிக்க ஆரம்பித்தது பற்றிப் பின்னர் அதற்குரிய இடத்தில் சொல்லுகிறேன்.

பலநாட்கள் எனக்குத் திட்டமாகப் பாடம் என்று எதுவும் சொல்லித் தரப்படவில்லை. மிகவும் உற்சாகத்தோடு நான் வாசிக்கும்போதுகூட அது விளையாட்டுப் போலத்தான் இருந்தது. எனக்கு எது சொல்லித் தந்தாலும் மிஸ் ஸல்லிவன் அதற்கு அனுஸரணையாக ஒரு அழகான பாட்டு அல்லது கதை சொல்லுவாள். என் கவனத்தை எது கவர்ந்தாலும் சரி, அதில் அவளும் ஈடுபட்டு சிறு பெண்ணைப்போல உற்சாகத்துடனும் சொல்லித் தருவாள். எத்தனையோ குழந்தைகள் பயப்படுகிற பாடங்கள் எல்லாம், சிரமமான கணக்குகள், இலக்கணம், சூத்திரங்கள் எல்லாம் மிஸ் ஸல்லிவனின் உதவி

யால் எனக்குச் சுலபமாகவே வந்தன. பாடம் என்பதே எனக்கு இன்பமான விளையாட்டாகவும் பொழுது போக்காகவும் இருந்தது.

மிஸ் ஸல்லிவனுக்கு என் ஆசைகள், என் இன்பங்கள், இவற்றில் அசாதாரணமான ஓர் அனுசரணை இருந்தது. இது எப்படி ஏற்பட்டது என்று சொல்ல எனக்குத் தெரியாது. குருடர்களுடன் பலநாள் பழகியதால் ஏற்பட்டதாக இருக்கலாம். தவிரவும் எதையும் விவரித்துப் புரிந்து கொள்ளும்படியாகச் சொல்வதில் ஓர் அதிசயமான சக்தி இருந்தது அவளுக்கு. என் மனத்தைக் கவராத விஷயங்களை அவள் மூடமாகச் சொல்லி விட்டுவிடுவாள். முதல் நாளோ, முதல் வாரமோ நடந்த பாடங்களைப் பற்றிக் கேள்விகள் கேட்டு என்னை உபத்திரவிக்கவே மாட்டாள். விஞ்ஞானத்தைப்பற்றிய ஸ்வாரஸ்யமற்ற கொள்கைகளைக் கூடச் சிறிது சிறிதாக எனக்குச் சொல்லித் தந்தாள். ஆனால் அவள் சொல்லித் தந்த மாதிரியிலே எனக்கு எதுவும் மறக்காது.

நாங்கள் படித்தது பெரும்பாலும் வீட்டுக்கு வெளியேதான். சூரிய உஷ்ணம் நிறைந்த காட்டிலே உட்கார்ந்து படிப்போம். என்னுடைய ஆரம்ப காலத்துப் பாடங்களில் எல்லாம் திறந்த வெளிகளின் மணம் வீசிற்று. பைன் ஊசிகளின் எண்ணெப்பசை நிறைந்த வாசனையும், பழுக்கத் தொடங்கியுள்ள திராக்ஷைக் குலைகளின் வாசனையும், அந்தப் பாடங்களில் நிறைந்துள்ளன. காட்டு டூலிப் மரம் ஒன்றின் நிறைந்த நிழலில் உட்கார்ந்தபடியே, உலகில் உள்ள ஒவ்வொரு விஷயமுமே ஒரு பாடம், ஒவ்வொரு விநாடியுமே ஒரு சிந்தனை என்று எண்ணி இன்புற்றேன் நான். "உலகில் உள்ளவற்றின் அழகு எனக்கு அவற்றின்

உபயோகத்தையும் கற்றுத் தந்தது" என்று சொன்னால் அது மிகையாகாது. உண்மையில் சொல்லப்போனால் ரீங்காரமிடுவதும், விஸ்ஸென்று பறப்பதும், பாடியதும், பறந்ததும், மலர்ந்ததும், எல்லாம் எனக்குப் பாடங்கள் கற்பித்தன. பெருந்தொண்டை படைத்த தவளைகள், வெட்டுக்கிளிகள் எல்லாம் என் கையில் பயத்தை மறந்து தங்களுக்கு உரிய குரல் எடுக்கும். முட்டை வெடித்து வெளிவந்த பட்டுப் போன்ற கோழிக் குஞ்சுகள் என் நண்பர்கள். காட்டு மலர்கள் மட்டுமின்றி, காய்த்துப் பழுக்கும் கனி வகைகளும் எனக்கு மிகவும் நெருக்கமாக அறிமுகமானவை தான்.பருத்திக்காய் வெடிக்குமுன் அதைப் பிடித்து உணருவேன் நான்; அவற்றின் மிருதுவான நார் பிடித்த தசைகளைக் கையால் தொட்டு அறிந்துகொண்டேன் நான். பயிர் பச்சைகளிலே அலைஅலையாக மோதி முணு முணுத்த காற்றை உணர்ந்தேன். நீண்ட இலைகள் சல சலப்பது தெரியும் எனக்கு. கடிவாளமும் சேணமும் ஏற்க மறுக்கும் என் குதிரைக்குட்டியின் கோபக் குரல் என் அடைத்த காதுகளிலும் விழும். அதன் மூக்கின் வாசனை எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது.

சில சமயம் அதிகாலையில் புல்லிலும் பூவிலும் பனித் துளி தேங்கியிருக்கையிலே நான் தோட்டத்திற்குள் போவேன். கையை முட்டும் ரோஜா மொட்டுகளைப் பிடித்துப் பார்ப்பதில் உள்ள இன்பத்தைச் சிலரே அறிவர்! காலை இளங்காற்றிலே அசைந்தாடும் அல்லிகளின் நாட்டியத்தை அறிந்தவர் சிலரே! சில சமயம் நான் கொய்யும் புஷ்பத்தில் தேன் குடித்துக்கொண்டிருந்த வண்டு என் கையில் சிக்கிக் கொள்ளும். எதிர்பாராது ஏற்பட்ட விபரீதத்தால், பீதியில், இறக்கையோடு சிறிய இறக்கை உரச அந்த வண்டு துடிப்பது தெரியும் எனக்கு.

தோட்டத்தில் எனக்கு மிகவும் பிடித்தமான இடம் பழக்காடுதான். அங்கு ஜூலை மாதத்தில் பழங்கள் பழுக்கும். பீச் பழங்கள் தாமாகவே என் கையில் வந்து விழும். காற்றிலே உதிர்ந்த பழங்கள் என் காலடியில் உருண்டோடும். பழங்களைப் பொறுக்கி மடியில் போட்டுக் கொண்டு, பட்டுப்போன்ற ஆப்பிள் பழங்களை என் கன்னத்தில் வைத்து உருட்டிக்கொள்வேன். சூரியனின் வெப்பம் அந்த ஆப்பிள்களில் இருந்தன. பழங்களை அள்ளிக்கொண்டு, குதித்துக் கும்மாளி போட்டுக்கொண்டு வீடு திரும்புவேன்.

கெல்லர்துறை என்கிற ஒரு பழைய துறைக்கு நாங்கள் அடிக்கடி நடப்போம். அந்தத் துறையில் மரத்தாலான படிக்கட்டுகள் இருந்தன. உள்நாட்டு யுத்தத்தில் டென்னஸ்ஸி ஆற்றைக் கடக்கச் சிப்பாய்கள் அந்தத் துறையை உபயோகித்தார்களாம். அங்கு, அந்தத் துறையில், பல மணி நேரத்தை, பூகோளப் பாடம் கற்றுக்கொண்டு, ஆனந்தமாகக் கழித்திருக்கிறேன் நான். கூழாங்கற்களால் பாலங்கள் கட்டினேன். தீவுகளும் ஏரிகளும் நிர்மாணித்தேன். கால்வாய்கள் வெட்டினேன். விளையாட்டாகச் செய்தேனே தவிர, இதெல்லாம் பாடம் என்கிற நினைப்புக் கூட வரவில்லை எனக்கு. மிஸ் ஸல்லிவன் எரிமலைகளைப் பற்றிச் சொல்லுவாள். புதைந்துபோன பல நகரங்களைப் பற்றிச் சொல்லுவாள். ஓடும் ஐஸ் ஆறுகளைப் பற்றிச் சொல்லுவாள். பரந்த உலகில் உள்ள பல அதிசயங்களைப் பற்றி விவரமாகச்சொன்னாள். களிமண்வரைப்பு எடுத்து மேடு பள்ளமான, கையால் தொட்டு உணர்ந்து கொள்ளக்கூடிய வகையில் மிஸ்ஸல்லிவன் படங்கள்வரைந்தாள். அவற்றைத் தொட்டுப் பார்த்து மலைகளையும் பள்ளத்தாக்குகளையும், ஆறுகள் செல்லும் பாதைகளையும் அறிந்துகொண்டேன்

நான். இதுவும் எனக்கு மிகவும் பிடித்திருந்தது. துருவங்கள், மற்றும் சீதோஷ்ண மண்டலங்கள் பற்றிய செய்திகள் மட்டும் எனக்குப் பலநாள் பிடிபடவில்லை. இப்பொழுதும்கூட இவற்றை விளக்கிக் காட்ட மிஸ் ஸல்லிவன் உபயோகித்த நூலும் குண்டும் ஞாபகம் இருப்பது போல அவ்வளவு விவரமாக எனக்கு முக்கியமான செய்திகள் ஞாபகம் இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

கணக்கு ஒன்றுதான் எனக்கு அவ்வளவாகப் பிடிக்காத பாடம் என்று எண்ணுகிறேன். எண் என்கிற தத்துவம் என்னை ஆரம்ப முதலே கவரவில்லை. கயிற்றில் குண்டுகளைக் கட்டி எனக்கு எண்ணச் சொல்லித்தந்தாள் மிஸ் ஸல்லிவன். கூட்டலும் கழித்தலும் நாளடைவில் கற்றுக்கொண்டேன், அதற்கென்று குழந்தைகளுக்கான குச்சிகளைக் கொண்டு. நாலைந்து வரிசைகளுக்குமேல் கணக்குப் போட எனக்குப் பொறுமை கிடையாது. கணக்குப் போதும் என்று என் மனச்சாட்சி சொல்லிவிடும். வேறு விளையாட்டைத் தேடிக்கொண்டு போய்விடுவேன்.

இதுமாதிரியே மெதுவாக, அதிக அவசரப்படாமல் மிருக சாஸ்திரம், தாவர சாஸ்திரம் இரண்டையும் கற்றுக் கொண்டேன் நான்.

ஒரு சமயம் ஒரு கனவான், அவருடைய பெயர் எனக்கு மறந்துவிட்டது, கற்காலத்து சாமான்கள் சிலவற்றை எனக்கு வெகுமதியாக வழங்கினர். அழகான கோடுகளுடன்கூடிய சில சங்குகள், கிளிஞ்சல்கள், ஒரு பறவையின் கால்போன்ற கோடுகள் உள்ள கற்கள் சில, நீள இலையுடைய ஒரு செடி. இவைதான் சரித்திர காலத்துக்கு முந்திய காலத்திய உலகை எனக்கு அறிமுகம் செய்துவைக்க உதவியவை. மிஸ் ஸல்லிவன் எனக்கு அந்த

நாட்களில் உலகில் இருந்த மிருகங்களின் பெயர்களையும் பழக்க வழக்கங்களையும் சொன்னாள். விசித்திரமான உருவமும், வாயில் நுழையாத பெயரும் படைத்தவை அவை. மரக்கிளைகளை முறித்து உணவாக அருந்தியவை அவை. வெகு காலத்துக்குமுன் அவை சதுப்பு நிலங்களில் சிக்கி அழிந்துவிட்டன. ஆனால் அவற்றைப்பற்றி மிஸ் ஸல்லிவன் சொல்லும்போது எனக்குக் கையெல்லாம் நடுக்கும். கனவில் விசித்திரமான ஜந்துக்கள் பல தோன்றி என்னைப் பயமுறுத்தின. பயங்கரமான அந்தப் பழைய காலத்தின் நினைவால் இப்பொழுது என்கிற காலம் ஆனந்தமானதாக, இன்பமயமானதாகத் தோன்றியது எனக்கு. ரோஜாப் புஷ்பங்களும், சூரிய ஒளியும், குதிரைக் குட்டியின் கனைப்பும் நிறைந்த காலம் அன்றோ இது!

இன்னொரு தடவை எனக்கு வெகுமதியாக வேறு ஒருவர் ஒரு சங்கைத் தந்தார். ஒரு குழந்தையின் உள்ளத்திற்கே உரிய ஆனந்தத்துடனும் ஆச்சரியத்துடனும் அந்தச் சங்கின் கதையைக் கேட்டேன். ஒரு புழு தனக்கென்று நிர்மாணித்துக்கொண்டிருந்த மாளிகை அது. காற்றேயில்லாத இரவுகளில் அந்தப் புழு கடலில் தன் முத்துக் கப்பலில் மிதந்து செல்கிறது. கடலின் சிசுவான இந்தப் புழுவின் வாழ்க்கையைப்பற்றி நான் பல விஷயங்களை அறிந்துகொள்கிறேன். பஸிபிக் சமுத்திரத்திலுள்ள பவளத்துக்கெல்லாம் இந்தப் புழுதான் காரணமாம். இந்துமஹா சமுத்திரத்திலுள்ள முத்துக்களுக்கெல்லாம் கூட இந்தப் புழுவேதான் காரணமாம். பல நாடுகளில் சாக்பீஸ்கள் இருப்பதற்கும் இதே புழுதான் காரணமாம். இவ்வளவையும் நான் தெரிந்துகொண்ட பிறகு எனக்கு "The Chambered Nautilus" என்கிற நூலை வாசித்துக் காட்டினாள். புழு சங்கை நிர்மாணிப்பதுபோலத் தான்

மனித அறிவும் நிர்மாணமாகிறது என்று வற்புறுத்தினாள். ஜலத்திலிருந்து தேவையான பொருளைக் கிரகித்துச் சங்கை அந்தப் புழு அமைப்பதுபோல, அறிவுத் துளிகள் பலவற்றைச் சேர்த்துச் சேர்த்து மனிதன் தன் மனத்தைப் படைக்கிறான். சில சமயம் சிந்தனைகள் முத்துக் குவியல்களாகவும், பவழமலைகளாகவும் ஆகின்றன.

மீண்டும் ஒருதரம் ஒரு சிறு செடியின் வளர்ச்சிதான் பாடத்தின் கருப்பொருளாகியது. ஒரு லில்லிச் செடியை வாங்கி சூரியன் படுகிற ஜன்னலில் வைத்தோம். சீக்கிரமே மூடியிருந்த பச்சை மொட்டுகள் விரியத் தொடங்கின, மெலிந்த வால்கள்போலிருந்த வெளி இதழ்கள் இஷ்டமில்லாமல் மெதுவாகப் பிரிந்தன. உள்ளே இருக்கிற அழகை வெளிப்படுத்த அவை விரும்பவில்லைபோல இருந்தது. ஆனால் வெடிக்கிற காரியம் ஆரம்பித்த பிறகு துரிதப்பட்டது. எல்லாம் வரிசையாகவும் ஒன்றன்பின் ஒன்றாகவும் நடந்தது. இருந்த மொட்டுகளில் ஒரு மொட்டு மட்டும் மற்றவற்றை எல்லாம்விட உயரமாகவும், படாடோபமாகவும், அதிக ஆடம்பரமாகவும் இருந்தது. அது மலர்ந்த வேகமும் ஆர்ப்பாட்டமும் அலாதியாக இருந்தன. நான்தான் ராணி; மற்ற மொட்டுகள் எல்லாம் தன் சேடிகள் என்று அது உணர்ந்திருந்ததுபோலத் தோன்றியது. ஆனால் எல்லா மொட்டுகளும் விரிந்து பூத்த பிறகு அந்தச் செடிக்கு அழகு கூடியது; வாசனை பன்மடங்காகியது.

ஒருதரம் ஒரு கண்ணாடி ஜாடியில் ஜலத்தில் பதினொரு தவளைக் குஞ்சுகள் இருந்தன. அந்த ஜாடியும் செடிகளுக்கு மத்தியில் ஒரு ஜன்னலில்தான் வைக்கப்பட்டிருந்தது. எவ்வளவு ஆவலுடன் அவற்றைப் பற்றி அறிந்துகொண்டேன் என்பது எனக்கு நன்றாக ஞாபகம்

இருக்கிறது. என் கையை ஜலத்தில் விட்டு அந்தத் தவளைக் குஞ்சுகள் குதித்து விளையாடுவதைப் பார்ப்பேன். அவை என் விரல்களுக்கிடுக்கில் புகுந்து புறப்படும். ஒரு நாள் தவளைக் குஞ்சு அந்தக் கண்ணாடி ஜாடி விளிம்புக்கு அப்பால் எட்டிக் குதித்துவிட்டது. தரையில் அது செத்துவிட்டமாதிரிக் கிடந்தது. அதன் வால் மட்டும் ஆடியதிலிருந்து அதற்கு உயிர் இருப்பது தெரிந்தது. நான் அதைத் திரும்பவும் தண்ணீரில் எடுத்துப் போட்டேன். ஆனந்தத்துடன் அந்தத் தவளைக் குஞ்சு தண்ணீரில் சுற்றிச் சுற்றி நீந்தி வந்தது. எம்பிக் குதித்துப் பரந்த உலகத்தைப் பார்த்துவிட்டு வந்த தவளை அது. பெரிய தவளையாகும் வரையில் அந்தக் கண்ணாடி ஜாடிக்குள்ளேயே அடைபட்டுக்கிடக்க அது தயாராக இருந்தது. தவளையானதும் தோட்டத்தின் கோடியில் இருந்த நிழலடர்ந்த தடாகத்தில் குடியேறி கோடை இரவுகளில் தன்னுடைய காதல் கீதத்தை இசைத்தது.

இப்படியாக நான் வாழ்க்கையிலிருந்தே பல விஷயங்களை நேரடியாகக் கற்றுக்கொண்டேன். ஆரம்பத்தில் ஏதோ என்னவோ பலிக்கலாம் என்கிற நம்பிக்கை தவிர வேறு எதற்கும் இடம் இல்லாதிருந்தது. பலிக்கலாம் என்பதைப் பலிக்கச்செய்து, நம்பிக்கைகளை நடைமுறைகள் ஆக்கியவள் மிஸ் ஸல்லிவன்தான். மலர் போல என் அறிவும் விரிந்தது; மணம் பெற்றது. அவள் வந்தபோது என்னைச் சுற்றியிருந்ததெல்லாம் அன்பு, இன்பம், அர்த்தம் என்கிற குணங்கள் கூடித் திகழத் தொடங்கின. அவள் வந்ததிலிருந்து இன்று வரையில் உலகிலுள்ளதிலெல்லாம் உள்ள அழகை எனக்கு எடுத்துக் காட்ட ஏற்பட்ட ஒரு சந்தர்ப்பத்தைக்கூட நழுவவிட்டதில்லை. சிந்தனையாலும், செய்கையாலும், உதாரணத்

தாலும் அவள் என் வாழ்க்கையை உபயோகமானதாகவும் இன்பம் நிறைந்ததாகவும் செய்யப் பாடுபட்டிருக்கிறாள்.

என்னுடைய ஆரம்பகாலக் கல்வி இன்பமாகவும் ஆனந்தமாகவும் இருந்ததற்கு என் உபாத்தியாயினியின் மேதையும், அவளுக்கு என்னிடமுள்ள இரக்கமும், அனுதாபமும், அன்புடன் கூடிய அறிவும்தான் காரணம் என்று சொன்னால் அது மிகையேஆகாது. சந்தர்ப்பமறிந்து சொல்லித் தந்ததினால்தான் என்னால் அவள் சொன்ன விஷயங்களைக் கிரகித்துக்கொள்ள முடிந்தது. கல்வி என்பது கரடுமுரடான கற்கள் நிறைந்த ஆற்றுப் படுகை. அதன்மேல் ஓடுகிற தெளிந்த நீரோட்டத்தைப்போல ஆழமற்றது, தெளிவானது, குழந்தை மனம் என்று அவள் அறிந்திருந்தாள். ஆற்றைப்போலவே குழந்தையின் மனமும் இங்கு ஒரு மேகத்தைப் பிரதிபலிக்கும்; அங்கு ஒரு மலரைப் பிரதிபலிக்கும்; மூன்றாவது இடத்தில் ஒரு புதரைப் பிரதிப்லிக்கும். அந்த ஆறு பெருகி உபயோகப்படுவதற்குக் கண்ணுக்குப் புலப்படாத ஊற்றுக்கள் தேவை; மலை அருவிகள் தேவை; நீர் வீழ்ச்சிகள் தேவை. அவை யவை அவற்றின் இடத்தில்வந்து கலக்கவேண்டும். இல்லாவிட்டால் குழந்தை மனம் என்கிற சிற்றாறு கலங்கிவிடும்; கரைபுரண்டு தண்ணீர் வீணாகிவிடும். மலைகளையும் மடுக்களையும், நீல வானையும், மலரேபோல் பிரதிபலிக்கக் கூடிய திடம் ஏற்படவேண்டும் அந்தச் சிற்றாறுக்கு.

சொல்லிக் கொடுக்க முன் வருகிறவர்கள் யாரும் குழந்தையைப் பள்ளிக்கூடத்தில் வகுப்பு அறை மட்டும் அழைத்துச் சென்றுவிடலாம். ஆனால் பாடம் சொல்லிக் கொடுத்துக் குழந்தையைப் பயனடையச் செய்யக்கூடிய உபாத்தியாயர்கள் அருமை. சுதந்திரம் இல்லாமல் எந்தக் குழந்தையாலும் எதையும் கற்றுக்கொண்டுவிட முடியாது.

சுருசுருப்பாக இருந்தாலும் சரி; ஓய்வு எடுத்துக் கொண்டாலும் சரி; குழந்தைக்கு சுதந்திரம் தேவை. வெற்றியின் வெறியும், தோல்வி, ஏமாற்றம் இவற்றின் தாங்கொணாத நெடியும் குழந்தைக்குப் பரிசயமாகவேண்டும்; அப்போது தான் படிக்காததையும் படித்து வெற்றிகொள்ளக் கூடிய பக்குவம் வரும். பாடபுஸ்தகங்கள் என்கிற பாலைவனத்திலே தெம்பாக முன்னேக்கி நடக்கத் தெம்பு வரும்.

என் உபாத்தியாயினி எனக்கு மிகவும் நெருங்கியவள். அவளில்லாமல் என்னைப்பற்றிச் சிந்திப்பது என்பதே எனக்குப் பழக்கமில்லை. அழகான விஷயங்களில் எனக்குள்ள ஈடுபாடும் ஆனந்தமும் எவ்வளவுதூரம் எனக்கே சுபாவமாக உள்ளது, எவ்வளவுதூரம் அவளால் ஏற்பட்டது என்று என்னல் பிரித்துச் சொல்லமுடியாது. அவளை என் வாழ்வினின்றும் பிரிக்கமுடியாது என்று எண்ணுகிறேன். அவள் காலடிகளையே பின்பற்றிச் செல்லுபவள் நான். என்னில் உள்ள சிறந்த அம்சங்களுக்கெல்லாம் பொறுப்பு அவளே. அவளுடைய அன்பு நிறைந்த செய்கையாலும் சொல்லாலும் எழுப்பப்பட்டவைதான் என் ஆசைகள், என் சக்திகள், என் இன்பங்கள் எல்லாமே.

## 8

டஸ்கும்பியாவுக்கு மிஸ் ஸல்லிவன் வந்ததன்பின் வந்த முதல் கிறிஸ்துமஸ் ஒரு விசேஷப் பண்டிகை. என் குடும்பத்திலிருந்த ஒவ்வொருவரும் என்னைத் திருப்தி செய்யப் பலவிதங்களில் ரகசியமாகப் பாடுபட்டனர். அதைவிட விசேஷமென்னவென்றால் என் குடும்பத்தவர் எல்லோரையும் மகிழ்வித்து ஆச்சரியத்திலாழ்த்த நானும் மிஸ் ஸல்லிவனும் ஏற்பாடுகள் செய்தோம். கிறிஸ்

துமஸ் வெகுமதிகள் பற்றி இருந்த ரகசியமும் ஆர்வமும் எனக்கு ஆனந்தமாகவும் திருப்தியாகவும் இருந்தன. என் ஆசையைத் தூண்டிவிட என்னென்ன செய்யமுடியுமோ அவ்வளவும் செய்தார்கள் என் நண்பர்கள் ; ஏதோ சொல்ல வந்து பாதிவாக்கியத்தில் நிறுத்திவிடுவார்கள். மிஸ் ஸல்லி'வனும் நானும் வெகுமதிப் புதிர்களை விடுவிக்க மிகவும் பாடுபட்டோம். இந்த விளையாட்டு பாஷையையும் வார்த்தைகளையும் வாக்கியங்களையும் அவற்றின் உபயோகம் பற்றியும் எனக்குச் சொல்லித்தந்த அளவு எந்தப் பாடங்களும் சொல்லித் தந்ததில்லை. ஒவ்வொரு நாளும், மாலையில், கணப்பில் மரத்தைப்போட்டு எரித்துக்கொண்டு, வெகுமதிப் புதிர்களை விடுவிக்கும் விளையாட்டில் ஈடுபட்டோம். கிறிஸ்துமஸ் நெருங்க நெருங்க இந்த விளையாட்டு ஜுரவேகத்தை எட்டியது.

கிறிஸ்துமஸுக்கு முந்தியநாள் மாலை டஸ்கும்பியா பள்ளிச் சிறுவர்கள் என்னை அவர்களுடைய விளையாட்டிற்கு அழைத்திருந்தார்கள். பள்ளியில் நடுக் கூடத்தில் தன்னுடைய அதிசயமான கனிவகைகளைத் தாங்கிக்கொண்டு கிறிஸ்துமஸ் மரம் நின்றது, அழகான மரம். அதில் விதவிதமான விளக்குகள் எரிந்துகொண்டிருந்தன. என் சந்தோஷம் கட்டிலடங்கவில்லை. ஆனந்தபரவசமாக நான் அந்த மரத்தைச் சுற்றிச்சுற்றி வந்து குதித்தேன். ஒவ்வொரு குழந்தைக்கும் ஒவ்வொரு வெகுமதி தயாராக இருந்தது என்று அறிந்ததும் என் சந்தோஷம் மேலும் பொங்கியது. நான் மரத்திலிருந்த வெகுமதிகளைத் தொட்டுப் பார்த்தேன். குழந்தைகளுக்கு வெகுமதிகளைத் தரும் வேலையை இரக்கத்துடன் எனக்குத்தந்தார்கள் பள்ளிக்கூட அதிகாரிகள். பிறருக்குத் தருகிற ஆனந்தத்திலே என் வெகுமதிகளைப் பற்றியே நான் கவலைப்படவில்லை. பள்ளியில்

என் வெகுமதிகள் கிடைத்ததும், எனக்கு மறுநாள் எப்போது வரும், என் நண்பர்கள் பேசிப்பேசி புதிர்போட்டிருந்த அந்த மற்ற வெகுமதிகளும் எப்போதுகிடைக்குமோ என்று ஒரே ஏக்கமாக இருந்தது. மறுநாள் எனக்குக் கிடைக்கப்போகிறவை இவைகளையும்விட நன்ருக இருக்கும் என்றும், ஆனல் நான் நாளைவரை அவற்றிற்காகக் காத்திருந்துதான் ஆகவேண்டும் என்றும் மிஸ் ஸல்லிவன் என் ஆவலை அடக்கினுள்.

அன்றிரவு படுக்கையில் படுத்து வெகுநேரம் கண் உறங்காமல் காத்திருந்தேன். நான் தயாராக வைத்திருந்த ஸ்டாகிங்ஸில் ஸாண்டா கிளாஸ் என்னென்ன கொண்டு வந்து போடுவான் என்று பார்க்க விரும்பினேன். கையில் ஒரு புதுப் பொம்மையுடன் ஒரு வெள்ளைக்கரடியுடன் கடைசியில் நான் தூங்கியே போய்விட்டேன்,மறுநாள் அதிகாலையில் " Merry Christmas" என்று சொல்லி ஒவ்வொருவரையும் எழுப்பியது நான்தான். நான் எதிர்பாராத இடங்களிலெல்லாம் எனக்காக வெகுமதிகள் காத்திருந்தன; ஸ்டாகிங்ஸில் மட்டுமல்ல; மேஜை, கட்டில், ஜன்னல் எங்கு பார்த்தாலும் எனக்கு வெகுமதிகள் கிடந்தன. காலடி எடுத்து வைத்தால் காலில் தட்டுப்பட்டது ஒரு கிறிஸ்துமஸ் பரிசு. கையை நீட்டினல் கையில் தட்டியது இன்னெரு பரிசு. என் உபாத்தியாயினி ஒருகானரிப் பறவையை எனக்குப் பரிசாகக் கொடுத்ததும் என் ஆனந்தம் என்கிற கோப்பை நிரம்பி வழியவே தொடங்கிவிட்டது.

அந்தக்கானரியின் பெயர் சின்னடிம். நன்குபழக்கப்பட்ட பறவை அது. என் விரலில் உட்கார்ந்துகொண்டு சர்க்கரையில் ஊறவைத்த செர்ரீ பழங்களைத் தின்னும். அதை எப்படிக் கவனித்து வளர்ப்பது என்பதைத் தெளிவாக மிஸ் ஸல்லிவன் எனக்குச் சொல்லித்தந்தாள். காலையில்

தினம் உணவருந்தியதும் அதைக் குளிப்பாட்டுவேன் நான். அதனுடைய கூண்டைச் சுத்தம் செய்வேன். அதன் கூண்டில் புதுத் தானியங்களும் ஜலமும் வைப்பேன். கூண்டின் குறுக்குத்தடியில் ஒரு புல்பூண்டைக் கட்டி வைப்பேன்.

கூண்டை ஒருநாள் ஜன்னல்படியில் வைத்துவிட்டு நான் டிம்மைக் குளிப்பாட்ட தண்ணீர் கொண்டுவரப் போனேன். நான் திரும்பிவரும்போது கதவைத் திறந்ததும் என் கால்களில் ஊராய்ந்துகொண்டு ஒரு பெரிய பூனை வெளியேறிற்று. நடந்தது என்ன என்று எனக்கு முதலில் புரியவில்லை. ஆனால் கூண்டில் கையை வைத்தேன் டிம்மின் மிருதுவான இறக்கைகள் என் கையில் படவில்லை. அதன் கூர்மையான கால்விரல்கள் என் கைவிரலைப் பற்ற வில்லை. பாவம்! என் சிறிய பாடகனை நான் இனிக் காண மாட்டேன் என்பது எனக்குத் தெளிவாகிவிட்டது.

## 9

என் வாழ்க்கையில் அடுத்தபடி நான் சொல்ல வேண்டிய முக்கியமான சம்பவம் மே 1888-ல் நான் போஸ்டன் நகரம் போனதுதான். நேற்று நடந்ததுபோல எனக்கு ஞாபகம் இருக்கிறது; அந்தப் பிரயாணத்துக்கான ஏற் பாடுகள், என் உபாத்தியாயினியுடன் புறப்பாடு, என் அம்மாவும்கூட வந்தது; கடைசியாக போஸ்டன் நகரை அடைந்தது; எல்லாமே மிகவும் தெளிவாக எனக்கு ஞாபகம் இருக்கின்றன. இரண்டு வருஷங்களுக்குமுன் நான் பால்டிமோருக்குச் செய்த பிரயாணத்திற்கும் இதற்கும் எத்தனை வித்தியாசம்! அமைதியற்ற, உணர்ச்சி மிகுந்த சிறுகுழந்தையல்ல நான் இப்போது. ரெயிலில் இருந்த

எல்லோரும் என்னைத்தான் கவனிக்கவேண்டும் என்று எண்ணவில்லை நான். மிஸ் ஸல்லிவனுக்குப் பக்கத்தில் அமைதியாக உட்கார்ந்திருந்தேன். ஜன்னல் வழியாகத் தான் பார்த்ததையெல்லாம் எனக்குச் சொன்னாள் அவள். அழகிய டென்னஸ்ஸி ஆறு, பரந்த பருத்தி வயல்கள், குன்றுகளும் காடுகளும், ஸ்டேஷன்களில் வெண்மையான பற்கள் தெரியச் சிரிக்கும் நீக்ரோக்கள் எல்லாவற்றையும் பற்றி எனக்குச் சொன்னாள் மிஸ் ஸல்லிவன். பிரயாணிகளுக்கு சோளப் பொறி உண்டையும், தித்திப்புத் தின்பண்டங்களும் கொணர்ந்து தந்தார்கள் இந்த நீக்ரோக்கள். ரெயில் கிளம்பும்போது கைகளை தூக்கி ஆட்டிக்கொண்டிருந்தார்கள். எனக்கு எதிர்த்த ஆஸனத்தில் என்னுடைய பெரிய துணிப்பொம்மையை உட்கார்த்தி வைத்திருந்தேன். அந்தப் பொம்மைக்கு நான் வைத்திருந்த பெயர் நான்ஸி. புது ஆடை உடுத்தியிருந்தேன் அவளுக்கு. தலையிலே ஒரு அழகான ஸன்பானெட் போட்டிருந்தேன். அவள் கண்கள் கண்ணாடி மணிகளாலானவை. சில சமயம் மிஸ் ஸல்லிவனின் பேச்சு அவ்வளவாக ரஸிக்காவிட்டால் நான்ஸியை எடுத்து என் மடியில் வைத்துக்கொண்டு சீராட்டுவேன். மற்ற நேரங்களில் அவள் தூங்குகிறாள் என்று கற்பனை செய்து கொள்வேன். இந்தக் கற்பனை அவளைக் கவனியாத பாவத்துக்கு எனக்கு மன்னிப்புச் சொல்வதுபோல இருந்தது.

நான்ஸியைப் பற்றிச் சொல்ல மீண்டும் அவசியம் ஏற்படாது என்பதனால் இங்கேயே இன்னொரு துக்ககரமான சம்பவத்தையும் சொல்லிவிடுகிறேன். இச்சம்பவம் நான் போஸ்டனை அடைந்தவுடன் நிகழ்ந்தது. அவள் மேலெல்லாம் ஒரே மண்ணாக இருந்தது. நான் மண்ணால் புட்டுகள் சமைத்து அவற்றையெல்லாம் அவள் சாப்பிடத்தான் வேண்டும் என்று அவளைக் கட்டாயப் படுத்தினேன்.

அவளுக்கு மண்புட்டு அவ்வளவாகப் பிடித்ததாகத் தெரிய வில்லை. பெர்க்கின்ஸ் இன்ஸ்டிடியுஷனில் இருந்த வண்ணத்தி ரகசியமாக நான்ஸியைக் குளிப்பாட்ட அழைத்துச் சென்றுவிட்டாள். பாவம்! நான்ஸிக்கு இது தாங்கவில்லை. அடுத்தபடியாக நான் அவளைப் பார்த்த போது அவள் உருவமற்ற ஒரு பஞ்சு மொத்தை ஆகிவிட் டிருந்தாள். அவளுடைய கண்ணுடிக் குண்டுக் கண்களை வைத்துத்தான் அவளை என் நான்ஸி என்று அறிந்து கொள்ள வேண்டியதாக இருந்தது. அந்தக் கண்கள் என்னைக் குற்றம் சாட்டுவதுபோலிருந்தது.

போஸ்டன் நகரில் ரெயில் நின்றதும் ஒரு அழகான தேவதைக் கதை என் கண்முன் நடப்பதுபோலிருந்தது. "ஒருகாலத்தில்" என்பது "இதோ, இப்போது" என்றாகி விட்டது. "எங்கேயோ எட்டாது" என்றிருந்தது என் கைக்கு முன் இருந்தது.

குருடர்களுக்கான பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்தை அடைந் ததும் அங்கிருந்த குருட்டுச் சிறுவர் சிறுமியருடன் நான் சிநேகம் பிடித்துக்கொண்டேன். அவர்கள் எல்லோருக்கும் விரலால் கையில் எழுதும் அந்த எழுத்து வித்தை தெரியும் என்பதை அறிந்துகொண்டு நான் சொல்லவொண்ணாத ஆச்சரியத்தில் ஆழ்ந்தேன். என்னுடைய சொந்த பாஷையிலே மற்றக் குழந்தைகளுடன் பேசுவது என்றால் அது ஆனந்தம்தான் இல்லையா? அதுவரையில் அர்த்தம் புரிந்து சொல்லவேண்டிய ஒரு அந்நியன்மூலம்தான் நான் யாருடனும் பேசலாம் என்கிறமாதிரி இருந்தது. இப்போதோ அந்தச் சிறுவர் சிறுமியருடன் என்னால் நேருக்குநேர் பேச முடிந்தது. லாரா ப்ரிட்ஜ்மன் இருந்து கல்வி கற்றுக் கொண்ட பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்தில் எனக்கு ஸ்தானம் உண்டு. அது என் தேசம் என்று நம்பிக்கை பிறந்தது

எனக்கு. என்னுடைய புதிய நண்பர்கள் குருடர்கள் என்பதை உணரவே எனக்குக் கொஞ்சநேரம் ஆயிற்று. எனக்குக் கண்ணில்லை என்பது எனக்குத் தெரியும்; ஆனால் என்னைச் சுற்றி நின்ற, அன்புடன் ஆவலுடன் என்னுடன் நட்புரிமை பாராட்டிய அந்தக் குழந்தைகள் என்னுடன் விளையாடி என் வாழ்விலே பங்குகொண்ட அந்தக் குழந்தைகள், குருடர்கள் என்று நம்ப என்னால் முடியவில்லை. ஆச்சரியத்துடனும், அனுதாபத்துடனும், துக்கத்துடனும் அவர்கள் கைவிரல்களால் தடவிப் புஸ்தகத்தைப் படித்தனர் என்பதைக் கவனித்தேன் நான். என் கையில் தங்கள் விரலால் எழுதினார்கள். அவர்கள் கையில் என் விரலால் நான் எழுதினேன். இதுபற்றி மிஸ் ஸல்லிவன் எனக்கு ஏற்கனவே சொல்லியிருந்தாள். கண்ணில்லாமையின் துயரம் எனக்குத் தெரியும். அவர்களுக்குக் காதுகள் இருந்தன என்பதனால் அவர்கள் உலகம் என்னுடையதினின்றும் வேறுபட்டது என்று நான் எண்ணினேன். கண்ணுக்குப் பதில் காதின் தீக்ஷண்யம் அவர்களுக்கு இரட்டைப் பங்காக உதவும் என்று எண்ணினேன். ஒருவர்பின் ஒருவராக அந்தக் கண்ணில்லாத குழந்தைகளை நான் கண்டதும் எனக்கு என்னவோபோலிருந்தது. ஆனால் அந்தக் குழந்தைகள் ஆனந்தமாகவும் சந்தோஷமாகவும் திருப்தியுடைய மனத்தினராகவும் இருந்தனர். அதைக் கண்டு நான் என் அதிருப்தியையும் துயரையும் மறந்து அவர்களுடைய நட்பிலே இன்பம் கொண்டேன்.

அந்தக் கண்ணில்லாத குழந்தைகளுடன் ஒரு நாளைக் கழிப்பதற்குள் என் புது இடத்தில் எனக்குத் திருப்தி ஏற்பட்டுவிட்டது. நாட்கள் செல்லச்செல்ல எனக்குப் புதுப்புது அனுபவங்கள் பல ஏற்பட்டன. பல புது அனுபவங்கள் மிகவும் இன்பகரமானவையாக இருந்தன.

அப்பால் பரந்த உலகம் ஒன்று உண்டு என்பதை என் மனம் ஏற்க மறுத்தது. ஏனென்றால் போஸ்டன் நகரம் தான் ஈசுவர சிருஷ்டியிலேயே ஆரம்பமும் முடிவும் என்று எனக்குத் தோன்றியது.

போஸ்டன் நகரில் இருக்கும்போது சரித்திரத்தில் என்னுடைய முதல்பாடம் நடந்தது. பங்கர் குன்றுக்குப் போனோம். அந்த இடத்தில் வீராவேசத்துடன் போர் புரிந்த வீரர்களைப் பற்றி மிஸ் ஸல்லிவன் சொன்னாள். அந்த இடத்தில் நான் நின்றது எனக்கு உத்ஸாகமூட்டிய ஒரு அனுபவமாக அமைந்தது. அங்கு எழுப்பியிருக்கும் நினைவுச் சின்னத்தின் படிகளில் ஏறினேன். படிகளை எண்ணினேன். மேலே போகப்போக எனக்கு ஒரு கற்பனை தோன்றியது. இந்த உயரமான பிரதேசத்திலிருந்துதான் வீரர்கள் தங்கள் விரோதிகளைச் சுட்டார்களோ!

மறுநாள் நீராவிக்கப்பலில் ப்ளிமவுத் சென்றோம். கடலில் என் முதல் பிரயாணம் அதுதான். கப்பலில் நான் போனதும் இதுதான் முதல் தடவை. கப்பல் என்ஜின் வேலை செய்தபோது இடி உறுமுவதுபோல இருந்தது. எனக்கு அழுகையே வந்துவிட்டது, மழையும் வந்து விடப்போகிறதே என்று பயம் எனக்கு. மழை வந்து விட்டால் உல்லாஸமாகப் பொழுது போக்க முடியாதே என்று கவலை எனக்கு, ப்ளிமவுத்தில் என் மனதைக் கவர்ந்தது பிரயாணிகளாக வந்த நம் முன்னோர்கள் இறங்கிய அந்தக் கற்பாறைதான். அந்த பெரிய கல்லை நான் தொட்டுப்பார்க்க முடிந்தது. பிரயாணிகள் வந்ததையும், அமெரிக்காவில் இருந்து உழைத்து அவர்கள் உயர்ந்ததும் எனக்கு அந்தக் கல்லைத் தொடும்போது உண்மையென்று பட்டது. "பிரயாணிகள் கூட்டம்" என்கிற நினைவுச் சின்னத்தைப் பார்க்கப் போனபோது அந்தப்

ப்ளிமவுத் கல்லின் சிறுமாடல் ஒன்றை எனக்கு ஒருவர் தந்தார். அதன் ஓரங்களைத் தடவிப் பார்த்துக்கொண்டே அதில் பொருத்தியிருந்த 1620 என்கிற வருஷத்தைத் தடவிப் பார்ப்பேன். அமெரிக்காவில் முதல் முதலாக வந்து தங்கிய மதப் பிடிவாதமுள்ள முன்னோர்களைப்பற்றி எனக்குத் தெரிந்ததை எல்லாம் ஞாபகப்படுத்திப் பார்த்துக்கொள்வேன்.

அவர்களுடைய புது உலக ஸ்தாபன காரியம் எவ்வளவு பெருமை வாய்ந்தது என்று நான் நினைத்துப் பார்த்தேன். எவ்வளவு முக்கியமானது! என் குழந்தை மனம் அதைக் கற்பனை செய்து கொண்டு பிரகாசம் அடைந்தது. அந்நிய நாட்டிலே இருப்பிடம் தேடி வந்த பலசாலிகள், வீரர்கள் அவர்கள்; மனோதிடம் படைத்தவர்கள்; அள்ளிக்கொடுக்கும் ஆற்றலுள்ளவர்கள். தங்களுக்காக மட்டுமல்லாமல் மற்றவர்களுக்காகவும் அவர்கள் மனம் சுதந்திரத்தை நாடியது. பின்னர்தான் அவர்கள் செய்த கொடுமைகளும் அவர்கள் ஒருவரை ஒருவர் படுத்திய பாடுகளும் எனக்குத் தெரியவந்தன. அழகான தேசத்தை நமக்குத் திறந்தளித்த தைரியத்தையும், வீரத்தையும் மெச்சுகிற அதே சமயத்தில் அவர்களுடைய சின்னத்தனங்களையும் கொடுமைகளையும் எண்ணி அவமானப்படவும் வேண்டியதாக இருக்கிறது.

போஸ்டன் நகரில் எனக்கு நண்பர்களானவர்களில் இருவர் மிஸ்டர் வில்லியம் எண்டிகாட் என்பவரும் அவருடைய பெண்ணும். அவர்கள் என்னிடம் காட்டிய அன்பு என்கிற விதையிலிருந்து என் வாழ்க்கையில் பல இன்பமான ஞாபகங்கள் ஏற்படுகின்றன. "பெவர்லிபண்ணை" என்கிற அவர்களுடைய வீட்டிற்கு ஒருநாள் போயிருந்தோம். அழகான மாளிகை அது. அவர்களுடைய

விஸ்தாரமான ரோஜாத் தோட்டத்திலே உலாத்தினேன் நான். அவர்களுடைய நாய்கள் என் ஞாபகத்தில் இருக்கின்றன—லியோ என்கிற நாய் பெரியது; சுருட்டை மயிருடைய ப்ரிட்ஸ் என்கிற நாய் சிறியது : அதன் காதுகள் தான் எத்தனை நீளமாக இருந்தன. அவர்களுடைய குதிரையின் பெயர் நிம்ராட்; அதைத் தட்டிக் கொடுப்பேன் நான்; அது வாயை என் கையில் வைத்து சர்க்கரைக் கட்டி கொடு என்று கேட்கும். கடற்கரையிலே முதல் தடவையாக மணலிலே விளையாடினேன் நான். கனமான ஆனல் மிருதுவான மணல் அது. ப்ரூஸ்டரில் கல்லும் கட்டியுமாக இருந்த மணலினின்றும் மாறுபட்டது அந்த மணல். ஐரோப்பாவுக்குக் கிளம்பிய பெரிய பெரிய கப்பல்கள் போஸ்டன் நகர்ப் பக்கமாக மிதந்து வந்தன என்று மிஸ்டர் எண்டிகாட் எனக்குத் தெரிவித்தார். பல தடவைகள் அவரைச் சந்தித்தேன் நான். ஒவ்வொரு தடவையும் அவர் என்னிடம் மிகவும் பிரியமாக இருந்தார். போஸ்டன் நகரை "இரக்கமுள்ள மனிதர்கள் வசிக்கும் நகர்" என்று நான் சொன்னபோது அவரை மனசில் வைத்துத்தான் சொன்னேன்.

## 10

பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்துக்குக் கோடை விடுமுறை வந்தது. நானும் என் உபாத்தியாயினியும் காட் முனையில் உள்ள ப்ரூஸ்டர் நகரில் எங்கள் சிநேகிதை மிஸ்ஸஸ் ஹார்ப்கின்ஸ் என்பவளுடன் விடுமுறையைக் கழிப்பது என்று ஏற்பாடாகியிருந்தது. என் ஆனந்தம் எல்லையற்றது. விடுமுறையின் இன்பங்களை எதிர்நோக்கி என் மனம் நிறைந்திருந்தது. கடலைப்பற்றி நான் அறிந்திருந்த விஷயங்கள் எல்லாம், கதைகள் எல்லாம், ஒன்றன்பின் ஒன்ருக ஞாபகம் வந்தன.

அந்தக் கோடை நாட்களின் ஞாபகங்களில் என் மனத்தில் பிரதான ஸ்தானம் வகிப்பது கடல்தான். உப்புக் காற்று அடிக்காத இடத்தில் என் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கழித்தவள் நான். "நம் உலகம்" என்கிற ஒரு புஸ்தகத்தில் கடலைப்பற்றிய விவரங்களை நான் படித்து அறிந்துகொண்டிருந்தேன். அதன் அலைகளின் இரைச்சலைக் காதால் கேட்க வேண்டும் என்றும், எல்லையற்ற கடலைக் கையால் தொட்டுப் பார்க்க வேண்டும் என்றும் எனக்கு ஆசையாக இருந்தது. என் ஆசை நிறைவேறும் காலம் வந்துவிட்டது என்பதை அறிந்து என் உள்ளம் துடியாகத் துடித்தது.

நீஞ்சலுக்காக ஆடைகளை உடுத்திக்கொண்டதும் நான் மண்ணில் விழுந்து புரண்டு, பயம் என்பதையே சிறிதும் அறியாமல் கடலில் போய் விழுந்தேன். என்னைத் தாலாட்டுவதுபோல அலைகள் எழுந்து அடங்கின. ஜலத்தின் அந்தக் கட்டுக்கடங்காத வேகமும் அலைகளும் என்னை இன்ப சாகரத்தில் ஆழ்த்தின. திடீரென்று என் ஆனந்தம் பயமாக மாறியது. என் கால் ஒரு பாறையில் தட்டியது. அதே சமயத்தில் ஒரு அலை என்னை அமுக்கி வெளியே இழுத்தது. ஜலத்தில் மூழ்கித் திக்குமுக்காடினேன். கையால் பிடித்துக்கொள்ள ஏதாவது அகப்படுமோ என்று கை நீட்டித் துளாவினேன். கைக்கு ஜலத்தையும் கடல் பாசியையும் தவிர வேறு எதுவும் தட்டவில்லை. பயம் நிறைந்த முயற்சிகள் பலன் தரவில்லை. அலைகள் என்னைத் தூக்கி எறிந்து பந்தாடுவது போல இருந்தது. அவற்றின் விளையாட்டு எனக்குப் பயத்தைத் தந்தது. என் காலடியிலிருந்து பழக்கமான, இறுகிய பூமி மறைந்துவிட்டது. உயிர், காற்று, வெப்பம் எதுவுமற்ற அந்த ஜலப் பரப்பு ஒரு புதிய உலகமாகக் காட்சி

யளித்தது. உயிர் வாழ்க்கை காற்ருே வெப்பமோ இல்லாமல் சாத்தியப்படுமா என்ன? பயமாகத்தான் இருந் தது எனக்கு. ஆனல் கடைசியில் அலைகளுக்கு என்னுடன் விளையாடி அலுத்துவிட்டதுபோலும்! அவை தாமாகவே என்னைக் கரையில் சேர்த்துவிட்டன. அடுத்த நிமிஷம் மிஸ் ஸல்லிவனின் அணைப்பில் இருந்தேன் நான். அதற்குப் பிறகுதான் எனக்கு உயிர் வந்தது. அந்த அணைப்பின் சுகம்தான் என்ன என்று சொல்வது? ஆனல் சிறிது நேரத்திற்கெல்லாம் என் பயம் நீங்கிவிட்டது. நான் என் உபாத்தியாயினியைக் கேட்ட முதல் கேள்வி இதுதான்: "கடலில் உப்பைப் போட்டது யார்?"

கடலில் குளிப்பது என்கிற முதல் அனுபவத்திற்குப் பிறகு நான் அடிக்கடி என் நீஞ்சல் ஆடைகளுடன் ஒரு பாறைமேல் ஏறி உட்கார்ந்துகொள்வேன். அந்தப் பாறையின்மேல் அலைகள் ஒன்றன்பின் ஒன்ருக வந்து மோதும். நீர்த்துளிகள் நாலாபக்கமும் பரந்து பாய்ந்து சில சமயம் என்னைப் பூரணமாக நனைத்துவிடும். இது எனக்கு மிகவும் உல்லாசமாக இருந்தது. அலைகள் தங்களுடைய முழு வேகத்துடன் அந்தக் கற்பாறையை வந்து தாக்கிய போது அந்தப் பெரிய கற்பாறையே நடுங்குவதுபோலிருக் கும். இடைவிடாத பயங்கரமான அலைகளின் தாக்குதல் களினல் கடற்கரை பூராவுமே பின் வாங்குவதுபோலிருக் கும். அவற்றின் வேகத்தால் காற்றே கணகணவென்று இருந்தது. முன்னைவிட அதிவேகமாகப் பாய்ந்துவரும் உத் தேசத்துடன் அலைகள் பின்வாங்கி மீண்டும் பாயும். என் கற்பாறையைக் கெட்டியாகப் பிடித்துக்கொண்டு பீதி யுடன், மனதை வேறு ஒன்றின்மேலும் திருப்பமாட்டாமல் உட்கார்ந்திருந்தேன் நான். கடலின் பேரிரைச்சலும் அதன் தாக்குதலும் என்னைச் சுற்றிலும் இடைவிடாது நடை பெற்றுக்கொண்டிருந்தது.

கடற்கரையில் எவ்வளவு நேரம் தங்கியிருந்தாலும் போதும் என்கிற திருப்தி ஏற்படாது எனக்கு. கலப்பற்ற சுதந்திரமான, புதுக் கடற்காற்று அமைதியான ஆழ்ந்த சிந்தனை போல என்னைச் சூழ்ந்து நின்றது. கூழாங் கற்களும், கிளிஞ்சல்களும், சில சமயம் உயிருள்ள பிராணிகளுடன் கூடிய சங்குகளும் என் மனத்தைக் கவர்ந் தன. ஒரு நாள் மிஸ் ஸல்லிவன் புதுமாதிரியான ஒரு ஜந்துவை எனக்கு அறிமுகம்செய்து வைத்தாள். அது ஒரு நத்தை. நான் பார்த்தமுதல் நத்தை அது. நான் தொட்டுப் பார்த்தேன். தன் வீட்டை அது தன் தோள்மேலேயே தூக்கிக்கொண்டு செல்கிறது என்பது எனக்கு ஆச்சரிய மாக இருந்தது. அதை வளர்த்தால் என்ன என்று எனக்குத் தோன்றியது; அதன் வாலை என் கை விரல் களால் பிடித்து வீட்டுக்கு எடுத்துச் சென்றேன். அழுத் திப் பிடித்துச்சென்றேன்; அரைமைல் எடுத்துப் போவதற் குள் எனக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. அது சுமாராக கனமாகவும் இருந்தது. கிணற்றருகில் இருந்த ஒரு தொட்டியில் அதைப் போடு என்று மிஸ் ஸல்லிவனைத் தொந்திரவு செய்தேன். ஆனால் மறுநாள் அந்தத் தொட் டியில் போய்ப் பார்த்தபோது அது எங்கேயோ மாயமாகப் போய்விட்டது. அது எப்படித் தப்பிப் போயிற்று, எங்கே போயிற்று என்று யாருக்கும் தெரியவில்லை. அந்தச் சமயத்தில் என் ஏமாற்றம் சொல்லி மாளாது. கொஞ்ச நாள் கழித்துத்தான் எனக்குப் புரிந்தது; அந்த ஜந்துவை அதற்குரிய இடத்திலிருந்து பிரித்து வைப்பது பிசகு, பாவம் என்று புரிந்தது. அது தப்பி மீண்டும் கடலுக்கே சென்றுவிட்டது என்று நினைத்துப் பார்ப்பதில் எனக்குத் திருப்தி ஏற்பட்டது.

# 11

இலையுதிர் காலத்தில் தென் பிராந்தியத்திலுள்ள என் வீட்டுக்குத் திரும்பினேன். வடக்குப் பிராந்தியத்தில் ஏற்பட்ட அனுபவங்கள் புதுமையானவையாகவும் விஸ்தாரமானவையாகவும் என் மனத்துக்குப் பட்டன. வாழ்க்கையின் தொடக்கம் அதுதான் என்றுகூடச் சொல்லலாம். புதுமையான, அழகான உலகின் ஐசுவரியங்கள் எல்லாம் என் கவனத்தைக் கவரத் தயாராக என் காலடியில் கிடந்தன. இன்பமும் அறிவும் ஒவ்வொரு விஞடியும் என்னை நாடி வந்தன. எல்லா விஷயங்களிலும் ஈடுபட்டு இதை ஏற்றுக்கொண்டேன். ஒரு விஞடியைக் கூட வீணுக்கவில்லை, ஒரு நாளில் வளர்ந்து பெரிசாகி இறந்துவிடும் புழுப் பூச்சிகளைப்போல என் ஆயுள் பூராவையும் ஒரே நாளில் அனுபவித்து முடித்துவிடவேண்டும் என்கிற நினைவு எனக்கு ஏற்பட்டது. நான் சந்தித்த மனிதர்கள் எல்லோரும் என் கையில் வார்த்தைகளை எழுதி என்னுடன் பேசினர்கள். அவர்களுடன் பேசுவதில் என் சிந்தனு சக்தியும் கற்பனையும் வளர்ந்தன. சிந்தனையைத் தொடர்ந்து சிந்திக்கவும், என்னுடன் பேசியவர்களின் பேச்சை அனுசரித்துப் பேசவும் அறிந்துகொண்டேன் நான். பாலைவனப் பிரதேசங்களில் திடுதிப்பென்று செடிகளும் கொடிகளும் முளைத்துப் பூத்துக் குலுங்குவது போல இருந்தது அந்த அனுபவம். மற்றவர்களின் மனதை ரோஜாப் புஷ்பமாக அறிந்து கொண்டேன்.

இலையுதிர் காலத்து நாட்களை டஸ்கும்பியாவிலிருந்து பதினறு மைல்களுக்கப்பாலிருந்த ஒரு குடிசையில் என் குடும்பத்தினருடன் கழித்தேன் நான். அதன் பெயர்

"பெர்ண் குவாரி"—ஏனென்றால் அதனருகில் ஒரு சுண்ணும்புக் காளவாய் இருந்தது. அந்தக் காளவாயில் இப்போது எதுவும் வேலை நடைபெறவில்லை. சிறு அருவிகள் மூன்று அதனருகில் விளையாடிக்கொண்டே நடந்து செல்லும் சிறுவர்கள்போல ஓடின; குன்றுகளின் சரிவுகளிலிருந்து குதித்துக் குதித்து ஓடிவந்து அவை வெள்ளி நீர்வீழ்ச்சிகளாகவும் மைத் தேக்கங்களாகவும் மாறின. புல்பூண்டுகள் அடர்ந்து முளைத்துப் பல இடங்களில் அந்த அருவிகளை மூடியே விட்டன. மலையின் சரிவுகளில் மரங்கள் அடர்ந்திருந்தன. பெரிய பெரிய ஓக் மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. பளபளத்த மரகதக் கால்கள் மாதிரிப் பச்சை படர்ந்திருந்த மரங்கள் பலவும் இருந்தன. அவற்றின் கிளைகளிலிருந்து ஐவியும் மிஸில்டோவும் சரம் சரமாக தொங்கி ஊசலாடின. பெர்ஸிம்மன் மரங்களின் வாசனை அங்கு எங்கும் பரவி நின்றது; மனதுக்கு உல்லாஸ மளித்து, ஏமாற்றத்தையும் ஏக்கத்தையும் அளித்த வாஸனை அது. காட்டுக் கொடிகளும் செடிகளும் திரையிட்டுப் பல இடங்களை மறைத்தன. ரீங்காரமிடும் வண்டுகளும், சிறகடித்துப் பறக்கும் வண்ணத்திப் பூச்சிகளும், நாள் பூராவும் உல்லாஸமாக அங்கு பறந்து திரியும். மாலை நேரங்களில் அந்தத் திக்குத் திசை அறியமுடியாத இருண்ட காட்டில் உலாத்துவதிலே இன்பம் கண்டேன். சூரியாஸ்தமன சமயத்திலே பூமியிலிருந்து எழும் வாசனைகளை நுகர்ந்துகொண்டே உலாத்துவேன்.

ஓக் மரங்களும் பைன் மரங்களும் அடர்ந்திருந்த மலையுச்சியிலே அழகான ஓரிடத்தில் எங்கள் குடிசை ஒரு கூடாரம்போல அமைந்திருந்தது. ஒரு பெரிய திறந்த கூடத்தின் ஓர் ஓரத்தில் சிறிய அறைகள் பல இருந்தன. வீட்டைச் சுற்றி ஒரு விசாலமான நடை இருந்தது. மலைக்

காற்று காட்டின் பல்வேறு திறப்பட்ட வாசனைகளைச் சுமந்துகொண்டு அங்கு வந்து ஆறும். இந்த நடையிலே தான் நாங்கள் பெரும்பாலும் பொழுதைக் கழிப்போம். அங்குதான் வேலை செய்வது, விளையாடுவது, சாப்பிடுவது எல்லாம். பின்பக்கக் கதவுக்கருகில் ஒரு பெரிய பட்டர்நட் மரம் இருந்தது. வீட்டுப் படிகளை அந்த மரத்தைச் சுற்றி அமைத்திருந்தார்கள். வாசலில் மரங்கள் நெருக்கமாக உயர்ந்து நின்றன. மரத்தைத் தொட்டு அவற்றின் உச்சியில் காற்றின் வேகத்தை உணருவேன் நான். இலையுதிர் காலத்துக் காற்றில் கீழே உதிருகிற சருகுகளைக் கையால் பிடித்து விளையாடுவேன்.

பெர்ண் குவாரிக்குப் பல விருந்தாடிகள் வந்தார்கள். மாலையில் கணப்பை மூட்டிவிட்டு, ஆண்கள் சீட்டாடுவார்கள்; வேட்டைக் கதைகள் பல சொல்லுவார்கள். பக்ஷி பறவைகளைச் சுடுவதிலும், மீன் பிடிப்பதிலும், மிருகங்களைக் கொல்லுவதிலும் தங்களுக்குள்ள திறமை பற்றி அவர்கள் பீற்றிக்கொள்வார்கள். தந்திர மிகுந்த நரிகளில் எத்தனை அவர்கள் வலையில் வந்து சிக்கின என்று சொல்லுவார்கள்! கனமான பெரிய பெரிய மீன்கள் பிடித்தது பற்றிப் பெருமையாகப் பேசுவார்கள். வேகமாக ஓடிய மானையும் விடத் தாங்கள் வேகமாக ஓடியதாகவும் அவர்கள் சொல்வார்கள். இந்த வேட்டைக்காரர்களுக்கு எதிரில் நின்று சிங்கம், புலி, கரடி முதலிய காட்டு மிருகங்கள்கூடத் தப்பி வாழமுடியாது என்று எனக்குத் தோன்றும். "நாளைக்கு நல்ல வேட்டை!" என்று கோஷமிட்டுக் கொண்டே அவர்கள் படுக்கச் செல்வார்கள். கூடத்தில் ஆண்கள் படுத்து உறங்குவார்கள். நாய்களும், வேட்டையாடும் அவற்றின் யசமானர்களும் தூக்கத்தில் விடும் ஆழ்ந்த மூச்சு தினமும் இரவில் எனக்குத் தெரியும். அதைப் பார்த்து ஆச்சரிய மடைவேன்.

அதிகாலையில் வீசும் காபியின் மணம் என்னை எழுப்பி விடும். துப்பாக்கிகள் வேட்டைக்குத் தயாராகிற சப்தம் கேட்கும். ஆண்பிள்ளைகள் திட்டுத் திட்டென்று குறுக்கும் நெடுக்கும் நடப்பது தெரியும். "இந்த ஸீஸனிலே எங்கள் வேட்டைதான் நல்ல வேட்டை" என்று ஒருவருக்கொருவர் சொல்லிக்கொள்ளுவார்கள் அவர்கள். வெளியே மரங்களில் கட்டப்பட்டிருக்கும் குதிரைகள் பொறுமையற்றவையாகத் தரையைக் காலால் உதைத்துப் பிராண்டுவதை உணருவேன் நான். அவைகளுடைய கனைப்பு உரக்கக் கேட்கும். அவைகளும் வேட்டைக்குக் கிளம்பத் துடியாக நிற்கும். கடைசியில் ஒருவழியாக ஆண்கள் எல்லோரும் குதிரைகள் மீதேறி வேட்டை தேடிச் செல்லத் தயாராகி விடுவார்கள். சேணங்கள் குலுங்க, சாட்டைகள் வீறிட, வேட்டை நாய்கள் உரக்கக் குரைத்துக்கொண்டே முன்னால் ஓட, வேட்டையில் வல்லவர்கள் கிளம்புவார்கள். "ஹார்க் ஹார்க்!" என்று கத்திக் கொண்டும், "ஹூப் ஹூப்" என்று கத்திக்கொண்டும், "ஹாலு ஹாலு" என்று குரல் கொடுத்துக்கொண்டும், பழைய காலத்துப் பாட்டில்போல, அவர்கள் ஒரு வழியாகக் கிளம்பிவிடுவார்கள்.

காலையில் பிற்பகுதியில் நாங்கள் விருந்துக்கு மாமிசம் தயார் செய்கிற காரியத்தில் ஈடுபடுவோம். பூமியிலே இருந்த ஒரு பள்ளத்தில் கட்டைகளைப் போட்டு எரிப்பார்கள். பள்ளத்தின் மேலே குறுக்கும் நெடுக்கும் கழிகள் போடுவார்கள். அக்கழிகளிலிருந்து மாமிசம் நெருப்பிலே தொங்கும். பெரிய பெரிய கரண்டிகளால் மாமிசத்தைத் திருப்பி விடுவார்கள், பதமாக வேகவேண்டுமே என்று. அந்த நெருப்பைச் சுற்றி, ஈக்களை ஓட்டிக்கொண்டு நீக்ரோக்கள் உட்கார்ந்திருப்பார்கள். சாப்பிட மற்ற யாரும் தயாராவதற்குமுன் வேகும் அந்த வாசனை என் வயிற்றுப்பசியைக் கிளறி விட்டுவிடும்.

சாப்பாட்டுக்கு ஆயத்தங்கள் மும்முரமாகிற சமயத்திலே வேட்டையாடக் கிளம்பிய கோஷ்டி திரும்பிவிடும். கோஷ்டியாகக் கிளம்பியவர்கள் இருவர் மூவராக, ஓய்ந்துபோனவர்களாக, உத்ஸாகமிழந்து வருவார்கள். வியர்வையும் அலுப்பும் அவர்கள் அருகில் வந்தாலே தெரியும். குதிரைகள் மேலெல்லாம் வியர்த்துவிட்டிருக்கும்; அவற்றின் வாயெல்லாம் நுரைத்திருக்கும். வேட்டை நாய்கள் கூடத் தலைகள் தொங்கவிட இரைக்க இரைக்க வரும். ஒரு மிருகத்தைக்கூட அவர்கள் கொன்று கொண்டுவர மாட்டார்கள்; அதுதான் விசேஷம்! ஒவ்வொருவனும் தான் ஒரு மானையாவது பார்த்ததாகச் சொல்வான். ஆனால் அது அவன் குறிபார்த்துச் சுடுமுன் வாயுவேகம் மனோவேகமாக ஓடிவிட்டிருக்கும். முயல் போன பாதையையும், அது நேற்றுக் குடியிருந்த வளையும் பார்த்ததாகச் சொல்கிற பையனின் கதைதான் அவர்கள் கதையும். ஆனால் அவர்களுடைய ஏமாற்றமும் அலுப்பும் சலிப்பும் உத்ஸாகமின்மையும் சீக்கிரமே மறைந்துவிடும். உயர்ந்த மான் மாமிசத்துக்குப் பதில் சாதாரணமான இறைச்சியும் பன்றி மாமிசமும்தான் கிடைக்கும். ஆனாலும் அதுவும் தான் நன்றாக இருந்தது!

ஒரு கோடைகாலத்தில் என் குதிரைக் குட்டியையும் பெர்ண் குவாரிக்குக் கொணர்ந்தேன் நான். அந்தக் குதிரையின் பெயர் "கருப்பு அழகி" "கருப்பு அழகி" என்கிற புஸ்தகத்தை நான் அப்போதுதான் படித்திருந்தேன். கதையில் வருகிற கருப்பு அழகியைப் போலவே என் குதிரைக்குட்டியும் பளபளக்கும் நல்ல பட்டுக் கருப்புத்தான். நெற்றியிலே அதேபோல என் குதிரைக்கும் ஒரு வெள்ளை நக்ஷத்திரம் இருந்தது. அந்தக் குதிரைமேல் சவாரி செய்வதில் என் வாழ்நாளில் பல ஆனந்தமான பொழுதுகளைப்

போக்கியிருக்கிறேன் நான். சில சமயம், என் உபாத்தியாயினி அதைத் தன் இஷ்டப்படிப் போகவிட்டு விடுவாள்; சாதுவாக, அதன் முதுகிலிருக்கும் என்னைச் சிறிதும் நலுக்காமல் அது தன் இஷ்டத்துக்குக் காட்டில் புல் மேய்ந்துகொண்டு திரியும்.

குதிரைச் சவாரி போகாத நாட்களில் நானும் மிஸ் ஸல்லிவனும் காலை உணவு ஆனபிறகு காட்டிலே உல்லாஸமாகச் சுற்றித் திரியக் கிளம்பிவிடுவோம். மரங்களும் செடி கொடிகளும் அடர்ந்திருக்கும் பிரதேசங்களில் வீடு திரும்புகிற நோக்கமே இல்லாதவர்கள்போலத் திரிவோம். மாடுகளும் குதிரைகளுமே போகக்கூடிய பாதைகளைப் பின் பற்றி வெகு தூரம் போவோம். சில சமயம் ஏதாவது தாண்ட முடியாத புதர் குறுக்கிடும்; அதைச் சுற்றிக் கொண்டு போக வேண்டியதாக இருக்கும். திரும்பும்போது கையில் சுமக்கமாட்டாமல், லாரல், தங்கக் கம்பி, அழகான புற்கள், கண்ணைப் பறிக்கும் வர்ணங்களுள்ள காட்டு மலர்கள் எல்லாவற்றையும் சுமந்துகொண்டுதான் வீடு திரும்புவோம். இந்தத் தாவரங்கள், மலர்கள் எல்லாம் தெற்குப் பிராந்தியத்துக்கே உரிய ஒரு பெருமையாகும்.

சில சமயங்களில் மில்டிரெட்டுடனும் மற்றும் உள்ள சிறுமிகளுடனும் பெர்ஸிம்மன் காய்கள் பொறுக்கப் போவோம். அவற்றை நான் தின்னமாட்டேன். ஆனால் அவற்றின் வாசனை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. இலைகளிலும் புற்களிலும் மறைந்திருந்த அந்தக் காய்களை மோப்பம்பிடித்துக் கண்டுபிடித்துத் தேடுவதில் எனக்குப் பரம திருப்தி. சில சமயம் கொட்டைகள் பொறுக்கப் போவோம். செஸ்ட்நட் கொட்டைகள், ஹிக்கரிநட், வால்நட் இவைகள் ஏராளமாகக் கிடைக்கும் அந்தக் காட்டிலே.

மலையடிவாரத்திலே ஒரு ரெயில் பாதை இருந்தது. அதில் ரெயில்கள் ஓடுவதைக் குழந்தைகள் குதூகலத்துடன் பார்ப்பார்கள். சில சமயம் ரெயில் பயங்கரமாக ஊதும்; குழந்தைகள் மட்டுமின்றிப் பெரியவர்களும்கூட என்ன விசேஷம் என்று வெளியேவந்து பார்ப்பார்கள். ரெயில் பாதையிலே மாடோ குதிரையோ படுத்திருக்கிறது, அதைக் கிளப்புவதற்காக ரெயில் ஊதுகிறது என்று மில்டிரெட் எனக்குச் சொல்லுவாள். ஒரு மைலுக்கப்பால் ஒரு கணவாயைக் கடக்க ஒரு ரெயில் பாலம் இருந்தது. அதன்மேல் நடப்பது சற்றுச் சிரமமான காரியம். குறுக்குக் கட்டைகளுக்கு இடையில் வெளி நிறைய இருந்தது; கட்டைகளும் அதிக அகலமில்லாத கட்டைகள். அந்தப் பாலத்தைக் கடப்பதென்றால் ஏதோ கத்தியின்மேல் நடப்பதுபோல இருக்கும் எனக்கு. அதில் நான் சாதாரணமாக நடந்ததேயில்லை. ஆனால் ஒரு நாள் நானும் மில்டிரெட்டும் மிஸ் ஸல்லிவனும் காட்டில் திரிந்துகொண்டிருக்கையில் வழி தவறிவிட்டது. பல மணிநேரம் சுற்றியும் வழி தென்படவில்லை.

திடீரென்று மில்டிரெட் "அதோ ரெயில் பாலம்" என்று தன் சிறிய கையை நீட்டிக் காட்டினாள். அந்த வழி போவதைவிட வேறு வழியாகப் போவதுதான் எங்களுக்கு இஷ்டம். ஆனால் நாழியும் ஆகிக்கொண்டிருந்தது; இருட்டவும் தொடங்கிவிட்டது. அந்தப் பாலத்தை கடப்பதுதான் வீடுபோய்ச் சேர குறுக்குவழி. என் கால்விரல்களால் ரெயில் பாதையைத் தடவிப் பார்த்துக்கொண்டே ஜாக்கிறதையாக நடந்தேன். ஒரு குறுக்குக் கட்டையிலிருந்து இன்னொரு குறுக்குக் கட்டைக்குத் தாவினேன். எனக்கு பயம் ஒன்றும் தோன்றவில்லை. பாலத்தைக் கடந்துவிடலாம் என்று தெம்பு ஏற்படுகிற சமயத்தில் "குப் குப்" என்று சப்தம் கேட்டது.

"அதோ ரெயில் வருகிறது" என்று கத்தினுள் மில்டிரெட். அடுத்த நிமிஷமே ரெயில் எங்கள்மேல் ஏறியிருக்கும். ஆனுல் நாங்கள் பாலத்துக்கு அடியில் இருந்த குறுக்கு கர்டர்களில் இறங்கி நின்றுகொண்டோம். ரெயில் பாலத்தின்மேல் ஓடிவிட்டது. என்ஜினின் சூடான மூச்சு என்மேல் பட்டது. புகையும் சாம்பலும் என் மூச்சைத் திணறச் செய்தன. ரெயில் போன வேகத்தில் பாலமே கிடுகிடென்று ஆடிற்று. நாங்கள் கீழே விழுந்துவிடுவோம் என்று எண்ணினேன். நல்ல வேளையாக அப்படி ஒன்றும் நடக்கவில்லை. வெகு சிரமப்பட்டு மீண்டும் அந்தப் பாலத்தின் மேலேறி அதைக் கடந்தோம். இருட்டி வெகுநேரம் கழித்துத்தான் நாங்கள் வீடுதிரும்பினேம்—ஆனுல் வீட்டில் ஒருவரும் இல்லை. அவர்கள் எல்லோரும் எங்களைத் தேடிக்கொண்டு கிளம்பியிருந்தார்கள்.

## 12

முதல் வருஷம் போஸ்டன் நகருக்குப் போனபிறகு அநேகமாக ஒவ்வொரு மாரிக்காலத்தையும் நான் வட பிராந்தியத்தில் கழிப்பது என்று ஏற்பட்டது. ஒரு தடவை நியூ இங்கிலாந்து கிராமம் ஒன்றைப் பார்வையிடப் போனேன். உரைந்த பனி ஏரியும் பனிப்பரப்புமாக இருந்தது அது. பனி என்கிற மாயக் குகையில் புதைந்து கிடக்கும் ஐசுவரியங்களையும் காணும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது.

மாயம் நிறைந்த கை ஒன்று மரங்களில் ஒன்றிரண்டு இலைகளைத் தவிர மற்றவற்றை எல்லாம் பொறுக்கி அகற்றி விட்டது பற்றி எனக்கு ஆச்சரியமாக இருந்தது. பறவைகளில் பெயருக்குக்கூட அங்கு ஒன்றுமில்லை. அவற்றின் கூண்டுகளில்கூடப் பனி நிறைந்து வழிந்துகொண்

டிருந்தது. வயலிலும் வெளியிலும் மாரிக்காலத்தின் தன்மை படர்ந்திருந்தது. இந்த ஐஸ் போர்வையின் செயலால் பூமியே தன் சக்தியை இழந்து மரத்துப்போய் விட்டது போல இருந்தது. மரங்களின் ஆத்மாக்கள் அவற்றின் வேர்களில் போய்ப் பதுங்கிக் கொண்டிருப்பதுபோல இருந் தது. இருட்டில் சுருட்டி மடக்கிக்கொண்டு படுத்து உறங்கி விட்டது போல இருந்தது. உயிர் என்கிற தத்துவமே இயற்கையிலிருந்து ஓடி ஒளிந்துகொண்டுவிட்டமாதிரி இருந்தது. சூரியன் காய்ந்தபோதும்கூட. பகல் குறுகிப் பனிப்படலமாகக் குளிர்ந்திருந்தது. உள்ளே ஓடிய ரத்தம் உறைந்துவிட்டது போல இருந்தது. கிழடுதட்டிய பகல் பூமியையும் கடலையும் கடைசித் தடவையாகப் பார்த்துவிட்டு இறந்துவிடுவது என்று தீர்மானித்துத் தள்ளாடித் தள்ளாடி எழுந்திருப்பதுபோல இருந்தது. உயிரற்ற புற்களும் புதர்களும் ஐஸ்காடுகளாக நிமிர்ந்து நின்றன.

ஒருநாள் காற்றுக் குளிர்ந்து ஊதலாக அடித்தது. பனிப்புயல் வீசப்போகிறது என்றார்கள். வெளியே போய் முதலில் விழுகிற மிருதுவான பனித்தூள்களைப் பார்க்க நாங்கள் ஓடினோம். மணிக்கணக்காகச் சப்தமே செய்யாமல் சுழல்பனி விழுந்தது; வானத்தின் உச்சியிலிருந்து பூமியின் மேல் விழுந்தது. பூமி நிறைந்து ஒரே மட்டமாகியது அந்தப் பனியினால். பனி நிறைந்த இரவு வந்தது. மறுநாள் காலையில் பழக்கமான இடங்கள் எதுவுமே கண் ணில் படவில்லை. சில இடங்களில் மரங்கள் தலைதூக்கி பனிப்போர்வைக்கு வெளியே வந்திருந்தன. அந்த மரங் களைத் தவிர வேறு எதுவுமே அங்கில்லை—பனியைத் தவிர.

மாலையில் வடகிழக்கு மூலையிலிருந்து காற்று அடிக்கத் தொடங்கியது. அவல்பனி விழுந்துகொண்டே இருக்கை

யில் அங்குமிங்கும் அலைக்கப்பட்டது. குழப்பமாகக் குழம்பிச் சுழன்றது. கணகணவென்று எரிந்துகொண்டிருந்த கணப்பைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு நாங்கள் வேடிக்கை யாகவும் விந்நியாஸமாகவும் கதைகள் சொல்லிக்கொண் டிருந்தோம். வீட்டிற்குள்ளே குதித்துக்குதித்து விளை யாடினோம். பனியால் மூடப்பட்ட ஓர் உலகில், வெளி உலகத்துடன் பேசவோ உறவாடவோ முடியாதபடி மாட்டிக் கொண்டிருக்கிறோம் என்கிற நினைவே இல்லாமல் குதித்துக் கூத்தாடினோம். இரவில் காற்றின் வேகம் அதிகரித்தது. எங்கள் பீதியும் அதிகரித்தது. எனினும் அதிலும் ஒரு இன்பம், ஆனந்தம் இருப்பதுபோல இருந்தது. வீட்டு உத்திரங்களும் குறுக்குக்கட்டைகளும் காற்றிலே முக்கி முனகின. அருகில் இருந்த மரங்கள் அந்தக் காற்றிலே பெருமூச்சுவிட்டு ஓய்வதுபோல இருந்தது; அவை குனிந்து வீட்டின் ஜன்னல்களுடனும் கூரையுடனும் ரகசியங்கள் பேச விரும்பியதுபோல இருந்தது. பரந்த பூமியிலே காற்று ஊதிஊதி விளையாடிக் கூத்தடித்து ஓய்ந்தது.

ஆரம்பித்த மூன்றாவதுநாள் தான் பனிப்புயல் நின்றது. மேகங்களைத் தாண்டி சூரிய வெளிச்சமும் வெப்பமும் எட்டிப் பார்த்தன. பூமியிலே படர்ந்திருந்த பனிப்படலத்தை மலைகளாகவும் பள்ளத்தாக்குகளாகவும் கோபுரங்களாகவும் மாற்றியிருந்தது காற்று. பார்க்க ஒரு புதுவிதமான பூமி தோன்றியிருப்பது போல இருந்தது.

பனிப் போர்வையிலே குறுகிய பாதைகள் செய்யப் பட்டன. என் போர்வையையும் தலைக் குல்லாவையும் அணிந்துகொண்டு நான் வெளியே போனேன். நெருப்புப் போல அந்தக் காற்று என் கன்னங்களைச் சுட்டது. பாதையில் பாதியும், பனிப் புழுதியில் பாதியுமாக நடந் தோம். ஊருக்கு அண்மையில் உள்ள ஒரு பெரிய பைன்

தோப்பை அடைந்தோம். மரங்கள் அசைவற்று ஆடாமல் அலுத்துப்போனவை போல நின்றன. பைன்மர வாசனையே வீசவில்லை. சூரியக் கிரணங்கள் உச்சியில் இருந்த பனி மூடிய கிளைகளில் விழுந்தன. மரக் கிளைகள் வைரங்களால் ஆனவைபோல ஜாஜ்வல்யமாய் ஜொலித்தன. அந்த வெளிச்சம் மூடிய என் கண்களையும்கூட எட்டியது என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்! நாங்கள் மரத்தைத் தொட்டபோது உச்சியிலிருந்து வைரப் பொடிகள் கீழே விழுந்தன.

நாட்கள் சென்றன. பனிப் போர்வை பூமியிலிருந்து சிறிது சிறிதாக அகன்றது. ஆனால் அது முழுவதும் போகுமுன் இன்னொரு பனிப் புயல்வந்து மீண்டும் பூமியைப் பனியால் மூடியது. அந்த மாரிக்காலம் பூராவுமே பூமி எனக்குத் தெரியவில்லை. என் கால்கள் மண்மேல் பட வில்லை. சில சமயம் மரங்களின் கிளைகளை மறைத்த பனித் திரை விழுந்துவிடும்; ஆனால் மரங்களும் செடிகொடிகளும் குச்சி குச்சியாக ஒரு இலைகூட இல்லாமலே நிற்கும். ஆனால் ஏரி அந்த பனிக்காலம் பூராவும் உறைந்தேயிருந்தது. சூரியன் காய்ந்தது எனினும் பனி கற்பாறை மாதிரி கெட்டியாக இருந்தது.

அந்த மாரிக்காலத்தில் எங்களுடைய உத்ஸாகமான பொழுதுபோக்கு பனிச் சரிவில் வண்டியில் சருக்கி விழுந்து விளையாடுவதுதான். சில இடங்களில் ஏரியின் கரை சரிவாக ஏரியின் உறைந்த பரப்புவரை செல்கிறது. "டொபோக்கன்" என்கிற வண்டியில் ஏறி கரையில் உட்கார்ந்துகொள்வோம். சரிவிலே எங்களுடன் வண்டியைத் தள்ளிவிடுவான் யாராவது ஒரு பையன். இக்கரையிலிருந்து அக்கரை வரையில் எங்கள் வண்டி வேகமாக, மேடு பள்ளத்தைப் பாராமல், உல்லாஸமாகப் போகும்.

என்ன ஆனந்தம்! எவ்வளவு உத்ஸாகமான உல்லாஸம்! எல்லையற்ற இன்பம்! காற்றுப்போலப் பறக்கும் உணர்ச்சியைப் பெற்றோம் நாங்கள்! பூமியுடன் எங்களைப் பிணைத்த தளைகள் அந்த ஒரு நிமிஷம் கழண்டு விழுந்தன.

## 13

**நா**ன் 1890-ல் வஸந்தத்தில் பேசக் கற்றுக் கொண்டேன். வாயால் பேசவேண்டும் என்கிற ஆசை எனக்கு ஆரம்ப முதலே வெகுவாக இருந்து வந்திருக்கிறது. நான் அர்த்தமற்ற சப்தங்கள் பல செய்வேன்; ஒரு கையால் தொண்டையைப் பிடித்துக்கொண்டு இன்னொரு கையின் விரல்களால் என் உதடுகளைத் தடவிப் பார்ப்பேன் சப்தம் செய்துகொண்டே. சப்தம் செய்கிற எதுவுமே எனக்குத் திருப்தியளித்தது. பூனை 'பர்' என்பதையும், நாய் குரைப்பதையும் உணர்ந்து ரஸிப்பேன் நான். யாராவது பாடிக்கொண்டிருந்தால், அவர்கள் தொண்டையில் கையைவைத்துப் பார்ப்பேன். யாராவது பியானோ வாசித்தால் பியானோவின் மேல் கையைவைத்துப் பார்ப்பேன். எனக்குக் காதும் கண்ணும் போவதற்கு முன்னால் நான் பேசக் கற்றுக்கொள்ளத் தொடங்கிவிட்டேன். ஆனால் எனக்கு நோய் கண்டு காது போனபிறகு என்னால் பேச முடியாமலே போய்விட்டது. என் காதில் ஏதாவது வார்த்தைகள் விழுந்தால்தானே நானும் அதைப் பின்பற்றி ஏதாவது சொல்லமுடியும்? நாள் பூராவும் என் தாயாரின் மடியிலே உட்கார்ந்திருப்பேன் நான். அவள் பேசும்போதெல்லாம் அவள் உதடுகளில் கைவைத்து அவை அசைவதை உணர்ந்து ஆனந்திப்பேன். எனக்கு அது வேடிக்கையாக இருந்தது, விளையாட்டாக இருந்தது.

பேச்சு என்பது என்ன என்பதே எனக்கு மறந்துவிட்டது என்றாலும், நானும் என் உதடுகளை அசைப்பேன். நான் சுபாவத்திலேயே அழவும் சிரிக்கவும் அறிந்திருந்தேன் என்று என் நண்பர்கள் சொல்லுகிறார்கள். சிலநாள் நான் விதவிதமான சப்தங்கள் செய்வேன். வார்த்தைகள் ஏதாவது சொல்லவெண்டிய நோக்கோடு அல்ல. ஆனால் ஏதாவது சொல்லவேண்டும் என்கிற வேகம் என்னுள் ளேயே இருந்தது போலவே இருந்தது. அப்பொழுதும் கூட ஒரு வார்த்தைக்கு மட்டும் அர்த்தம் எனக்கு ஞாபகம் இருந்தமாதிரி இருக்கிறது. "வாடர்" (தண்ணீர்) நான் அதை "வா—வா" என்று உச்சரித்தேன். இது கூடக் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்து உருவற்றுப் போய்க்கொண்டிருந்தது. மிஸ் ஸல்லிவன் எனக்குப் பேசச் சொல்லித்தர ஆரம்பிக்கும் வரையில், என் கைவிரல் களால் அந்த வார்த்தையை எழுதிக்காட்ட எனக்கு வருகிற வரைக்கும், நான் "வா—வா" என்றே சொல்லிக் கொண்டிருந்தேன் என்றுதான் எண்ணுகிறேன். அதற்குப் பிறகுதான் நிறுத்தினேன்.

என்னைச் சுற்றி யிருந்தவர்கள் என்னிடமிருந்து மாறு பட்ட வகையில் ஒருவரோடொருவர் பேசுகிறார்கள் என்பது பற்றி நான் கவனித்திருந்தேன் என்றுதான் நினைக்கிறேன். காது கேளாத குழந்தைக்குப் பேசச் சொல்லித் தரமுடியும் என்று எனக்குத் தீர்மானமாகத் தெரிவதற்கு முன்னரே, எனக்குக் கைவந்த சம்பாஷணை ஸாதனம் திருப்தி தர மறுத்தது. கை விரலால் எழுத்துக் கூட்டிப் பேசுகிற பேச்சு போதாது; மிகவும் குறுகிய ஒரு சாதனம்தான் அது என்பதை நான் உணர்ந்துவிட்டேன். ஏதோ ஒரு சுதந்திரமின்மை, ஒரு தளை, என்னைக் கட்டிப்போட் டிருப்பதுபோல இருந்தது. என் தேவையைப் பூர்த்தி

செய்துகொள்ள ஒரு வழி வகுத்துக்கொண்டு விடவேண்டும் என்று நான் துடியாகத் துடித்தேன். என் உள்ளமே இந்தத் தேவையால் வெகுவாகக் கலங்கிற்று. எதிர் காலத்தை எண்ணி ஏங்கியது என் மனம். காற்றை எதிர்த்துச் சிறகடித்து ஓயும் குருவிக் குஞ்சைப்போல நான் என் உதடுகளையும் தொண்டையையும் அர்த்த மில்லாமலே உபயோகித்துக் கொண்டே வந்தேன். பேச நான் செய்த முயற்சிகள் பலன் தராமற்போய் அது ஏமாற்றத்தில் முடிந்தால் என்ன செய்வது என்று என் நண்பர்கள் அந்த முயற்சிகளைத் தடுத்து நிறுத்த முயன் ருர்கள். நான் பிடிவாதமாக என் முயற்சிகளைத் தொடர்ந்தேன். இந்தப் பெரிய இடுக்கணைக் களைந்துவிடக் கூடிய வகையில் ஒரு காரியம் அதி சீக்கிறமே நடந்தது— ராகின்ஹில்டு காடா என்கிற பெண்ணின் கதையைக் கேள்விப் பட்டேன்.

லாரா பிரிட்ஜ்மன்னின் உபாத்தியாயினிகளில் ஒருத்தியின் பெயர் மிஸ்ஸிஸ் லாம்ஸன். இந்த லாம்ஸன் 1890-ல் நார்வே ஸ்வீடன் முதலிய பிரதேசங்களிலெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டு என்னைப் பார்க்கவந்தாள். அவள்சொன்ஞள், ராகன்ஹில்டு காடாஎன்கிற பெண்ணைப் பற்றி. அந்தப் பெண் நார்வே தேசத்தைச் சேர்ந்தவள். குருடி; செவிடி; ஆனல் அவளுக்குப் பேசக் கற்றுக் கொடுத்துவிட்டார்கள். இந்தப் பெண்களைப் பற்றி மிஸ்ஸிஸ் லாம்ஸன் பேசி முடிக்கு முன்னரே நான் ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டேன். என் ஆவல் கட்டுக் கடங்காததாகி விட்டது. நானும் பேசக் கற்றுக் கொண்டு விடுவது என்று தீர்மானித்துவிட்டேன். மிஸ் ஸல்லிவன் என்னை மிஸ் ஸாரா புல்லர் என்கிற ஹாரஸ் மான் பள்ளித் தலைமை உபாத்தியாயினியிடம் அழைத்துப் போகும்

வரையில் எனக்கும் நிம்மதியில்லை; மிஸ் ஸல்லிவனுக்கும் நான் நிம்மதி தரவில்லை. ஸாராபுல்லரிடம் உதவியும் உபதேசமும் நாடிப் போனேன் நான். இன்குணம் படைத்த அந்த அழகி தானே எனக்குப் பேசச் சொல்லிக் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டாள். நாங்கள் 1890-ல் மார்ச்சு மாதம் ஆரும்தேதியன்று என் பாடங்களைத் தொடங்கினோம்.

மிஸ் புல்லரின் வழி இதுதான். என் கைகளால் அவள் முகத்தையும் உதடுகளையும் தடவிப்பார்க்கச் சொல்லுவாள். உதடுகள், நாக்கு இவற்றை எப்படி வைத்துக் கொண்டு அவள் ஒரு ஒலியை எழுப்பினாள் என்று என்னை விரல்களால் தடவிப்பார்க்கக் சொன்னாள். அவள் செய்த மாதிரியே நானும் செய்தேன்; ஒரு மணி நேரத்திற்குள் ஆறு ஒலிகள் வந்து விட்டன எனக்கு; M, P, A, S, T, I, மிஸ் புல்லர் எனக்குப் பதினொரு பாடங்கள் தான் சொல்லித்தந்தாள். அதற்குள் எனக்குப் பேச வந்துவிட்டது. "இப்போது உஷ்ணமாக இருக்கிறது" என்று நான் சொன்ன முதன் முதலில் வாக்கியம் என் உள்ளத்தை ஆனந்தத்தாலும் ஆச்சரியத்தாலும் நிரப்பியது. உண்மைதான்; அவை தட்டுத்தடுமாறிக்கொண்டு என் வாயிலிருந்து வெளிவந்த முதல் வார்த்தைகள் முழு உருவம் பெற்றிருந்தனவா என்பது எனக்குத் தெரியாது. புதுப்பலம் பெற்று என் ஆத்மாவைப் பிணைத்திருந்த தளைகள் எல்லாம் பற்று அற்று விழுந்து விட்டன என்று தோன்றியது எனக்கு. பேச்சு என்கிற சாதனத்தின் மூலம் உலகிலுள்ள அறிவு எல்லாவற்றையும் எட்டிவிடலாம் என்று தைரியம் ஏற்பட்டது.

காதால் கேட்காத வார்த்தைகளைப் பேச முயலும் எந்தச் செவிட்டுக் குழந்தைக்கும் தெரியும்; அது பேசுகிற

முதல் வார்த்தைகள் ஓர் அற்புத அனுபவம். அந்தக் குழந்தையைச் சூழ்ந்திருக்கும் மௌனம் என்னும் சிறையி லிருந்து அது விடுதலை பெறும் வைபவம் மகத்தானது. எப்படிப்பட்ட மௌனச் சிறை அது; அன்பு என்கிற ஒலி அங்கில்லை; பக்ஷிகளின் குரல் கேட்காது; சங்கீதத்தின் சிறு அம்சம்கூட அங்கு கிடையாது. அப்படிப்பட்ட மௌனத்திலிருந்து விடுபட்ட அந்தக் குழந்தை சொல்கிற முதல் வார்த்தை எவ்வளவு நம்பிக்கைக்கும், எவ்வளவு ஆனந்தத்துக்கும் அஸ்திவாரமாக அமையும் என்று ஊகித்து அறிந்து கொள்ளமுடியுமே தவிர, சொல்லி முடியாது. என் பொம்மைகளிடமும், கற்களிடமும், மரங் களிடமும், பக்ஷிகளிடமும் நான் பேசத் தொடங்கிய வேகம் இதனால் ஏற்பட்டதுதான். நான் கூப்பிடும்போது அதைப் புரிந்துகொண்டு மில்டிரெட் ஓடிவந்தாள். என்பது எனக்குக் கரை காணாத சந்தோஷத்தைத் தந்தது. என் நாய்களை விரட்டிப் பல காரியங்களைச் செய்ய ஏவினேன். ஒருவரும் குறுக்கிட்டு அர்த்தப்படுத்த வேண்டாத முறையில் நான் நேரடியாகப் பிறருக்குத் தெரியும்படியாக என் மனசிலிருந்ததைச் சொல்ல முடிந்தது என்பது கடவுளின் அதிசயங்களில் ஒன்றாகத் தோன்றியது. இதை விடச் சிறந்த காரியம் வேறு என்ன இருக்கமுடியும்? விரல்களுக்கிடையில் சிக்கித் தவித்த என் சிந்தனைகள் இப்போது சிறகடித்துப் பறந்து உல்லாசமாக வெளி வந்தன.

ஆனால் சில மாதங்களுக்குள்ளாகவே நான் பேசக் கற்றுக் கொண்டு விட்டேன் என்று நினைப்பது தவறு. பேசுவதற்கு அஸ்திவாரமான ஒலிகளை மட்டும்தான் நான் பல வாரங்களில் கற்றுக் கொண்டேன். மிஸ் புல்லருக்கும், மிஸ் ஸல்லிவனுக்கும் என் பேச்சு புரிந்தது. மற்றவர்

களுக்கோவெனில் நான் சொல்லுகிற வார்த்தைகளில் நூற்றுக்கு ஒன்றுகூடப் புரியாது. பேச்சுக்கு அஸ்திவாரமான ஒலிகளை அறிந்து கொண்ட பிற்பாடும் கூட எனக்குப் பேச்சு சுலபத்தில் வந்துவிடவில்லை. நானாகச் செய்யக் கூடியது ஒன்றும் இல்லை. மிஸ் ஸல்லிவனின் மேதையும், அலுப்புச் சலிப்புமில்லாத உழைப்பும், பிரியமும் இல்லாவிட்டால், என்னால் எதிலும் எந்தத் திசையிலும் முன்னேறி யிருக்கவே முடியாது. இந்தப் பேச்சு விஷயத்திலும் அது உண்மையே. ஒவ்வொரு ஒலியையும் தெளிவாகச் சொல்லி, பலவிதமான அர்த்த புஷ்டியான வார்த்தைகளை வாக்கியங்களாகக் கோர்ப்பதற்கு எனக்கு மிஸ் ஸல்லிவனின் இடைவிடாத உதவி தேவையாக இருந்தது. இப்பொழுதும் கூட அவள் என் உச்சரிப்பில் ஏதாவது தவறு இருந்தால் திருத்துகிறாள்.

செவிடர்களுக்குப் பேசச் சொல்லித் தரும் காரியத்தில் ஈடுபட்டுள்ளவர்களுக்குத் தெரியும் இதிலுள்ள சிரமங்கள். பேச்சை அடைய நான் எப்படிப்பட்ட போராட்டம் நடத்தினேன் என்பதைப் புரிந்து கொள்ள அவர்களால் தான் முடியும். என் உபாத்தியாயினியின் உதடுகள் அசைவதைத் தொட்டுப் பார்த்து நான் ஒலியின் வடிவை அடைய வேண்டும்; இதற்கு என் கை விரல்களைத் தவிர வேறு எவ்வித சாதனமும் இல்லை. தொண்டை, வாய், வாயின் அசைவுகள்; முகத்தின் பாவம் எல்லாவற்றையும் கை விரல்களை மட்டும் கொண்டு அறிய முற்படுகிறவர்களுக்கு எவ்வளவு ஆயாசம் இருக்கும் என்று சொல்லாமலே ஊகித்துக் கொள்ளலாம். இந்த மாதிரிசந்தர்ப்பங்களில் நான் ஒவ்வொரு ஒலியையும் நூறு தடவைக்கு ஆயிரம் தடவையாகத் திரும்பித் திரும்பிச் சொல்ல வேண்டும்; என் குரலில் எனக்கே திடமும் நம்பிக்கையும்

பிறந்து, பிறருக்கும் புரிகிற அளவுக்கும் சொல்லவேண்டும். பழகிப் பழகிக் கற்றுக் கொண்டேன்; வாய்வலிக்கப் பேசப் பழகினேன். அடிக்கடி அலுப்புத் தட்டி விடும்; எடுத்துக் கொண்ட காரியம் முடியாது போலிருக்கிறதே என்று அதைரியம் ஏற்பட்டுவிடும். ஆனால் அடுத்த நிமிஷமே வீடு திரும்பி என்னிடம் அன்பு வைத்திருந்தவர்களிடம் நாவால் பேசலாம் என்கிற ஆசை ஏற்பட்டு என்னைப் பேசப் பழகத் தூண்டிவிடும். ஓய்ந்து உட்கார்ந்துவிடமாட்டேன்.

"என் சின்னத் தங்கைக்கு இப்போது புரியும் நான் பேசுவது" என்று எனக்குள் நானே கூறித் தேற்றிக் கொள்வேன். எல்லா இடையூறுகளையும் வென்று வெற்றி காண என்னைத் தூண்டிய மந்திரம் இது. "நான் ஊமை யல்ல. முயற்சி செய்தால் என்னாலும் பேசமுடியும்" என்கிற நினைப்பு என் ராக்ஷஸ முயற்சிகளில் எனக்கு ஊக்க மூட்டியது. என் தாயாருடன் பேசி அவள் தருகிற பதிலைக் கை விரலால் அவள் உதடுகளைத் தடவி அறிந்து கொள்ள லாம் என்கிற நினைப்பு என்னுள் இருந்தவரையில் எனக்கு அதைரியம் பிறக்காது. கையில் கை விரல்களால் எழுதிக் காட்டிப் பேசுவதைவிட, வாயைத் திறந்து வார்த்தை சொல்வது எவ்வளவு சுலபமான வழி என்பதை அறிந்து நானே திகைத்துப் போனேன். எனினும் மிஸ் ஸல்லிவனும் வேறு சில நண்பர்களும் கையில் எழுதியே இன்னமும் என்னுடன் பேசுகிறார்கள். ஏனென்றால் உதட்டைத் தொட்டுப் பேசுவதைவிட அது சௌகரியமாகவும் இருக் கிறது; சில சமயம் சீக்கிரமும் முடிகிறது.

இந்த இடத்தில் எங்களுடைய கை விரல் எழுத்துப் பழக்கத்தைச் சற்று விரிவாக உரைப்பது நல்லது என்று எனக்குத் தோன்றுகிறது. ஏனென்றால் எங்களை அறியாத பலருக்கு இது பலவிதங்களிலும் திகைப்பாக இருக்கிறது.

என்னிடம் எதையும் வாசிக்கவோ பேசவோ விரும்புகிற வர்கள், செவிடர்கள் சாதாரணமாக உபயோகிக்கும் ஒரு கை விரலால் எழுதும் எழுத்து முறையையே பின்பற்று வார்கள். பேச விரும்புபவர் கைமேல் என் கையை மெது வாக வைத்துக்கொள்வேன். அந்தக் கையின் வேகம் என் கைப்பிடிப்பினால் தடைப்படால் பார்த்துக்கொள்வேன். கையைப் பார்ப்பதற்கும் உணர்வதற்கும் சௌகரியமாக இருக்கிறது. எல்லா எழுத்துக்களையும் எழுதுகிற படிக்கிற வேகத்திலும், புஸ்தகத்திலிருந்து படிப்பவனுக்கு உள்ளதுபோல, தனி எழுத்துக்கள் மனசில் குறுக்கிடுவ தில்லை. அடிக்கடி பழகினால் வெகுவேகமாக எழுத்துக்களை எழுதலாம் டைப்ரைட்டரில் வெகுவேகமாக எழுதப் பழகியவள் மாதிரி எழுதலாம். எழுதிக்கூட்டுவதென்பது ஆரம்ப நிலைதான். கண்ணால் பார்ப்பதுபோலவே வார்த் தைகள் முழு உருவம் பெற்றுவிடுகின்றன நாளடைவில்.

என்னால் பேசமுடியும் என்று ஏற்பட்ட பிறகு, எனக்கு வீட்டுக்குப்போக அவசரம் தாங்க முடியவில்லை. என் வாழ் நாளிலேயே சந்தோஷம் நிறைந்த நாள் என்று சொல்லக் கூடிய நாள் வந்துவிட்டது. மிஸ் ஸல்லிவனுடன் சளசள வென்று வழி நெடுகப் பேசிக்கொண்டே நான் என் வீடு திரும்பினேன். பேசவேண்டும் என்கிற வேகத்தில் பேச வில்லை நான். என் பேச்சுத் திறன் கூடவேண்டும் என்கிற ஆசையுடன் வாய் ஓயாமல் பேசினேன். நான் அதைக் கவனிப்பதற்கு முன்பே ரெயில் டஸ்டும்பியா ஸ்டேஷனில் நின்றது. பிளாட்பாரத்தில் என் குடும்பத் தினர் பூராவும் என்னை வரவேற்கக் காத்திருந்தனர். இப்பொழுது ஞாபகப்படுத்திப் பார்த்துக்கொண்டாலும் கூட எனக்குக் கண்ணில் நீர் நிறைகிறது. என் அம்மா மௌனமாக ஒரு வார்த்தைகூடப் பேசாமல் நான் பேசிய

வார்த்தைகளை எல்லாம் காதில் வாங்கிக்கொண்டு என்னைக் கட்டியணைத்துத் தழுவிக்கொண்டாள். அம்மாவின் உடல் ஆனந்தத்தால் நடுங்கியது என்று நான் கவனித்தேன். என் தங்கை மில்டிரெட் என்னுடைய கையைப் பிடித்துக்கொண்டு நாட்டியமாடினாள்; அந்தக் கையை முத்தமிட்டாள். தனக்குள் ஏற்பட்ட பூரிப்பும் பெருமையும் வெளியே வழிந்தோட என் அப்பாவும் மௌனமாக இருந்தார். என்னிடம் அவர் வைத்திருந்த அன்பு எத்தகையது என்று சொல்லமுடியாது. இஸையா என்கிற மஹானின் வார்த்தைகள் என வாழ்வில் பூரணத்வம் பெற்றுவிட்டதுபோல இருந்தது. "உன் கண் முன் மலைகளும் குன்றுகளும் வாய் திறந்து பாடத் தொடங்கும்; வயல் வெளிகளில் நிமிர்ந்து நிற்கும் மரங்கள் கை கொட்டி ஆரவாரிக்கும்."

## 14

என் குழந்தைப் பருவத்தின் பிரகாசமான வானத்தின் அமைதி 1892-ல் மாரிக்காலத்தில் திடீரென்று ஏற்பட்ட ஒரு மேகத்தால் குலைந்தது. என் மனத்தை விட்டுச் சந்தோஷம் என்பதே அகன்றது. வெகு நாள் வரையில் நான் கவலையுடனும், சந்தேகத்துடனும், பயத்துடனு வாழ்ந்தேன். புஸ்தகங்கள் என் கவனத்தைக் கவர மறுத்தன. இப்போது நினைத்துப் பார்த்தாலும் கூட அந்த நாட்களின் நினைவு எனக்குத் துக்கம் தருவதாக இருக்கிறது. இந்தத் தொந்தரவு தொல்லைகளுக்கெல்லாம் ஆதாரம் என்று சொல்லக் கூடியது என்ன? நான் " பனி ராஜன் " என்று எழுதிய ஒரு கதைதான். அதை எழுதி நான் குருடர்களுக்கான பெர்க்கின்ஸ் ஸ்தா

பனத்தைச் சேர்ந்த மிஸ்டர் அனக்னஸ் என்பவருக்கு அனுப்பினேன். இந்தச் சம்பவத்தைத் தெளிவாகச் சொல்ல வேண்டியது அவசியம். ஆரம்பத்திலிருந்து நேர்மையாகவே சொல்லி விடுகிறேன். அப்படிச் சொன்னால் தான் எனக்கும் என் உபாத்தியாயினிக்கும் நியாயம் வழங்குகிற முறையில் சொல்ல முடியும்.

நான் பேச ஆரம்பித்ததற்கு மறு வருஷம். இலையுதிர் காலத்தில், வீட்டிலிருக்கும்போது நான் அந்தக் கதையை எழுதினேன். வழக்கமாகத் தங்குவதைவிட அவ்வருஷம் அதிக நாட்கள் நாங்கள் பெர்ண்குவாரியில் தங்கி விட்டோம். அங்கிருக்கும்போது, மிஸ் ஸல்லிவன் என் மனசில் படும்படியாக இலையுதிர் காலத்தின் முடிவில் தோன்றுகிற இலைகளையும் பயிர் தளிர் முதலியவற்றையும் எனக்கு விவரித்தாள். அவளுடைய வர்ணனை என் மனசில் நானும் அறியாமலே பதுங்கியிருந்த ஒரு கதையை எனக்கு ஞாபகமூட்டியிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. எப்பொழுது அந்தக் கதையை நான் கேட்டேன் என்பது எனக்கே தெரியாது. ஏதோ கதை ஒன்று நானகக் கட்டிக் கொண்டிருப்பதாகத்தான் நான் எண்ணினேன். அவசரமாக அது மனசிலிருந்து நழுவி மறைந்துவிடப் போகிறதே என்று உடனேயே அந்தக் கதையை எழுத உட்கார்ந்துவிட்டேன். என் கை விரல்களிலிருந்து பெரிய மோதிரம் நழுவுவது போல அவ்வளவு சுலபமாக எனக்கு வார்த்தைகளும், வாக்கியங்களும், உவமைகளும் வந்தன. வாக்கியத்துக்குப் பின் வாக்கியமாக என்னுடைய ப்ரெய்ல் (குருடர்களின் எழுத்து) ஸ்லேட்டில் எழுதினேன். இப்பொழுதெல்லாம் வார்த்தைகளும் வாக்கியங்களும் உவமைகளும் சுலபமாக எனக்கு வந்தால் அவை என்னுடையவை அல்ல, எங்கோ மூலையில் ஒளிந்து

கொண்டிருக்கும் பிறர் வார்த்தைகள், வாக்கியங்கள், உவமைகள் என்று அவற்றை ஒதுக்கி விடுவேன். அந்த சமயத்தில் நான் வாசித்ததெல்லாம் என் மனசில் ஒளிந்திருந்தது. ஆசிரியர் என்றோ, பதிப்புரிமை என்றோ எவ்வித ஞாபகமும் எனக்குக் கிடையாது. புஸ்தகங்களில் நான் கண்டு பிடித்துக் கொண்ட சிந்தனைகளுக்கும் என் சொந்தச் சிந்தனைகளுக்கும் இடையில் உள்ள வேலி இன்னது என்று எனக்கு இப்போதும்கூடச் சரிவரத் தெரியத்தானில்லை. பிறருடைய கண்கள் காதுகள் மூலமாகத்தான் என்உணர்ச்சிகள் பலவும் உருவாகி வந்தன என்பது கூட இதற்குக் காரணமாக இருக்கலாம்.

அந்தக் கதை எழுதி முடிந்ததும், நான் அதை என் உபாத்தியாயினியிடம் வாசித்துக்காண்பித்தேன். எனக்கே என் கதையில் பல பகுதிகளும் வாக்கியங்களும் மிகவும் திருப்திகரமாக அமைந்துவிட்டதுபோலத் தோன்றியது. சாப்பிடும்போது அந்தக் கதை என் குடும்பத்தாருக்கும் வாசித்துக் காட்டப்பட்டது. நான் இவ்வளவு அழகாக எழுதுவேன் என்பதைப் பற்றி என் குடும்பத்தாருக்கு ஆச்சரியமாக இருந்தது. நான் அந்தக் கதையை ஏதாவதொரு புஸ்தகத்தில் படித்திருந்தேனோ என்று யாரோ கேட்டதும் எனக்கு ஆச்சரியமாகப் போய்விட்டது.

வேறு எங்கேயும் அந்தக் கதையைப் படித்ததாக எனக்குச் சிறிதும் ஞாபகம் இல்லை.' நான் நிமிர்ந்து நின்று பதில் அளித்தேன்! "இல்லை, இல்லை, அது என் கதை—சொந்தமாக நான் எழுதிய கதை.. மிஸ்டர் அனக்ஞஸுக்காக எழுதிய கதை" என்றேன்.

ஆகவே, அதைப் பிரதி எடுத்து அவருடைய பிறந்த நாளன்று அவருக்குக் கிடைக்கும்படியாக அனுப்பி வைத்தேன். அதன் பெயர் "இலையுதிர் காலத்து இலைகள்"

என்று இருப்பதற்குப் பதில் "பனிராஜா" என்று இருந் தால் நன்ருக இருக்கும் என்று யாரோ சொன்னதன் பேரில் நான் அதன் பெயரை மாற்றினேன். நானே அதைக் கொண்டுபோய்த் தபாலில் சேர்த்தேன்.

"பனிராஜா" என்கிற என் கதை மிஸ்டர் அனக்னுஸுக்குப் பிடித்திருந்தது. பெர்க்கின்ஸ் ஸ்தாபன அறிக்கைகள் ஒன்றில் அதை அவர் பிரசுரித்தார். அப்போது என் சந்தோஷத்தின் உச்சியை எட்டிவிட்டேன் நான். சிறிது நாளிலேயே என் சந்தோஷம் அழிந்தது; மலையுச்சியிலிருந்து நான் கீழே புரட்டித் தள்ளப்பட்டேன். போஸ்டன் நகருக்கு நான் போயிருந்தசமயம் என் "பனிராஜா" என்ற கதையை போன்ற ஒரு கதை மிஸ்மார்கரெட்டி.கான்பி என்பவளால்"பனித்தேவதைகள்" என்கிற பெயருடன் நான் பிறப்பதற்கு முன்னரே பிரசுரமான "பர்டியும் அவன் நண்பர்களும்" என்கிற புஸ்தகத்தில் வெளி வந்திருப்பதாகத் தெரிய வந்தது. இரண்டு கதைகளும் வார்த்தைகள், வாக்கியங்கள், உவமைகள் இவற்றில் மிகவும் ஒத்திருந்தன. மிஸ் கான்பியன் கதையை யாரோ எனக்குப் படித்துச் சொல்லியிருக்கவேண்டும். என் கதைவெறும் திருட்டுக் கதைதான் என்று ஏற்பட்டு விட்டது. எனக்கு இதைப் புரிந்துகொள்வது மிகவும் சிரமமான காரியமாக இருந்தது. மிஸ் ஸல்லிவன் சொல்லி நான் புரிந்துகொண்டதும் எனக்கு அதிசயமாகவும் இருந்தது; துக்கமாகவும் இருந்தது. என்ன அவமானம்! என் அன்பைப் பெற்றிருந்த என் உபாத்தியாயினிக்கு நான் அழிக்க முடியாத ஓர் அவமானத்தைத் தேடித்தந்து விட்டேன்! எங்களை யார் நம்புவார்கள் இனி? இருந்தாலும் இதெல்லாம் எப்படித்தான் நடந்திருக்கும் என்று எனக்குப் புரியத்தானில்லை. நான் யோசித்து யோசித்துப் பார்த்

தேன். பனியைப்பற்றி நான் வாசித்திருந்ததை யெல்லாம் ஞாபகப்படுத்திப் பார்த்துக் கொண்டேன். என் "பனி ராஜா" கதைக்கு உதவியிருக்கக்கூடிய கதை எதுவும் என் ஞாபகத்துக்கு வரவில்லை.

முதலில் மிஸ்டர் அனக்னஸுக்கு என்னிடம் நம்பிக்கை யிருந்தது. என்னைப்பற்றி அனுதாபமும் இருந்தது. வழக்கத்தைவிட அதிகப் பிரியமாகவும் அன்புடனும் நடந்துகொண்டார். என்மேல் படிந்த நிழல் சற்றே நகருவதுபோல இருந்தது. அவரைத் திருப்தி செய்வதற்காக நான் துக்கப்படாமலிருக்க முயன்றேன். வாஷிங்டன் பிறந்த தினக் கொண்டாட்டம் இந்தத் துக்கத்தை அடுத்து வந்தது. அனக்னஸுக்காக நான் இந்த விழாவில் அழகாக ஆடையுடுத்துக் கலந்து கொள்ளச் சம்மதித்தேன்.

கண்ணில்லாத சிறுமிகள் சேர்ந்து ஒரு சிறு நாடகம் நடத்தத் தீர்மானித்திருந்தார்கள். அந்த நாடகத்தில் எனக்கு செரஸ் என்கிற கிரேக்க தேவதை (தானியங்களுக்குத் தேவதை) யின் பாகம் தரப்பட்டிருந்தது. அழகான ஆடைகள் அணிந்து, பளபளக்கும் இலைகளினால் ஆன கிரீடம் அணிந்து, கையில் பழங்களுடனும், தானியங்களுடனும், நான் மேடைமேல் தோன்றவேண்டும். விளையாட்டும் வேடிக்கையுமாக இருந்தாலும் வரப்போகிற கெடுதியின் நிழல் எல்லாவற்றிற்கும் பின்னால் நின்று பயங்கரமாக என்னை அச்சுறுத்தியது.

விழாவிற்கு முதல் நாள் இரவு பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்த உபாத்தியாயினிகளில் ஒருத்தி என்னை என் கதையைப் பற்றிப் பேசத் தூண்டினாள். பனிராஜாவையும் அவனுடைய அற்புதமான காரியங்களையும் பற்றி மிஸ் ஸல்லிவன் எனக்குச் சொன்னதை யெல்லாம்

அவளிடம் சொன்னேன். நான் சொன்னதில் ஏதோ ஒன்றின் காரணமாக மிஸ் ஸல்லிவன் எனக்கு ,மிஸ் கான்பி யின் "பனித் தேவதைகள்" என்கிற கதையைப் படித்துக் காண்பித்திருக்கிருள் என்று இந்த உபாத்தியாயினிக்கு நம்பிக்கைஏற்பட்டதுபோலும், தன்முடிவை அவள் மிஸ்டர் அனக்னுஸிடம் தெரிவித்தாள்.

என்னிடம் அளவுகடந்த அன்புகொண்ட மிஸ்டர் அனக்னுஸுக்கு நாங்கள் அவரை ஏமாற்ற ஏதோ சூழ்ச்சி செய்து நடத்திவிட்டதாகத் தோன்றிவிட்டது. அன்பு என்கிற தத்துவமோ, தவறு செய்யவில்லை, தெரிந்து செய்யவில்லை என்கிற தத்துவமோ அவர் மனசை மாற்ற வில்லை. அவருடைய நன்மதிப்பைப் பெறுவதற்காக நானும் மிஸ் ஸல்லிவனும் அந்தக் கதையை வேறு ஒருவரிட மிருந்து வேண்டுமென்றே திருடிவிட்டோம் என்று அவர் சந்தேகிக்கத் தொடங்கிவிட்டார். இந்த விஷயத்தை விசாரிக்க ஒரு ஏற்பாடும் செய்தார்கள். பெர்க்கின்ஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்த பல அதிகாரிகளும் உபாத்தி யாயர்களும் என்னை விசாரித்தனர். மிஸ் ஸல்லிவனை அப்பாற் போகச் சொல்லிவிட்டு என்னைக் கேள்விகளும் குறுக்குக் கேள்விகளும் கேட்டு மடக்கினர்கள். ஒவ்வொரு கேள்வியும் என் கதையைப் பிய்ப்பதுபோ லிருந்தது. அவர்கள் மனசிலிருந்த சந்தேகம் என்னை ஊசிபோலக்குத்தியது. வார்த்தைகளில் அகப்படாத ஒரு சோகம் என் மனசைப் பாதித்தது. என் னிடம் அன்பு வைத்திருந்த ஒருவருக்கே இப்படி என்னிடம் அவநம்பிக்கை ஏற்பட்டு விட்டதே; இனி என்ன செய்வேன் என்கிற ஒரு பயம்தான் என் உள்ளத்தில் மேலோங்கி நின்றது. என் ரத்தம் துடித்தது. ஒன்றி ரண்டு வார்த்தைகளுக்குமேல் என்னல் பேச முடியவில்லை

நாக்குழறியது. ஏதோ எங்கேயோ தெரியாமல் நேர்ந்து விட்ட ஒரு தவறுதான் என்றாலும் அதைச் சகித்துக் கொள்ள எனக்குச் சக்தியில்லை. கடைசியில் அந்த அறையை விட்டு வெளியே போக அனுமதி கிடைத்த பிறகும் கூட எனக்கு நிம்மதி ஏற்படவில்லை. என்னைத் தேற்ற மிஸ் ஸல்லிவன் செய்த முயற்சிகள் கூட என் உள்ளத்தில் உரைக்கவில்லை. என் நண்பர்களின் ஆறுதல் மொழிகளும் எனக்குத் திருப்தி தரவில்லை.

அன்றிரவு படுக்கையில் படுத்து இரவு பூராவும் அழுதேன். அந்த மாதிரி அழுகை எந்தக் குழந்தையும் அழ வேண்டி வராமல் இருக்கட்டும் என்று பிரார்த்திக் கிறேன் நான். எனக்குக் குளிர் நடுக்கியது. பொழுது விடிவதற்குள் இறந்து விடுவேன் என்கிற ஒரு நம்பிக்கை தான் எனக்கு அப்போது மிகவும் ஆறுதலாக இருந்தது. இந்தத் துக்கம் பின்னர் எனக்கு ஏற்பட்டிருந்தால் நான் நிமிர்ந்திருக்கவேமாட்டேன். ஆனால் அந்த துக்கம் நிறைந்த நாட்களின் நினைவை மறதி என்கிற வெள்ளம் நாளடை வில் அடித்துக் கொண்டு போய்விட்டது.

“பனித் தேவதைகள்” என்கிற கதையைப் பற்றியோ அது பிரசுரமாகியிருந்த கதைத் தொகுதியைப் பற்றியோ மிஸ் ஸல்லிவன் கேள்விப்பட்டதே இல்லை. டாக்டர் அலெக்ஸாண்டர் கிரஹாம் பெல் என்பவருடைய உதவி யுடன் அவள் இந்த விஷயத்தை வெகு சிரமப்பட்டு ஆராய்ந்தாள். கடைசியில் தெரியவந்தது இதுதான். மிஸ்ஸிஸ் ஹாம்கின்ஸ் என்பவரிடம் 1888ல்’ பர்டியும் அவன் நண்பர்களும்” என்கிற புஸ்தகத்தின் பிரதி ஒன்று இருந் தது. மிஸ்ஸிஸ் ஹாப்கின்ஸுடன் அந்த வருஷம் ப்ரூஸ் டரில் கோடைகாலத்தில் நான் தங்கினேன். அந்தப் புஸ்த கத்தின் பிரதி தொலைந்துவிட்டது. ஆனால் மிஸ் ஸல்லி

வன் விடுமுறையில் போயிருந்தபோது எனக்கும் போது போவதற்காக மிஸ்ஸிஸ் ஹாப்கின்ஸ் எனக்குப் பல புஸ்தகங்களிலிருந்து கதைகளை வாசித்துக் காட்டினாளாம். "பனித் தேவதைகள்" என்கிற கதையையும் படித்துக் காட்டினாளா இல்லையா என்பது திட்டமாக அவளுக்கும் ஞாபகம் இல்லை. படித்திருக்கலாம்.

அந்தக் கதைகளின் அர்த்தமோ வார்த்தைகளோ அப்போது எனக்கு ஒன்றும் பிரமாதமாகப் புரிந்திருக்க நியாயமில்லை. ஆனால் ஒன்றும் புரியாத நிலையிலும்கூட அந்த வார்த்தைகளும் வாக்கியங்களும் என் மனசில் பதிந்துவிட்டன போலும். வேறு ஒன்றும்தான் எனக்குக் கிடையாதே! அந்தக் கதையையோ, அந்தப் புஸ்தகத்திலுள்ள வேறுகதைகளையோ மிஸ்ஸிஸ் ஹாப்கின்ஸ் படிக்கக் கேட்டதாக எனக்குச் சிறிதும் ஞாபகமில்லை. மிஸ் ஸல்லிவன் திரும்பியதும் அவற்றின் அர்த்தத்தைக் கேட்டுத் தெரிந்துகொள்ளலாம் என்று நான் எண்ணி அவற்றை மனசில் ஞாபகம் வைத்திருக்க முயன்றேனோ என்னவோ நானும் அறியாமலே அந்த வாக்கியங்கள் என் மூளையிலே பதிந்துவிட்டன போலும்.

மிஸ் ஸல்லிவன் திரும்பியவுடனேயே இருவரும் "சின்னப் பிரபு பாண்டல்ராய்" என்கிற கதையைப் படிக்கத் தொடங்கிவிட்டோம். அந்தக் கதை எனக்கு மிகவும் பிடித்திருந்தது. அந்த சுவாரஸ்யத்திலே நான் மற்றதெல்லாவற்றையும் மறந்துவிட்டேன்.

இந்த துக்ககரமான சந்தர்ப்பத்தில் எனக்குப் பலர் அன்புடனும் ஆதரவுடனும் அனுதாபத்துடனும் கடிதங்கள் எழுதினார்கள். என் நண்பர்கள் என்று நான் எண்ணியவர்கள் எல்லோரும்; அதாவது ஒருவரைத் தவிர மற்ற

வர்கள் எல்லோரும்; இன்று வரை என் நண்பர்களாகவே தான் இருக்கிறார்கள்.

மிஸ் கான்பி என்கிற ஆசிரியை எனக்கு அன்பு ததும்ப ஒரு கடிதம் எழுதினாள்: "என்றைக்காவது ஒரு நாள் நீ ஒரு பிரமாதமான புதுக்கதை எழுதுவாய். அது முழுவதும் உன் கற்பனையாகவே இருக்கும். அந்தக் கதை பலருக்கும் ஆதரவளிக்கவல்லதாகவும், வழிகாட்டக் கூடியதாகவும் இருக்கும்." ஆனால் இன்றுவரை இந்த ஜோசியம் பலிக்கவில்லை, வார்த்தைகளை, வார்த்தைகளாக மட்டும் நம்பி அதற்குப் பிறகு நான் விளையாடியதில்லை. எழுதுவதிலே அதற்குப் பிறகு பல நாள் எனக்கு இன்பம் இல்லாமலே போய்விட்டது. உண்மையில் சொல்லப் போனால், நான் எழுதுவது எதுவுமே முழுவதும் என்னுடையதாக இல்லாமல் போய்விட்டால் என்ன பண்ணுவது என்கிற பயந்தான் எனக்கு. அம்மாவுக்குக் கடிதம் எழுதினாலும் கூட அதே வாக்கியத்தை வேறு யாராவது அதேமாதிரி சொல்லி யிருப்பார்களோ என்கிற பயம் தோன்றிவிடும் எனக்கு. மிஸ் ஸல்லிவன் விடாப்பிடியாக நம்பிக்கை இழக்காமல் என்னை எழுதத் தூண்டியிராவிட்டால் நான் எழுதுவதையே அடியோடு நிறுத்தியிருப்பேன்.

அமர்க்களம் ஓய்ந்தபிறகு நான் "பனித் தேவதைகள்" என்கிற கதையை மீண்டும் படித்துப் பார்த்தேன். மிஸ் கான்பியின் வாக்கியங்களையும் சிந்தனைகளையும் நானும் அறியாமலே உபயோகித்திருக்கிற அந்தக் காலத்துக் கடிதங்களையும், "பனி ராஜா" என்கிற என் கதையையும் திரும்பவும் படித்துப் பார்த்தேன். 1891, ஸெப்டம்பர் 29உ அன்று நான் மிஸ்டர் அனக்னாஸுக்கு எழுதிய ஒரு கடிதத்தில், கான்பியின் கதையில் இருக்கிறமாதிரியே பல வாக்கியங்களும், உவமைகளும், சிந்தனைகளும் அமைந்திருந்தன.

சற்றேறக்குறைய அதே சமயத்தில்தான் நான் என் கதை "பனி ராஜா"வை எழுதிக்கொண்டிருந்தேன். அந்தக் கதையின் சிந்தனைகளும் வாக்கியங்களும் என் மனசை நிரப்பியிருந்தன என்பதற்கு அந்த நாட்களில் எழுதிய கடிதங்களைவிடச் சிறந்த அத்தாட்சி தேவையில்லை. தங்க நிறமான இலை யுதிர்காலத்து இலைகளைப்பற்றி "கோடை போய்விட்டது பற்றி ஏற்படுகிற துக்கத்துக்கு மாற்றான வகையிலே அவை அழகாக இருக்கின்றன" என்று என் உபாத்தியாயினி சொல்வதாக எழுதியிருக்கிறேன். இது அப்படியே மிஸ் கான்பியின் கதையில் இருக்கிறது.

படித்ததில் எனக்குப் பிடித்ததை இந்தமாதிரி கிரகித்துக்கொள்ளவும், அதை என்னுடையதே போல வெளியிடவும் எனக்குச் சக்தியிருந்தது என்பது அந்தக் காலத்தில் நான் எழுதிய கடிதங்களிலிருந்து தெளிவாகவே அறியக் கிடக்கிறது. கிரீஸ், இதாலி போன்ற தேசங்களின் பழைய நகரங்களைப்பற்றி நான் எழுதிய ஒரு வியாசத்தில் நான் பல இடங்களிலிருந்தும் வார்த்தைகளையும் வாக்கியங் களையும் எடுத்திருந்தேன். மிஸ்டர் அனக்னுஸுக்கு இந்த மாதிரி விஷயங்களில் உள்ள ஈடுபாடும் ஆர்வமும் எனக்குத் தெரியும். நான் படித்த நூல்களிலிருந்து சிறிது சிறிதாக விஷயத்தைச் சேகரித்து அந்த வியாசத்தை எழுதினேன். கவிதைகள், கதைகள், வியாசங்கள் எல்லாம் அந்த வியா சத்தைஎழுத எனக்கு உதவின. அந்த வியாசத்தைப் பாராட்டிய மிஸ்டர் அனக்னுஸ், "இது கவிதை நிறைந்த தாக இருக்கிறது" என்று கூறினர். கண்ணும் காதும் இல்லாத பதினேரு வயதுச் சிறுமி இதெல்லாம் பற்றி எப்படி அறியக் கூடும். தானகவே கற்பனை செய்திருக்க முடியுமா?—என்று அவர் யோசித்ததாகத் தெரியவில்லை. இருந்தாலும் சிந்தனைகளோ உவமைகளோ என்னுடை

யவை அல்ல என்பதற்காக, அந்த வியாசம் பூராவுமே என்னுடையதல்ல என்று எப்படிச் சொல்வது என்றுதான் எனக்குத் தெரியவில்லை. அந்த வியாசத்தை இப்போது படிக்கும்போது எனக்குத் தோன்றுவது இதுதான்; அழகான கவிதை நிரம்பிய செய்திகளைத் தெளிவான உயிருள்ள பாஷையில் சொல்ல முயன்றேன் நான் என்று தோன்றுகிறது.

ஆரம்ப காலத்தில் நான்எழுதிய வியாசங்கள் எல்லாம் எனக்கு மனப் பயிற்சியே தவிர வேறு அல்ல. அறிவோ அனுபவமோ அதிகமில்லாத சிறுவர் சிறுமியர் சாதாரண மாகச் செய்கிற காரியத்தைத்தான் நானும் செய்தேன். பார்த்தும் கேட்டும் படித்தும் தெரிந்துகொண்டதை யெல்லாம் வார்த்தைகளில் கோர்த்து வியாசமாக்க முயன் றேன்; சிந்தனைகளை வாக்கியங்களாக்க அறிந்துகொள்வது எப்படி? படித்து, படித்தமாதிரியே எழுதுவதுதான். படித்ததில் எனக்குப் பிடித்ததையெல்லாம் மனசின் ஆழத் தில் இருத்தி வைத்துக்கொள்ள முயன்றேன். தனக்குப் பிடித்ததையெல்லாம் அப்படியே பிரதி எடுக்கத்தான் பாலிய எழுத்தாளன் முயலுகிறுன் என்று ஸ்டீவன்ஸன் சொன்னது எவ்வளவு உண்மை! ஒருசமயம் ஒன்று பிடிக் கிறது. வேறு ஒருசமயம் வேறு ஒன்று பிடிக்கிறது; கட்டுக்கடங்காத ஒரு வெறி அது. பல வருஷங்களுக்குப் பிறகுதான் பெரிய ஆசிரியர்கள் என்று சொல்லிக் கொள் பவர்களுக்கும்கூட வார்த்தைகளை, உவமைகளை, சிந்தனை களைத் தனது என்று அழுத்தமாகச் சொல்லக்கூடிய தனி வழியில் கையாளத் தெம்பு வருகிறது.

இந்தப் பிரதி எடுக்கிற வழியோ சாதனமோ என் விஷ யத்தில் இன்னும் பூர்த்தியடைந்து விட்டதாக எனக்குத் தோன்றவில்லை. என் சிந்தனைகளை நான் படிக்கிற புஸ்தகங்

களின் சிந்தனைகளிலிருந்து பிரித்துச் சொல்லக்கூட எனக்கு இன்னமும் தெரியவில்லை. நான் படிப்பது எல்லாமே என் மனசில் சலியாமல் பாவோடுகிறது. இது காரணமாக நான் ஏதாவது எழுத முயன்றாலும் ஒட்டு ஒட்டாகத் தெரிகிறது. ஒட்டுப்போட்ட மெத்தை செய்ய என்னென்னவோ பயன்படுகிறது; பட்டுத்துணி, வெல்வெட்டுத் துண்டுகள், சீட்டித் துணி எல்லாமே; ஆனால் அதிகமாக இருந்தது சொறசொறப்பான மலிவான துண்டுகள்தான். என் எழுத்துக்களிலும் சீட்டித் துணிப் பகுதிகள்தான் அதிகம். அவை என்னுடையவை. வேறு சிந்தனைகள், உவமைகள், பட்டுத்துணி வெல்வெட்டு போன்றவை,பல சந்தர்ப்பங்களில் பிறரிடமிருந்துவந்தவை. மனசிலே சிந்தனைகள் குழம்புகின்றன; உணர்ச்சிகள் ஒரு சிறிதே உருவெடுத்திருக்கின்றன; பல உணர்ச்சிகள் அனுவசியமான வேகம் பெறுகின்றன; இவற்றையெல் லாம் ஒழுங்குபடுத்தி அழகாகச் சொல்ல வார்த்தைகள் போதுவதில்லை; சிரமப்பட்டுத்தான் வார்த்தைகளைக் கொட்டி ஒழுங்குபடுத்த வேண்டியதாக இருக்கிறது. சீனத்துப் புதிர்களைஒழுங்குபடுத்துவது பிரும்மப் பிரயத் தினம்தான்; எழுதுவதும் அதேபோலத்தான் என்று எனக்குத் தோன்றுகிறது. மனசில் இருக்கிற திட்டம் ஒன்று; அது வார்த்தைகளில் வெளி வரும்போது வெகு வாக உருமாறிவிடுகிறது.

"சுபாவத்திலே, பிறப்பினாலேயே அப்படியிருந்தா லொழிய முழுச் சொந்தமான நிலை என்று ஒன்றும் கிடையாது" என்று ஸ்டீவன்ஸன் சொன்னான். நான் முழுச் சொந்த நிலை எட்டியவளல்ல. ஆனால் என்றாவது ஒரு நாள் என்னுடைய இயற்கைக்கு விரோதமான, பிறர் சிந்தனை களால் அழகு படுத்தப்பட்ட எழுத்தை மீறிச் சொந்தமாக

எழுதியே விடுவேன் என்று நம்புகிறேன். அப்போதுதான் என் சொந்த அனுபவங்களும் உவமைகளும் உண்மைகளும் மேலுக்குவந்து உலகைக் கவருமோ என்னவோ. இடையில் வேறு என்ன செய்வது? முயற்சி செய்கிறேன். "பனிராஜா" என்கிற கசப்பான அனுபவம் என் கற்பனையைப் பூராவும் கொன்றுவிடாதபடி பார்த்துக் கொள்கிறேன்.

ஆகவே என்னுடைய இந்த துக்ககரமான அனுபவமும் எனக்கு நன்மையே பயந்தது. எழுத்து என்கிற பிரச்னை பற்றி என்னைச் சிந்திக்கத் தூண்டியது இந்தச் சம்பவம்தான். மிஸ்டர் அனக்னஸ் என்கிற அருமை நண்பரை இழக்க நேர்ந்தது என்கிற விஷயம்தான் எனக்கு உண்மையிலேயே அளவில்லாத வருத்தம் தந்த விஷயம்.

Ladies Home Journal என்கிற பத்திரிகையில் "என் கதை" வெளிவந்த பிறகு, மிஸ்டர் அனக்னஸ் ஒரு அறிக்கை விட்டார். மிஸ்டர் மேஸி என்பவருக்கு எழுதிய கடிதத்தில் அவர் தெரிவித்திருப்பது இதுதான். "பனி ராஜா" கதை விஷயமாக அது வெளி வந்தபோது, என் மேல் தவறில்லை என்றுதான் அவர் நம்பியிருந்தாராம். என்னை விசாரித்த கோஷ்டியில் எட்டுப் பேர் இருந்தார்களாம். இதில் நாலு பேர் கண்ணில்லாதவர்கள், நாலு பேர் கண்ணுள்ளவர்கள். இதில் நாலு பேர் நான் வேண்டுமென்றே, சுயப்பிரக்ஞையுடன் தவறு செய்தேன் என்று அபிப்பிராயப்பட்டார்களாம். மற்றவர்கள் நால்வரும் மிஸ் கான்பியின் கதையை நான் படித்ததாக ஞாபகம் இல்லை என்று சொன்னதை நம்பினார்களாம். எனக்கு அனுசரணையாகத் தன் வோட்டை எனக்கு அளித்துத் தீர்ப்புச் சொன்னதாக மிஸ்டர் அனக்னஸ் எழுதியிருக்கிறார்.

அது எப்படியானுல் என்ன? மிஸ்டர் அனக்னுஸ் எனக்குச் சாதகமாகவே வோட் அளித்திருக்கலாம். ஆனுல் அன்று அந்த விசாரணை அறைக்குள் நான் போனபோது அந்தக் காற்றிலேயே அவநம்பிக்கையும் விரோதமும் தான் நிறைந்திருந்தது என்று நான் கண்டேன். அதே அறையில் நான் அனக்னுஸின் மடியில் உட்கார்ந்து எத்தனையோ கதைகள் கேட்டியிருக்கிறேன்; எத்தனையோ புஸ்தகங்கள் படித்திருக்கிறேன்; எத்தனையோ பேச்சுக்கள் பேசியிருக்கிறேன். அதே அறையில் அவருடன் எத்தனையோ விளையாட்டுக்கள் விளையாடியிருக்கிறேன். ஆனுல் அன்று அவர்கள் என்னைக்கேட்ட கேள்விகளும், அவற்றைக்கேட்ட குரலும் பாவமும் என்னை அச்சுறுத்தின. பிறகு நடந்ததும் அந்த அச்சத்தை அதிகப்படுத்தியதே தவிரக் குறைக்கவில்லை.

என் வாழ்க்கையிலும் கல்வியிலும் இந்த விவகாரம் ஒருமுக்கியத்வம் பெற்றது. யாரும் இதைத் தவருகப்புரிந்து கொள்ளக்கூடாதே என்பதற்காகவோ எனக்குத் தெரிந்த அளவில் உண்மையை உள்ளபடிக் கூறியிருக்கிறேன். என்னைக் குறை சொல்லிக்கொள்ளவோ, பிறரைக் குற்றம் சாட்டவோ நான் விரும்பவில்லை.

## 15

"பனிராஜா" சம்பவத்துக்கு அடுத்த மாரியையும் கோடையையும் நான் என் குடும்பத்துடன் அலபாமாவில் கழித்தேன். அந்தப் பிரயாணமும் எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது. எவ்வளவு இன்பகரமான ஞாபகம் அது! மரங்கள் செடிகள் கொடிகள் எல்லாம் மொட்டுக் கட்டிப் பூத்திருந்தன. என் மனத்தில் மகிழ்ச்சி பொங்கியது!

"பனிராஜா" சம்பவம் அடியோடு மறந்து போய் விட்டது.

இலையுதிர் காலத்தில் தரையெல்லாம் சிவப்பும் மஞ்சளுமாக இலைகள் உதிர்ந்து கிடந்தன. கஸ்தூரி வாசனை அடித்த திராக்ஷைகள் மஞ்சள் நிறம் பெற்றுக் கனிந்து கொண்டிருந்தன. சூரிய வெளிச்சம் எங்கும் பரவித் தங்க முலாம் பூசியது. அப்போது நான் என் வாழ்க்கை வரலாற்றை எழுதத் தொடங்கினேன். "பனி ராஜா" எழுதி முடித்து ஒரு வருஷம் ஆவதற்குள் என் கதையை எழுதத் தொடங்கினேன்.

எழுதுவதிலே நான் மிகவும் ஜாக்கிரதையாக இருந் தேன். என் மனசிலே பதுங்கியிருந்த பிறருடைய சிந்தனை கள், உவமைகள், வாக்கியங்கள், எதுவும் என்னையும் மீறி என் எழுத்தில் இடம் பெற்றுவிடப் போகின்றனவே என்று பயம் எனக்கு. நான் எழுதியதில் ஒவ்வொரு வார்த்தையும், வார்த்தைச் சேர்க்கையும், வாக்கியமும் பூரணமாக என்னுடையதாகவே இருக்கவேண்டும் என்று பாடுபட்டேன். அப்படி இல்லாது போய்விடப் போகிறதே என்று பயந்து நடுங்கினேன். என் உபாத்தியாயினியைத் தவிர வேறு யாருக்கும் என் பயத்தைப்பற்றி எதுவும் தெரியாது. "பனி ராஜா"வைப் பற்றிப் பேச என் உணர்ச்சி வேகம் இடம் தரவில்லை. ஆனால் பேசிக்கொண் டிருக்கும் போது ஏதாவது சிந்தனை தோன்றினால் அதை மிஸ் ஸல்லிவனிடம் எழுதிக் காண்பிப்பேன். பிறகு, "இது பூரணமாக என் சிந்தனைதானா என்று தெரிய வில்லையே?" என்றும் எழுதுவேன். வேறு சமயங்களில் ஒரு பாராவின் மத்தியிலே சந்தேகம் வந்துவிடும். "இதை யெல்லாம் இப்படியே இதே வரிசையில் பல நாட்களுக்கு முன் யாராவது எழுதி வைத்திருந்தால் என்ன செய்வது?"

என்று என்னையே கேட்டுக்கொள்வேன். அதற்குமேல் ஓடாது. அமைதியின்றி, நிம்மதி யில்லாமல், நிச்சய மில்லாமல் நான் எழுதவேண்டிவருகிறது. மிஸ் ஸல்லிவன் அவளுக்குத் தெரிந்த வழிகளில் எல்லாம் என்னைத் தேற்றி ஆறுதல் சொல்லி உதவி செய்வாள். மேலும் எழுதத் தூண்டுவாள். எனக்குத் தன்னம்பிக்கை மீண்டும் வரவேண்டும் என்கிற காரணத்துக்காகத்தான் மிஸ் ஸல்லிவன் "யூத்ஸ் கம்பானியன்" என்கிற பத்திரிகைக்கு நான் என் வாழ்க்கை வரலாற்றை எழுதவேண்டும் என்று வற்புறுத்தினாள். எனக்கு அப்போது வயது பன்னிரண்டு. அந்த வரலாற்றை எழுத நான் எத்தனை சிரமப்பட்டேன்! அதனால் நலனே ஏற்படும் என்கிற திடமும் எதிர்கால நம்பிக்கையும் எனக்கு இருந்திருக்கவேண்டும். இல்லா விட்டால் என்னால் அதை எழுதி முடித்திருக்க முடியாது.

பயத்துடன் தான் எழுதினேன்; ஆனால் தீர்மானமாக எழுதினேன். அத்தீர்மானத்தைத் தூண்டி ஊக்குவித்து முடித்து வைத்தது என் உபாத்தியாயினிதான். அவ ளுக்குத் தெரியும்! அதை நான் எழுதி முடித்து வெற்றி பெற்றால்தான் மீண்டும் கல்வியில் ஆசையும் வேகமும் ஈடுபாடும் எனக்கு ஏற்படும் என்று.

"பனிராஜா" சம்பவம் வரையில் நானே அறியாமல் நான் ஒரு சின்னக் குழந்தையின் வாழ்வு வாழ்ந்து வந்திருக் கிறேன். அந்த விவகாரத்துக்குப் பிறகு என் சிந்தனைகள் சுயஅறிவு பெறப்பாடுபட்டன. என்னையேஅறிந்துகொண்டு சுயப் பிரக்ஞையுடன் பாடுபட்டு முன்னேறவேண்டிய பாதை யிலே போக என்னைத் தூண்டி ஊக்கி வந்தாள் மிஸ் ஸல்லிவன். வாழ்க்கையின் மேடு பள்ளங்களையும், அதன் உண்மை நிலையையும் பற்றி அறிந்துகொண்டேன்; சோதனைக்குட்பட்டு உடைந்துவிடாத மனத்தினளாக

அந்தச் சம்பவத்தின் நிழலேவிட்டு நான் வெளியே ஒளி கூடியப் பிரதேசத்திற்கு நகர்ந்தேன்.

1893-ம் வருஷத்தில் என் வாழ்க்கையில் முக்கிய சம்ப வங்கள் என்று சொல்லக்கூடியவை மூன்று—ஜனுதிபதி யாக க்ளீவ்லண்டு பதவி யேற்றபோது நான் வாஷிங்டன் நகருக்குச் சென்றேன். பிறகு நயகரா நீர் வீழ்ச்சியைப் பார்த்தேன். அதற்குப் பிறகு உலகச் சந்தைக்குப் போனேன். இப்படியெல்லாம் எங்கெங்கோ ஊர் சுற்றிக் கொண்டிருந்த காரணத்திஞல் என் கல்வி பாதிக்கப் பட்டது.

நயகராவுக்கு மார்ச்சு 1893-ல் போனேம். அமெரிக்க நீர் வீழ்ச்சிக்குமேல் உள்ள பாறையில் நின்றபோது எனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளே விவரிக்கவொண்ணுது. காற்றே கணகணத்தது; பூமியே நடுங்குவதுபோல இருந்தது.

நயகரா நீர்வீழ்ச்சியின் அழகுகளும் அதிசயங்களும் எனக்கும் தெரிந்தன; அவற்றைப்பற்றி நானும் அறிந்து ஆனந்தித்தேன் என்று நான் சொல்வது பலருக்குப் புரிவ தில்லே. என்னே அடிக்கடி அவர்கள் கேட்கிருர்கள்: "நீ எப்படி எதை அறிந்து அனுபவித்தாய் என்று சொல்லு. இந்த அழகும், அலேகள் எழுப்பும் ஓசையும் உனக்குத் தெரியமுடியாதே! நீ அனுபவித்ததாகச் சொல் வதன் அர்த்தம்தான் என்ன?" என்று என்னேப் பலர் கேட்கிருர்கள். சொல்லப்போஞல் தெளிவாக மற்றவர் களுக்கு இதிலெல்லாம் என்ன ஆனந்தமும் அனுபவமும் ஏற்படுகிறதோ அவ்வளவும் எனக்கும் ஏற்படுகிறது. இதிலுள்ள ஆழத்தையும் ஆனந்தத்தையும் என்ஞல் வார்த்தைகளில் விரித்துச்சொல்ல முடியாது. அதே போல

அனபு, மதம், நல்லதனம் எதையுமேகூட விரித்துச் சொல்ல முடியாதுதானே!

1893-ல் கோடையில் நானும் மிஸ் ஸல்லிவனும் உலகச் சந்தைக்குச் சென்றோம். அப்போது எங்களுடன் டாக்டர் அலெக்ஸாண்டர் கிராஹம் பெல்லும் வந்தார். என் அழகிய அனுபவ சாத்தியமற்ற குழந்தைக் கனவுகள் பலவும் உண்மையில் அனுபவ சாத்தியமாகி யிருப்பதைக் கண்டு நான் எல்லையற்ற ஆனந்தம் கொண்டேன். என் கற்பனையில் நான் ஒவ்வொருநாளும் இவ்வுலகத்தையே ஒரு சுற்றுச்சுற்றி வந்தேன். உலகத்தின் பல பாகங்களிலும் உள்ள அதிசயங்களையும் தினம் தினம் பார்த்து அறிந்து அனுபவித்து ஆனந்தித்தேன். விஞ்ஞான விந்தைகள், தொழிலாளிகள் சிருஷ்டித்திருந்த ஐசுவர்யங்கள், திறமையான வேலைக்காரர்கள் படைத்த எத்தனையோ சாமான்கள், மனித வாழ்க்கையை வளப்படுத்திய எத்தனையோ சாதனங்கள்—இவற்றை கைவிரல்களால் தொட்டும், அவற்றின் உபயோகத்தைக் கேட்டு அறிந்தும் ஆனந்தித்தேன்.

மத்தியில் இருந்த பகுதியில் போய் வருவது எனக்கு மிகவும் இன்பமாக இருந்தது. திரும்பத்திரும்ப அங்கு போனேன் நான். அரேபியா தேசத்து அதிசயக் கதைகளில் ஒரு கதா பாத்திரமாக நான் மாறிவிட்டது போல எனக்குத் தோன்றியது. அங்கே தான் எத்தனை சுவாரசியமான விஷயங்கள் இருந்தன! விந்தைகள் நிறைந்த கடைவீதியிலே இதோ நான் படித்தறிந்து கொண்டிருந்த இந்தியா இருந்தது; சிவனும் யானைமுகக் கடவுளும் இதோ இங்கே இருந்தார்கள். அதோ பிரமிட் பூமி; ஒட்டகங்கள் அங்கு வரிசை வரிசையாகப் போய்க்கொண்டிருந்தன; அதோ கெயிரோ நகரமே (சிறிய அளவில்)

இருந்தது; அந்தக் கெயிரோ நகரில்தான் எத்தனை மசூதிகள். அடுத்தாற் போல வெனிஸ் நகரமும் அதன் நீர் நிலையங்களும் இருந்தன; தினமும் மாலை வேளைகளில் அங்கு படகுகளில் பவனி வந்தோம் நாங்கள்; அங்கிருந்த ஊற்றுக்கள் வர்ண விளக்குகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தன. நகரின் சிறப்புகள் எல்லாம் (சிறிய அளவில் தான்) அங்குகாணக் கிடந்தன. அந்த வெனிஸ் நகரத்துப் படகுக் கப்பால் நின்ற வைக்கிங் கப்பலிலும் ஏறிக் கடலில் சென்றேன் நான். நான் அதற்கு முன் யுத்தக் கப்பலில் போய்ப் பார்த்ததுண்டு, போஸ்டன் நகரில்; அதில் கொஞ்ச தூரம் பிரயாணம்கூடச் செய்திருக்கிறேன். இப்போது இந்த வைக்கிங் கப்பலுக்குள்ளே போவதே எனக்கு ஆனந்தமாக இருந்தது. கடலில் ஓடும் கப்பலைச் செலுத்துகிறவனுக்கு ஈடாக மனிதர்களில் வேறு யாரைச் சொல்ல முடியும். அவன் புயலையும் புயலின்மையையும் ஒருங்கே சமாளிக்க அறிந்தவன். அவன் எதற்கும் அஞ்சுவதில்லை; எந்த சந்தர்ப்பத்திலும் அதைரியப்படாதவன் அவன். கடல் அவன் ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்கிறது. எதிர்ப் படுபவர்கள் எல்லோரையும் துரத்தியடிப்பது அவன் கடமை. அறிவும் ஆற்றலும் உதவப் போர் செய்பவன் அவன். தன்னம்பிக்கையும், தன் மரியாதையும் உள்ளவன். அவன் இட்டதே சட்டம். இன்று மனிதனின் இடத்தைக் கப்பலில் யந்திரங்களும் விசைகளும் பிடித்துக்கொண்டு விட்டன. ஜாக் என்கிற மாலுமியைப் பற்றி யாரும் அதிகமாகக் கவலைப்படுவதில்லை. மனிதனுக்கு முக்கியம் தந்தன அந்தக் காலத்துக் கப்பல்கள். மூளையுள்ள மனிதனை ஒதுக்கிவிட்டு இந்தக் காலத்தில்யந்திரங்களும் விசைகளும்--சொந்த அறிவியக்கம் சிறிதுமில்லாதவை—ஆட்சி செலுத்துகின்றன. இப்படித் தான் போகிறது உலகம். "ஆனல் மனிதனுடைய

கவனத்தைக் கவரக்கூடியது, கவர வேண்டியது மனிதன்தான்."

இந்தக் கப்பலுக்கு அப்பல் "ஸாண்டா மேரியா" என்கிற கப்பலின் மாடல் இருந்தது. அதையும் பார்த்தேன் நான். கொலம்பஸினுடைய அறையையும் அவன் உபயோகித்த மணிகாட்டும் கண்ணுடியையும் அந்தக் கப்பித்தான் எனக்குக் காட்டினுன். இந்த மணி காட்டும் கண்ணுடி என்னுள் பல உணர்ச்சிகளைத் தட்டி எழுப்பிற்று. அதில் ஒரு கண்ணுடியிலிருந்து மண் இன்னெரு கண்ணுடிக்கு விழும்.வேறுவழி அறியாத மனிதர்கள் கொலம்பஸைக் கொன்று விடுவது என்று சதிசெய்த போது, ஒரு கண்ணுடியிலிருந்து இன்னெரு கண்ணுடியில் மண் விழும்போது, ஒவ்வொரு மண்ணும் நகரும்போது, எவ்வளவு அலுப்பு இருந்திருக்கும் அந்தக் கப்பித்தானுக்கு!

உலகச் சந்தைக் கமிட்டியின் தலைவரின் பெயர் மிஸ்டர் ஹிக்கின்பாதம். அங்கு பார்வைக்கு வைத்திருந்த சாமான் களை எல்லாம் நான் தொட்டுப் பார்க்கலாம் என்று அனு மதி தந்தார். பெரு தேசத்துத் தங்கத்தை யெல்லாம் பிஜாரோ என்பவன் எவ்வளவு ஆவலுடன் பிடுங்கிக்கொண் டானே, அவ்வளவு ஆவலுடன் என் விரல்களால் அங்கு சந்தைக்கு வந்திருந்த பொருள்களை யெல்லாம் தொட்டுத் தொட்டு பார்த்தேன். மேற்கே எழும்பியிருந்த இந்தப் புதிய வெண்மையான நகரம் ஏதோ அற்புத உலக மாகத் தோன்றியது எனக்கு. எல்லாவற்றையுமே, நான் அனுபவித்தேன். முக்கியமாக பிரான்சு தேசத்து வெண் கலச்சிலைகள் என்னை மிகவும் கவர்ந்தன. உயிருள்ளவை போல் இருந்தன அவை. தேவதைகளைக் கண்ணுல் கண்டு அவற்றைச் சிலா ரூபத்தில் வடித்திருக்கிருன் சிற்பி என்று எண்ணினேன் நான்.

நன்னம்பிக்கை முனைப் பகுதியில் வைரச்சுரங்கங்களைப் பற்றி தெரிந்து கொண்டேன் நான். சுரங்கங்களிலிருந்து வைரங்களை வெட்டி எடுப்பது எப்படி என்று தீரவிசாரித்து அறிந்துகொண்டேன். அது சாத்தியமானபோதெல்லாம். ஓடிக் கொண்டிருந்த யந்திரங்களையும் நான் தொட்டுப் பார்த்து வைரத்தை எடுப்பது, அறுப்பது, வெட்டுவது எல்லாம் எப்படி என்று அறிந்து கொண்டேன். அவர்கள் அலம்பிவிட்டிருந்த கனிப்பொருளில் தேடி உண்மை வைரத்தை நான் என் கையில் எடுத்தேன்—அதுதான் அமெரிக்காவில் கனிப் பொருளிலிருந்து எடுக்கப்பட்ட முதல் வைரம் என்று சொன்னார்கள்.

டாக்டர் பெல் எங்களுடன் நாங்கள் போன இடங்களுக் கெல்லாம் வந்தார். அவருடைய சிறந்த எளிய பாணியில் என் கவனத்தைக் கவர்ந்த எல்லா விஷயங்களையும் பற்றி விரிவாக எனக்குச் சொன்னார், மின்சாரப் பகுதியில் டெலிபோன்கள், ஆட்டோபோன்கள், போனகிராம்கள் போன்ற பல சாமான்களைப்பற்றி விசாரித்து அறிந்துகொண்டேன். கம்பிகள் மூலம் வெகு தூரம் ஒரு செய்தியை எப்படி அனுப்ப முடிகிறது என்பது பற்றி வெகு விரிவாகச் சொன்னார் அவர்; விஸ்தீரணத்தையும் காலத்தையும் ஏமாற்றும் வித்தைகளைப்பற்றி விவரித்தார். பிராமிதீயஸ் என்கிற ராக்ஷஸன் போல வானத்திலிருந்து நெருப்புக் கொணருவது எப்படி என்று சொல்லித்தந்தார். மனித வளர்ச்சித் தத்துவப் பகுதியையும் போய்ப் பார்த்தோம். பழைய மெக்ஸிகோவின் பண்டைய நாகரீக கலாசாரம் முதலியவற்றை விளக்கும் புதை பொருள்கள் பலவற்றைபபற்றி நான் விவரமாக விசாரித்து அறிந்து கொண்டேன். அந்தக் காலத்து ஆயுதங்கள் பலவற்றைக் கையால் தொட்டுப் பார்த்தேன். எழுத்திலே எழுதிவைத்த

எத்தனையோ காரியங்கள் மனிதனுக்கு எட்டாத தூரம் போய் விட்டன ; எப்படியோ அழிந்துவிட்டன ; ஆனல் எழுதப் படிக்கத் தெரியாத ஆதி மனிதன் கையாண்ட ஒரு கருவி இதோ இப்போதும் கண்முன் காணக்கிடக்கிறது என்று எனக்கு நானே கூறிக்கொண்டேன். அரசர் களுக்கும் அறிஞர்களுக்கும் எழுப்பிய பல ஞாபகச் சின்னங்கள் மக்கி மண்ணுகிவிட்டன. எனக்கு எகிப்திய சவ மம்மிகளைத் தொடவே பிடிக்கவில்லை; கைகூசிற்று.

இந்த அனுபவங்களால் என் அறிவு விசாலா மாயிற்று. அந்த அறிவை வெளிப்படுத்தக்கூடிய வார்த் தைகளின் எண்ணிக்கையும் அதிகரித்தது. உலகச் சந்தையில் நான் செலவிட்ட அந்த மூன்று வாரங்களில் என் குழந்தை உலகம் பேருலகமாக மாறியது. சிறு தேவதைக் கதைகளும் பொம்மைகளும் விளையாட்டுகளும் என் கவனத்தைக் கவருவது நின்றது. தினசரி நடைமுறை உலகில் என் கவனம் பெருகியது.

# 16

**நா**ன் 1893-ம் வருஷம் அக்டோபர் மாதம் வரையில் என் மனம் போனபடி பல பாடங்களைப் படித்து வந்தேன். கிரீஸ், ரோம், அமெரிக்கா முதலிய தேசங்களின் சரித்திரத்தைப் படித்துப் பார்த்தேன். குருடர்கள் விரலில் தொட்டுப் படிக்கக் கூடிய எழுத்தில் என்னிடம் ஒரு பிரெஞ்சு ஆரம்ப இலக்கணப் புஸ்தகம் இருந்தது. ஏற் கனவே எனக்கும் கொஞ்சம் பிரெஞ்சு பாஷை தெரியும்; பிரெஞ்சு பாஷையில் நான் சில வியாசங்கள் என் மனசுக் குள்ளாகவே சொல்லிப் பார்த்துக் கொண்டேன். புதுப்புது

வார்த்தைகள் என் கவனத்துக்கு வரவர நான் அவற்றை எல்லாம் உபயோகித்துப் பார்க்க முயன்றேன். உதவி எதுவுமில்லாமலே பிரெஞ்சு உச்சரிப்பையும்கூடக் கற்றுக் கொண்டு விட முயன்றேன்.

வெளியே போகமுடியாமல் மழைபெய்துகொண்டிருந்த நாட்களில் எல்லாம் நான் விடாமுயற்சியுடன் பிரெஞ்சு பாஷையைக் கற்றுக்கொண்டேன். லா மாண்டேன் கதைகளையும், மோலியேரின் "மனசில்லாத டாக்டரை"யும், அதாலிமுதலிய நூல்களில் சில பகுதிகளையும் படிக்கக் கூடிய அளவுக்குத் தேர்ச்சி பெற்றுவிட்டேன்.

என் பேச்சையும் சீர்படுத்திக்கொள்ள முயன்றேன். பல பாடங்களை மிஸ் ஸல்லிவனுக்கு உரக்க வாசித்துக் காட்டுவேன். எனக்குப் பிடித்த கவிகளிலிருந்து பல பகுதிகளை உரக்கத் திரும்பத் திரும்பச் சொல்லுவேன். என் உச்சரிப்பை அவள் அடிக்கடி திருத்துவாள். வாக்கியங்கள், வார்த்தைக் கோவைகள் முதலியவற்றை ஒழுங்கு படுத்தித் தருவாள். உச்சரிப்பிலே பாவத்தைக் கொண்டு வரவும் சொல்லித் தந்தாள் மிஸ் ஸல்லிவன். உலகச் சந்தை போய்வந்த உல்லாஸமான புது அனுபவத்திற்குப் பிறகு எனக்குக் கொஞ்சம் களைப்பாக இருந்தது. அந்தக் களைப்புத் தீர்ந்தபின், அக்டோபரு (1893)க்குப் பிறகு தான் முறையாகக் கல்வி கற்றுக்கொள்ளத் தொடங்கினேன் நான்.

மிஸ்டர் வில்லியம் வேட் என்பவரின் குடும்பத்தின் விருந்தினராக நானும் மிஸ் ஸல்லிவனும், ஹல்டன் (பென்ஸல்வேனியா) என்கிற நகரில் அந்தச் சமயம் தங்கியிருந்தோம். அவர்களுடைய வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரரான மிஸ்டர் அயர்ண்ஸ் என்பவர் லத்தீன் பாஷையை நன்கு அறிந்தவர். அவரிடம் நான் லத்தீன் பாஷை

கற்றுக்கொள்வது என்று ஏற்பாடாயிற்று. பரந்த அனுபவமும், இனிய சுபாவமும் உள்ளவர் அவர் என்று எனக்கு ஞாபகம் இருக்கிறது. லத்தீன் இலக்கணம் சொல்லித் தந்தது மட்டுமல்லாமல், அவர் என் கணக்குப் பாடங்களிலும் எனக்கு உதவிசெய்தார். எனக்குக் கணக்கு வரவுமில்லை; அதில் எனக்குக் கவனம் அதிகம் போவது மில்லை. டென்னிஸன் எழுதிய "ஞாபகார்த்தம்" (In Memoriam) என்கிற காவியத்தை அவர் என்னுடன் படித்தார். இதற்குமுன் நான் பல புஸ்தகங்களைப் படித்த துண்டு; ஆனால் எதையும் இலக்கிய விமர்சன நோக்கோடு படித்ததில்லை. முதல் தடவையாக அவர் சகவாசத்தில் எனக்கு ஒரு ஆசிரியரின் தனிநடை பாவனை எல்லாம்தெரிய வந்தன. மனிதர்களின் கைகள் அவர்களுடைய சுபாவங் களையும் குணதிசயங்களையும் எனக்குத் தெரிவித்தது போல, ஆசிரியர்களின் நடைகளும் தனித்தனியே அவ ரவர்களுடைய சுபாவங்களையும் குணதிசயங்களையும் அறிவிக்கும் என்று நான் கண்டுகொண்டேன்.

முதலில் எனக்கு லத்தீன் இலக்கணம் படிக்கப் பிடிக் கத்தான் இல்லை. எதிர்ப்பட்ட ஒவ்வொரு வார்த்தையையும் இப்படி அப்படி என்று நோட்டம் பார்ப்பது அவ்வளவாக உபயோகமான காரியமாகவோ லாபகரமான காரியமாகவோ எனக்குத் தோன்றவில்லை; பெயர்ச்சொல், உரிச்சொல், பால், தொகுதி, ஒருமை, பன்மை என்கிற பாகுபாடுகள் எல்லாம் அவசியமேயில்லை; வார்த்தைக்குச் சரியான அர்த்தம் மட்டும் தெரிந்தால் போதும் என்று நான் எண்ணினேன்.

ஆனால் நாளடைவில் அதன் அழகு எனக்கும் தெளி வாகத் தெரிய ஆரம்பித்தது. எனக்கு உத்ஸாகம் பிறந்தது. லத்தீன் பாஷையின் அழகுகள் என் மனத்தைக் கவர்ந்

தன; கவனத்தையும் கவர்ந்தன. அடிக்கடி நானுகவே பல லத்தீன் பாடங்களைப் படித்து, அதில் எனக்குப் பரிசய மான வார்த்தைகளைப் பொறுக்கி அர்த்தப்படுத்திப் பார்ப்பேன். இப்பொழுதும்கூட இந்தக் காரியத்தை நான் அடிக்கடி செய்கிறேன்.

எனக்குத் தெரிந்த அளவில் புதிதாக அறிந்து கொள்ளுகிற ஒரு பாஷையில் முதல்தடவையாக வார்த்தை களும் வாக்கியங்களும் அர்த்தப்படத் தொடங்கியபோது ஏற்படுகிற ஆனந்தம் அலாதியானது ; ஈடு இணையற்றது. மனத்தின் விழிக் கோணத்திலே புதுப்புதுச் சிந்தனைகள் மிதந்துவரத் தொடங்குகின்றன ; அவை விதவிதமான உருவம் பெற்றவை ; அவற்றின் வர்ணங்கள் மனத்திற் கேற்றபடி, உகந்தவையாக இருக்கின்றன. என் பக்கத்தில் மிஸ் ஸல்லிவன் உட்கார்ந்துகொண்டு மிஸ்டர் அயர்ண்ஸ் சொன்னதையெல்லாம் என் கையில் எழுத்துக் கூட்டி ஞள். பல புது வார்த்தைகளை எனக்கு அறிமுகம் செய்து வைத்தாள். நான் அலபாமாவில் என் வீட்டுக்குத் திரும் பும்போது சீஸரின் "காலிச் சண்டை" என்கிற நூலை வாசிக்கத் தொடங்கியிருந்தேன்.

## 17

கோடை (1897) செவிடர்களுக்குப் பேச்சுச்சொல்லித் தருவதைச் சுலபமாக்கும் உபாத்தியாயர்களின் அமெரிக்கச் சங்கம் சோடௌகா என்கிற இடத்தில் கூடியது. நான் நியூயார்க் நகரில் இருந்த ரைட் ஹ்யுமாஸன் செவிடர் பள்ளிக்கூடத்துக்குப் போவது என்று அங்கு தீர்மான மாகியது. மிஸ் ஸல்லிவனுடன் நான் 1894 அக்டோ பரில் அங்கு போனேன். பேச்சு வளர்ச்சிக்கும், உதடு அசைவதைப் படித்துக் கொள்வதற்கும் எனக்கு

அதிக வசதிகள் செய்து தரவேண்டும் என்பதற்காகவே இந்தப் பள்ளிக்கூடம் தேர்ந்தெடுக்கப்பட்டது. இந்தத் தேர்ச்சியைத் தவிர, அந்தப் பள்ளியில் நான் வாசித்த இரண்டு வருஷங்களிலும் கணக்கு, பூகோளம் முதலிய பாடங்களையும், பிரெஞ்சு, ஜெர்மன் போன்ற பாஷை களையும் கற்றுக்கொண்டேன்

எனக்கு ஜெர்மன் பாஷை சொல்லித் தந்த மிஸ் ரீமிக்கு என்னுடன் விரலால் எழுத்துக் கூட்டிப் பேசத் தெரிந்திருந்தது. ஆகவே ஜெர்மன் பாஷையில் சில வார்த்தைகள் எனக்கு வந்ததும், நானும் அவளும் சமயம் அகப்பட்டபோதெல்லாம் ஜெர்மன் பாஷையில் சம்பாஷிப் போம். சில மாதங்களுக்குள்ளாகவே அவள் சொல்வதை யெல்லாம் புரிந்துகொள்ளுகிற அளவுக்கு எனக்கு ஜெர்மன் பாஷை வந்துவிட்டது. முதல் வருஷக் கடைசிக் குள்ளாகவே நான் வெகு ஆனந்தத்துடன் மூலத்திலேயே "வில்லியம் டெல்" என்கிற நூலைப் படித்தனுபவிக்கத் தொடங்கிவிட்டேன். உண்மையில் ஜெர்மன் பாஷையை நான் கற்றுக்கொண்டே வேகத்தில் நான் வேறு எந்தப் பாடத்தையும் கற்றுக்கொள்ளவில்லை. பிரெஞ்சு பாஷை கற்பது சற்றுக் கடினமாகவே இருந்தது. எனக்குப் பிரெஞ்சு பாஷை சொல்லித்தந்த மாடம் ஒலிவியருக்கு என்னுடன் நேரடியாகப் பேச வராது. அவள் பேசுவதும் நான் அவள் உதடுகளைத் தொட்டு அவள் பேசுவதை அறிந்துகொள்வதுமாகப் பாடத்தைக் கற்று வந்தேன். அவள் உதடுகளைத் தொட்டு அர்த்தப்படுத்திக் கொள்வ தென்பது எனக்குச் சற்றே சிரமமாக இருந்தது. மீண்டும் "மனசில்லாத டாக்டரை"ப் படித்தேன். வேடிக்கையாக இருந்தது— ஆனல் "வில்லியம் டெல்" பிடித்த அளவு இது எனக்குப் பிடிக்கவில்லை.

பேச்சிலோ, உதடுகளைத் தொட்டு அர்த்தம் பண்ணிக் கொள்வதிலே என் உபாத்தியாயனிகளும் நானும் எதிர் பார்த்த அளவுக்கு எனக்கு முன்னேற்றம் ஏற்படவில்லை. மற்றவர்களைப்போலவே நானும் பேசி விடவேண்டும் என்று எனக்கு ஆசை. அப்படியே செய்யலாம் என்றுதான் என் உபாத்தியாயினிகளும் எண்ணினார்கள். திடமாகவும் கடின மாகவும் தான் நாங்கள் உழைத்தோம். என்றாலும், எதிர் பார்த்த அளவுக்குப் பலன் ஏற்படவில்லை. அதிகமாக ஆசைப்பட்டு விட்டோம்; அது காரணமாக ஏமாற்றம் ஏற்படத் தான் ஏற்படும் என்று எண்ணவேண்டியதாக இருந்தது.

கணக்கு என்றால் என்னை விழச் செய்வதற்காக ஏற்பட்ட படுகுழி என்கிற எண்ணம் என்னைப் பாதித்தது. "குத்துமதிப்பு" என்கிற அபாயகரமான பாதையிலே நடந் தேனே தவிர, கணக்கில் அறிவு, நிச்சயம் என்கிற விஸ்தார மான பாதையை நான் எட்டவில்லை.

இதெல்லாம் பெரும் ஏமாற்றங்கள் தான்; சில சமயம் எனக்குச் சொல்லமுடியாத கசப்பும் குழப்பமும் ஏற்பட்டு விடும். இருந்தும் நான் என் பாடங்களை உத்ஸாகத்துடன் கற்றுக்கொண்டேன். முக்கியமாக பூகோளப் பாடங்கள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன; அதிலும் பூகோளத்தில் இயற்கை அன்னையைப்பற்றிச் சொல்லுகிற பகுதிகள் எனக்கு மிகவும் பிடித்திருந்தன. இயற்கையின் ரகசியங்களை அறிந்துகொள்வதிலே நான் ஒரு ஆனந்தத்தைக் கண்டேன். கவித்வம் நிரம்பிய வார்த்தைகளில், வானத்தின் நாலு மூலைகளிலிருந்தும் காற்று எப்படிக் கிளம்பி அடிக்கிறது என்றும், பூமியின் எல்லைகளிலிருந்து புகை மண்டலங்கள் எப்படி எழுந்து சூழுகின்றன என்றும், பாறைகளின் மத்தியிலே எப்படி ஆறுகள் வழி குடைந்து

கொண்டு செல்கின்றன என்றும், மலைகள் எப்படிச் சிலசமயம் அடியோடு புரண்டுவிடுகின்றன என்றும், தன்னையும்விட மகத்தான சக்திகளை எப்படி மனிதன் வென்று ஆட்கொள்ளுகிறான் என்றும் நான் கற்றுக்கொள்வதில் சிரத்தையுள்ளவளாக இருந்தேன். நியூயார்க் நகரில் நான் கழித்த இரண்டு வருஷங்களும் ஆனந்தமான வருஷங்கள்.

நாங்கள் எல்லோரும் தினமும் சென்டிரல் பார்க்கில் நடக்கப் போனதை முக்கியமாக நினைவுபடுத்திக் கொள்கிறேன் நான். என் ,ஊர்போல இருந்தது என்று நியூயார்க்கில் நான் சொல்லக்கூடிய இடம் அது ஒன்றுதான். இந்தப் பெரிய பார்க்கில் உலாத்துவதில் எனக்கிருந்த ஆனந்தம் அன்றைக்கின்று குறைந்துவிடவில்லை. ஒவ்வொரு தரமும் அங்கு போகும்போது அதுபற்றிய வர்ணனைகளைக் கேட்டு ஆனந்திப்பேன். அதன் ஒவ்வொரு அம்சமுமே இன்பம் தருவதாக இருந்தது. அந்தப் பார்க் ஒருநாள் இருந்தது போல மறுநாள் இராது. வருஷத்தில் நான் அந்தப் பார்க்குக்குப் போன ஒன்பது மாசங்களில் ஒவ்வொரு நாளும் அதை ஒவ்வொரு அம்சத்துடன் கூடிய அழகாகக் கண்டுகொண்டேன்.

வஸந்த காலத்தில் மனத்தைக் கவரக்கூடிய பல இடங்களுக்கு நாங்கள் உல்லாஸப் பயணம் போனோம். ஹட்ஸன் ஆற்றில் படகில் போனோம்; அதனுடைய பசுமையான கரைகளில் இஷ்டப்படி நடந்தோம். ப்ரையண்ட் அதைப்பற்றிப் பாட ஆசைப்பட்டு எத்தனை பாட்டுகள் பாடியிருக்கிறார்! நதிப் பிரதேசத்தின் பயங்கரமானஎளிய அழகு என் மனதை மயக்கியது. மற்றும் வெஸ்ட் பாயிண்ட், பிரி டவுன், வாஷிங்டன் இர்விங்கினுடைய வீடு முதலிய இடங்களுக்கெல்லாம் நாங்கள் போனோம்.

ரைட் ஹ்யூமாஸன் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர்களும் உபாத்தியாயினிகளும் தங்களுடைய மாணவ மாணவி

களுக்குக் காதுள்ள மற்றக் குழந்தைகள் அனுபவிக்கிற சுகங்களையும் ஆனந்தங்களையும் உணர்த்தித் தந்துவிட வேண்டுமென்று அளவுகடந்த ஆசை யிருந்தது. வெகு நாட்களாக வெளிப்படாமல் பதுங்கிக்கிடக்கும் சில குழந்தைகளின் உணர்ச்சிகளையும் அனுபவங்களையும் வெளிக்கொணரவேண்டும் என்று பாடுபட்டார்கள். அவர்களுடைய குறுகிய உலகிலிருந்து அவர்களை சாதாரணமான, விஸ்தாரமான உலகிற்குக் கொண்டுபோய் சேர்த்துவிட வேண்டும் என்று வெகு சிரமப்பட்டு உழைத்தார்கள்.

நான் நியூயார்க் நகரை விட்டுக் கிளம்புமுன், ஒளி மிகுந்த அந்த நாட்களை இருளடிக்க ஒரு சம்பவம் நடந்தது. என் தகப்பனாரின் சாவுக்கு அடுத்தபடியாக என் வாழ்க்கையில் அதைத்தான் பெரிய துக்கமாக நான் சொல்லுவேன். போஸ்டன் நகரைச் சேர்ந்த மிஸ்டர் ஜான் பி. ஸ்பால்டிங் 1896 பிப்ரவரி மாசத்தில் இறந்தார். அவரை அறிந்தவர்களுக்குத்தான் தெரியமுடியும்; அவருடைய நட்பு எனக்கு எப்படி உதவியது என்பது. குறுக்கிடுவதாகச் சிறிதும் காட்டிக் கொள்ளாமல், அழகாக, அமைதியாகத் தனக்குத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் உதவியவர் அவர். என்னிடமும் மிஸ் ஸல்லிவனிடமும் அவருக்கு அலாதியான பிரியமும் அன்பும் உண்டு. எங்கள் முயற்சிகளைப் பாராட்டினர் என்பது எங்கள் இருவருக்கும் போதிய தெம்பை அளித்தது; எத்தனையோ கஷ்டங்களை நாங்கள் சமாளிக்க முடிந்தது.

## 18

அக்டோபர் 1896-ல் யுவதிகளுக்கான கேம்பரிட்ஜ் பள்ளியில் சேர்ந்தேன் நான். அங்கிருந்து தயார் செய்து கொண்டு ராட்கிளிவ் காலேஜ் போவதாக உத்தேசம் எனக்கு.

நான் குழந்தையாக இருந்தபோது ஒரு சமயம் என்னை வெல்லஸ்லி காலேஜுக்கு அழைத்துப் போனார்கள். அங்கு நான் "ஒரு நாள் நானும் காலேஜுக்குப் போவேன். ஆனால் ஹார்வார்டு கலாசாலைக்குத் தான் போவேன்" என்று சொல்லி என் நண்பர்களை எல்லாம் ஆச்சரியத்தில் அழுந்தச் செய்தேனாம். என் வெல்லஸ்லிக்குப் போகக்கூடாது என்று கேட்டபோது, "அங்கு பெண்கள் மட்டும்தானே படிக்கிறார்கள்!" என்று சொன்னேனாம். காலேஜுக்குப் போகவேண்டும், படிக்கவேண்டும் என்கிற எண்ணம் எனக்கு அடி நாட்களிலேயே ஏற்பட்டுவிட்டது என்று தான் சொல்லவேண்டும். நாளடைவில் அந்தஆசை வளர்ந்து பேராசையேயாகிவிட்டது. இந்தப் பேராசை காரணமாகத்தான் கண்ணும் காதும் உள்ள பெண்களுடன் போட்டியிட்டு நானும் பட்டம் பெறவேண்டும் என்று விரும்பத் தொடங்கினேன். என்னுடைய கனவுபற்றி உண்மையான நண்பர்களில் பலர் குறை கூறினர்; என் நோக்கத்துக்கு முட்டுக்கட்டை போட்டனர். நியூ யார்க்கை விட்டுக் கிளம்பும்போது இது விஷயத்தில்என் தீர்மானம் அசைக்கமுடியாத தாகிவிட்டது. நான்கேம்பிரிட்ஜுக்குப் போவது என்று தீர்மானமாயிற்று.

கேம்பிரிட்ஜ் பள்ளியில் மிஸ் ஸல்லிவனும் என்னுடன் வகுப்புகளுக்கு வருவது, வகுப்புக்களில் நடக்கிற பாடங்களை அவள் எனக்குச் சொல்வது என்று திட்டமிடப்பட்டிருந்தது.

கேம்பிரிட்ஜ் உபாத்தியாயர்களுக்குச் சாதாரண மாணவிகளுக்கு மட்டுமே பாடம் சொல்லித்தரத் தெரியும். அவர்களுடன் நான் பேச வேண்டுமானால் அவர்களுடைய உதட்டைத் தொட்டுத்தான் அறிந்து கொள்ளமுடியும். முதல் வருஷத்தில் நான் இங்கிலாந்து தேச சரித்திரம்,

ஆங்கில இலக்கியம், கணக்கு, ஜெர்மன், லத்தீன், லத்தீன் வியாசம், வேறு சில சில்லரைப் பாடங்கள் இவற்றைப் படித்தேன். அதுவரை காலேஜுக்குப் போய்ச் சேரும் உத்தேசத்துடன் நான் எதையும் படித்தது கிடையாது. மிஸ் ஸல்லிவன் எனக்கு ஆங்கிலத்தையும், ஆங்கிலப் பாடங்களையும் நன்கு சொல்லித்தந்திருந்தாள். ஆங்கிலத்தைப்பற்றியவரையில் காலேஜுக்குத் தேவையான நூல்களை இலக்கிய விமரிசன நோக்குடன் படிக்கவேண்டியது தவிர வேறு பிரத்யேகமாக எதுவும் எனக்குச் சொல்லித் தரவேண்டியதில்லை என்பது என் உபாத்தியாயர்களுக்கு சீக்கிரமே தெரிந்துவிட்டது. தவிரவும் எனக்கு பிரெஞ்சு பாஷையும் சுமாராக தெரிந்திருந்தது. லத்தீன் பாஷையை ஆறு மாதங்களுக்கும் அதிகமாக நான் படித்திருந்தேன். எல்லாவற்றையும்விட எனக்கு ஜெர்மன் பாஷையில் நல்ல தேர்ச்சியிருந்தது.

இவ்வளவு சௌகரியங்கள் இருந்தும்கூட, நான் முன்னேறுவதற்குத் தடங்கல்கள் எத்தனையோ இருந்தன. புஸ்தகங்களில் உள்ளதெல்லாவற்றையும் மிஸ் ஸல்லிவன் என் கையில் எழுதி எழுதிக் காட்டுவதென்பது சாத்தியப்படவில்லை. குறுகிய காலத்திற்குள் நான் படிக்கக்கூடிய குருடர் புஸ்தகங்களைத் தயாரிப்பதென்பதும் நடக்கிற காரியமாகத் தோன்றவில்லை. லண்டனிலும் பிலடெல்பியாவிலும் உள்ள என் நண்பர்கள் இந்த விஷயத்தில் எனக்கு மிகவும் பெரிய உதவிகள் செய்தார்கள். கொஞ்ச நாள் வரையில் நானே என் லத்தீன் பாடங்களை, மற்ற பெண்களுடன் வகுப்பில் சொல்வதற்காக, ப்ரெய்ல் (குருட்டு) எழுத்துக்களில் பிரதி எடுத்து வைத்துக்கொள்ள வேண்டியதாக இருந்தது. சில நாட்களுக்குள்ளாகவே என் அரைகுறைப்பேச்சும் உச்சரிப்பும் என் உபாத்தியாயர்களுக்கும்

பழகிவிட்டன; நான் கேட்கிற சந்தேகங்களைப் புரிந்து கொண்டு பதில் சொல்லவும், என் தவறுகளைத் திருத்தவும் அவர்களே முற்பட்டார்கள். நான் வகுப்பில் குறிப்புகள் எடுக்கமுடியாது; வேறு பாடங்களையும் எழுதிக்கொள்ள முடியாது. ஆனால், வீட்டில் டைப்ரைட்டரில் என் வியாசங்கள், மொழி பெயர்ப்புகள், பாடங்கள் எல்லாவற்றையும் எழுதினேன்.

தினம் பொறுமையாக மிஸ் ஸல்லிவன் என்னுடன் எல்லா வகுப்புகளுக்கும் வந்தாள். என் கையில் எல்லையற்ற பொறுமையுடன் உபாத்தியாயர்கள் சொன்னதையெல்லாம் எழுத்துக் கூட்டி எழுதினாள். வாசிக்கவேண்டிய நேரத்தில் எனக்குப் புதுவார்த்தைகள் கற்றுக்கொள்ளவும், வாசிக்கவும், குறிப்புகள் எழுதவும், ப்ரெயில் எழுத்தில் அகப்படாத பாட புஸ்தகங்களை எனக்கு வாசித்துக் காட்டவும் உதவினாள் மிஸ் ஸல்லிவன். அது எவ்வளவு அலுப்பான, சிரமமான காரியம் என்று உணரத்தான் முடியுமே தவிரச் சொல்லமுடியாது. ஜெர்மன் சொல்லித் தந்த ப்ரௌ ரோட்டும், தலைமை உபாத்தியாயர் கில்மனும் தான் எனக்குப் பாடம் சொல்லித் தருவதற்காக, என் எழுத்துக் கூட்டு பாஷையைக் கற்றுக் கொண்டவர்கள். மிஸ் ஸல்லிவனுக்குக் கொஞ்சம் ஓய்வு வேண்டுமே என்பதற்காக அவர்கள் வாரத்தில் சிலநாட்கள் என் கையில் எழுத்துக்கூட்டி தம் பாடங்களைச் சொல்லித்தருவர்கள். எல்லோருமே என்னிடம் பிரியமாகவும் இரக்கமாகவும் தான் இருந்தார்கள் — என்றாலும் ஒரு கைதான் என்னுடன் அன்புடன் பேசிற்று. அவள் கைப்பட்டால் சலிப்புத்தரும் வேலையும் இன்பம் பயப்பதாக மாறிற்று.

அந்த வருஷம் நான் கணக்கை முடித்தேன்; என் லத்தீன் இலக்கணத்தை மீண்டும் படித்தேன்; சீஸரின்

"காலிக் சண்டை" என்கிற நூலில் மூன்று அத்தியாயங்களைப் படித்தேன். ஜெர்மன் பாஷையில், மிஸ் ஸல்லிவனின் உதவியுடனும் நானேயும் ஷில்லிரின் இரண்டு நூல்கள், ஹெய்னே, ப்ரெய்டாக், ரீல், லெஸ்ஸிங், கீதே முதலியவர்களின் நூல்களைப் படித்தேன். முக்கியமாக ஷில்லரின் கவிதைகளும், பெரிய பிரடெரிக்கின் பிரதாபங்களும் சரித்திரமும், கீதேயின் வாழ்க்கை வரலாறும் என் மனதை வெகுவாகக் கவர்ந்தன. ஹெய்னேயின் நூலைப் படித்து முடித்ததும் அது முடிந்துவிட்டதே என்று எனக்கு வருத்தமாக இருந்தது. எவ்வளவு ஆழ்ந்த அழகான கருத்துக்கள்! என்ன ஹாஸ்யம்! இயற்கையை அவன் வர்ணிக்கும் இயல்புதான் என்ன! கொடிகளடர்ந்த குன்றுகளையும், பாடும் அருவிகளையும், சூரிய ஒளியில் தகதகக்கும் அருவி பரப்பையும், கதையும் கவிதையும் நிரம்பிய காட்டுப் பிரதேசங்களையும், வனாந்தரங்களையும், அழிந்து மறைந்துவிட்ட பண்டைக் காலத்திய கன்னிப் பெண்களையும் என் கண் முன் கொணர்ந்து நிறுத்தினான் ஹெய்னே. "உணர்வு, பசி, அன்பு, யாவும் இயற்கைக்கே உரித்தானவை" என்கிற தத்துவம் படைத்தவனைத் தவிர வேறு யார் அப்படி இயற்கையை வர்ணிக்கமுடியும்?

மிஸ்டர் கில்மன் எனக்கு அந்த வருஷத்தில் சில மாதங்கள் ஆங்கில இலக்கியம் சொல்லித்தந்தார். இருவரும் ' As you Like It,' அமெரிக்காவுடன் சமரஸம் பற்றிப் பர்க்கின் பேச்சு, மெகாலே எழுதிய ஜான்ஸனின் வாழ்க்கை வரலாறு ஆகிய மூன்று நூல்களையும் சேர்ந்து வாசித்தோம். மிஸ்டர் கில்மனுக்கும் பரந்த அறிவும், விசாலமான மனப்பான்மையும், சரித்திரம் இலக்கியம் இரண்டிலும் ஒரு பாண்டியத்யமும் இருந்தன. எதையும் தெளிவாக எடுத்துரைத்துப் புரியவைக்கும் தன்மையும்

அவரிடம் இருந்தது. அவரில்லாவிட்டால் படிப்பில் கிடைத்த பாடங்களை மட்டுமோ, குறிப்புகளை மட்டுமோ நான் வைத்துக்கொண்டு அவ்வளவு சுலபமாக ஆங்கிலப் பாடத்தை அறிந்திருக்க முடியாது.

அரசியல் விஷயம் பற்றி நான் அதுவரை படித்திருந்த எந்த நூலையும்விட பர்க்கின் பேச்சு எனக்கு அறிவூட்டு வதாக அமைந்தது. காலத்தின் கோலத்திற்கேற்ப என் மனமும் நெகிழ்ந்து விரிந்தது. சண்டைபோட்ட இரண்டு நாடுகளிலும் உள்ள முக்கியஸ்தர்களையும் மனிதர்களையும் பர்க்கின் திறன் மூடியிருந்த என் கண்களின் முன் கொணர்ந்து நிறுத்தியது. என் எதிரில் ஒரு நாடகமே நடப்பது போல இருந்தது. அந்தப் பேச்சின் வேகமும் அர்த்த பாவமும் மனத்தில் அழுத்த எப்படி இந்தப் பேச்சைக் கேட்டும் ஜியார்ஜ் மன்னரும் அவர் மந்திரிகளும் வாளாயிருந்தனர் என்பது புரியாமல் திணறினேன் நான்; நம் வெற்றியையும் அவர்கள் தோல்வியையும் பறை சாற்றிச் சவால்கூறிய அந்த முடிவு எப்படி சரித்திரத்தையே மாற்றுமல் இருந்தது என்று எனக்குப் புரியவில்லை. பிறகு அந்தப் பேரறிஞனுக்கும் அவன் கட்சிக்கும் இருந்த உறவு களையும், உறவின்மைகளையும் ஆராயப்புகுந்தேன். ஜனங் களின் பிரதிநிதிகள் அவரைப் பற்றி நினைத்ததை எல்லாம் படித்தறிந்து கொண்டேன். அறிவின்மை, வஞ்சம், ஏமாற்று, என்கிற புல்பூண்டுகளின் மத்தியிலே எப்படி இந்தத் தனித்தன்மையுடன் கூடிய உண்மைப் பயிர் தோன்றித் தழைத்தது என்று எனக்கு ஆச்சரியமாக இருந்தது; உண்மை, அறிவு என்பவற்றின் அழியாத குரல் இதுவே என்று எண்ணி நான் பெருமையுற்றேன்.

இதிலிருந்து வேறுபட்ட, மாறுதலான ஒரு விதத்தில் மெகாலேயின் ஜான்ஸனும் என் மனசைக் கவர்ந்தது. கிரப்

தெருவில் சிரம ஜீவனம் செய்த அந்தத் தனி ஆத்மா விடம் நான் இரக்கமும் பரிதாபமும் கொண்டேன். உழைப் புக்கும், உடல்நல மின்மைக்கும் பலியான அந்தப் பெரிய மனிதன் ஏழைகளிடமும் தாழ்ந்தவர்களிடமும் காட்டிய அன்பும் பச்சாத்தாபமும் என் மனசைக் கவர்ந்தன. இரக்கமாகப் பேசி உதவி செய்யக்கூடிய விதங்களிலெல் லாம் உதவி செய்தார் ஜான்ஸன். அவர் வெற்றிகளை என் வெற்றிகளாகக் கொண்டாடினேன் நான். அவர் குற்றங்களைக் காண என் கண்கள் மறுத்தன. குற்றங் குறைகள் அவரிடம் இருந்தது ஒரு பொருட்டாக எனக்குப் படவில்லை. ஆனால் அவை அந்த மனிதனின் ஆத்மா வைச் சின்னதாக்கி விடவில்லை என்கிற உண்மை என்னைப் பெருமிதமடையச் செய்தது; அவரை நசுக்கிவிடவு மில்லை அவர் சிறுமைகள். மெகாலேயின் அற்புத பாஷை யும் லாகவமும் எனக்குப் பிடித்திருந்தன; சின்ன விஷ யங்களையும் பெரிது படுத்தி உத்ஸாக மூட்டும் சக்தியும் வேகமும் எனக்குகந்தவையாக இருந்தன. எனினும் சில சமயம் அவனுடைய அழுத்தமும் வேகமும் என்னைச் சலிப்படையச் செய்தன. சில சமயம் பொய்களை அவன் மெய் போலச் சொல்வது என்னை மிரளச் செய்தது. எழுத்திலே உண்மை அவசியமா, பலன் அவசியமா என்று என்னையே நான் கேட்டுக்கொள்வேன். பர்க்கிடம் எனக் கிருந்த ஆர்வம் மெகாலேயிடம் வரவில்லை.

கேம்பிரிட்ஜ் பள்ளியில்தான் நான் என் வாழ்க்கையில் முதல் தடவையாக என் வயதுப் பெண்களுடன் நட்பும் சம அந்தஸ்தும் கொண்டாட முடிந்தது. பழகவும், அவர்களுடன் பேசவும் அதற்கு முன் எனக்கு எவ்வித சந்தர்ப்பமும் வாய்த்ததில்லை. பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த ஒரு சிறு வீட்டில் நானும் பல பெண்களுடன் வசித்தேன்.

அந்த வீட்டில் ஒரு காலத்தில் மிஸ்டர் ஹவல்ஸ் வசித்தாராம். வீட்டுக் குடும்ப வாழ்க்கையே போலத்தான் இருந்தது எங்கள் வாழ்க்கையும். அந்தப் பெண்களுடன் நான் பல விளையாட்டுக்கள் விளையாடினேன். கண்ணு மூச்சி விளையாட்டுக்கூட விளையாடினேன். பனியில் குதித்து விளையாடினேன். அவர்களுடன் நெடுந்தூரம் உலாத்திவிட்டு வருவேன் நான். நாங்கள் அடிக்கடி எங்கள் வகுப்புக்களையும் பாடங்களையும் பற்றி விவாதிப்பது முண்டு. எங்கள் கவனத்தைக் கவர்ந்த புஸ்தகங்களில் பல பகுதிகளை ஒருவருக்கொருவர் வாசித்துக் காட்டிக் கொள்வோம். அந்தப் பெண்களில் சிலர் என்னுடன் என் பாஷையில் பேசக் கற்றுக்கொண்டார்கள். அவர்களுக்கும் எனக்கும் இடையே மிஸ் ஸல்லிவனின் உதவி தேவையாக இராது.

கிறிஸ்துமஸ் விடுமுறையின் போது என் தாயாரும் தங்கையும் வந்து என்னுடன் தங்கினார்கள். பள்ளியில் மில்டிரெட்டைச் சேர்த்துக்கொள்ள மிஸ்டர் கில்மன் சம்மதித்தார். கேம்பிரிட்ஜில் மில்டிரெட் என்னுடன் தங்கினாள்: ஆறு மாதங்கள் தங்கினாள். அந்த ஆறு நிறைந்த மாதங்களும் நாங்கள் இருவரும் ஒருவரைவிட்டு ஒருவர் பிரியாமல் இருந்தோம்; படிப்பும் விளையாட்டும் சேர்ந்து தான்.

1897 ஜூன் 29 முதல் ஜூலை 3-ந் தேதி வரை ராட்கிளிவ் காலேஜுக்கு என்னைச் சேர்ப்பதற்கு எனக்குப் பிரவேசப் பரீக்ஷை நடந்தது. எளிய, கடினமான ஜெர்மன், பிரெஞ்சு, லத்தீன், ஆங்கிலம் என்கிற பாஷைகளில் பரீக்ஷை கொடுத்தேன். தவிர கிரேக்க, ரோம சரித்திரங்களிலும் பரீக்ஷை கொடுத்தேன். மொத்தம் ஒன்பது மணி நேரம் பரீக்ஷை. எல்லாப் பாடங்களிலும் நான் தேறி

விட்டேன்—ஜெர்மன், ஆங்கிலம் இரண்டிலும் சிறப்பாகத் தேறினேன்.

எப்படி என் பரீக்ஷை நடந்தது என்று விவரிப்பது இங்கு அவசியம் என்று எண்ணுகிறேன். பன்னிரண்டு மணி நேரம் சாதாரணபாடங்கள்; பாக்கி நாலு மணிநேரம் சிறப்புப் பாடங்கள். ஒரே சமயத்தில் ஐந்து மணி நேரப் பாடங்களில் தேருவிட்டால்,தேர்வு பெற்றதாகக் கருதுவது கிடையாது. கேள்வித்தாள்கள் ஹார்வார்டில் ஒன்பது மணிக்குத் தருவார்கள். ஒரு ஆள் வசத்தில் அவை ராட் கிளிப்புக்கு வந்து சேரும். மாணவ மாணவிகளின் பெயர்கள் விடைத்தாள்களில் இடம் பெற; ஒவ்வொருவருக்கும் ஒரு எண் தரப்படும். என் எண் 233. ஆனால் நான் என் விடைகளை டைப் செய்ததால் என் பெயர் போட்டிருந்தாலும் ஒன்றுதான்; எண் போட்டிருந்தாலும் ஒன்றுதான்; மறைக்க முடியாது.

நான் டைப் செய்வது மற்ற பெண்களுக்குத் தொந்தரவாக இருக்குமென்று என்னைத் தனியாக ஒரு அறையில் இருக்கச் செய்து வினாத் தாள்களைத் தந்தார்கள். என் கையில் எழுத்துக் கூட்டி மிஸ்டர் கில்மன் எல்லா வினாக்களையும் எனக்குத் தெரிவித்தார். யாரும் அங்கு குறுக்கிடாதபடி வாசலில் காவல் காப்பதற்கு ஒருவர் நியமிக்கப் பட்டிருந்தார்.

முதல் நாள் ஜெர்மன் பரீக்ஷை நடந்தது. மிஸ்டர் கில்மன் என் பக்கத்தில் உட்கார்ந்து வாக்கியம் வாக்கியமாகக் கேள்விகளை எனக்குச் சொன்னார். தாள் பூராவையும் படித்ததும் பிறகு கேள்வி கேள்வியாக ஒன்றன்பின் ஒன்றாகப் படித்தார். நானும் திருப்பிச் சொன்னேன், கேள்விகளைப் புரிந்து கொள்வதில் தவறுதல் ஏற்படா

திருப்பதற்காக. கேள்விகள் கடினமாகத்தான் இருந்தன. மிகவும் கவலையுடன் தான் என் பதில்களை டைப் செய்யத் தொடங்கினேன். நான் எழுதியதை எழுத்துக் கூட்டி வாசித்துக் காட்டினுர் மிஸ்டர் கில்மன். அவசியமானதாக எனக்குத் தோன்றிய மாறுதல்களை நான் செய்தேன். திருத்தங்களை மிஸ்டர் கில்மன்தான் என் விடைத் தாள் களில் செய்தார். பின்னர் நான் எடுத்துக்கொண்ட பரீக்ஷைகளில் எனக்கு இந்தச் சலுகைகள் எல்லாம் கிடைக்கவில்லை என்பதை இங்கே சொல்லிவிடுகிறேன். ராட்கிளிப்பில் நான் எழுதிய விடைத்தாள்களை எனக்குத் திரும்பவும் படித்துக்காட்ட யாருமில்லை. எழுதிவிட்டதைத் திருத்துவது என்பது சாத்தியமேயில்லாது போய்விட்டது. விடைகள் எழுதிய பிறகு தவறுகள் திருத்தலாம். ஆனுல் எனக்குத்தான் கண்ணில்லாததால் வாசிக்க முடியாதே; விடைத்தாளைப் பார்த்துத் திருத்துவதென்பது முடியாது. ஞாபகமிருந்த தவறுகளைத் திருத்தலாம்; அந்தத் திருத் தங்களைக்கூட அழுத்தமாக விடைத்தாள்களின் கடைசிப் பக்கத்திலே சேர்க்க முடியுமே தவிர, அதனதன் இடத்தில் சேர்க்க முடியாது. பிரவேசப் பரீக்ஷையில் தேறிய தரத்தில் நான் கடைசிப் பரீக்ஷைகளில் தேறவில்லை என்ருல் அதற்கு இரண்டு காரணங்கள் சொல்லலாம். கடைசிப் பரீக்ஷையில் நான் எழுதியதை எனக்குத் திரும் பவும் வாசித்துக்காட்ட யாரும் இல்லை. தவிரவும் பிரவேசம் பரீக்ஷையில் நான் எடுத்துக்கொண்ட பாடங்களில் அந்தப் பள்ளிக்கூடத்தில் நான் படிக்க வருவதற்கு முன்னரே கொஞ்சம் தேர்ச்சியிருந்தது. தவிரவும் வருஷ ஆரம்பத்தி லேயே ஹார்வார்டு கேள்வித்தாள்கள் பலவற்றை எனக்குக் காட்டி ஆங்கிலம், பிரெஞ்சு, சரித்திரம், ஜெர்மன் இவற்றி லெல்லாம் விடையளிக்க எனக்கு மிஸ்டர் கில்மன் பயிற்சி யளித்திருந்தார்.

பரீக்ஷை அதிகாரிகளுக்கு மிஸ்டர் கில்மன் என் விடைத்தாள்களை அனுப்பினர். 233 எண்ணுள்ள மாணவி தான் அந்த விடைகளை எழுதியது என்கிற ஒரு அத்தாட்சிப் பத்திரத்துடன் என் விடைகளை அனுப்பிவைத்தார்.

மற்றப் பிரவேசப் பரீக்ஷைகளும் இதேமாதிரிதான் நடைபெற்றன. இவற்றில் முதல் பரீக்ஷைதான் அதிகக் கடினமாக இருந்தது. லத்தீன் கேள்வித்தாள் வந்தபோது, பேராசிரியர் ஷில்லிங்கு வந்து நான் ஜெர்மன் பரீக்ஷையில் திருப்திகரமாகத் தேறிவிட்டதாக அறிவித்தார் என்பது எனக்கு ஞாபகம் இருக்கிறது. மற்றப் பரீக்ஷைகளைத் திருப்திகரமாக எழுத இந்தச் செய்தி எனக்கு உத்ஸாகம் அளித்தது. இதயம் களிபாட, கை நடுக்காமல் மற்ற பாடங்களிலும் பரீக்ஷை கொடுத்துத் தேறினேன் நான்.

## 19

கில்மன் பள்ளிக்கூடத்தில் என்னுடைய இரண்டாவது வருஷம் நம்பிக்கை நிறைந்திருந்தது. முதலில் சில வாரங்களில் எதிர்பாராத பல இடையூறுகள் ஏற்பட்டன. அந்தவருஷம் நான் முக்யமாகக் கணக்குக் கற்றுக் கொள்வதில் கவனம் செலுத்தவேண்டும் என்று மிஸ்டர் கில்மன் தீர்மானித்திருந்தார். அது தவிர பௌதிக சாஸ்திரம், அல்ஜீப்ரா, க்ஷேத்திர கணிதம், வான சாஸ்திரம், கிரேக்க லத்தீன்பாஷைகள் முதலிய பாடங்களையும் படிக்கவேண்டும். வகுப்பில் மற்றவர்களுடன் பாடங்களைத் தொடங்குவதற்கு ஏற்றவகையில் எனக்காக பிரத்தியேகமாகத் தயாரிக்கப் பட்ட குருட்டுப் புஸ்தகங்கள் தயாராகி வரவில்லை. சில பாடங்களுக்கு வேண்டிய சாதனங்கள் சிலவும் சமயத்தில் கிடைக்கவில்லை. எனக்காகப் பிரத்தியேகமாகக் கல்வி

சொல்லித் தருவது என்பது சிரமமான காரியமாக இருந்தது. எல்லாப் பாடங்களையும் கேட்டு எனக்கு எழுத்துக் கூட்டிச் சொல்ல வேண்டியது மிஸ் ஸல்லிவனின் பொறுப்பாயிற்று. முதல் தடவையாக அவளால் சமாளிக்க முடியாதுபோல ஒரு நிலைமை ஏற்பட்டது.

அல்ஜீப்ரா, ஜியாமிதி முதலிய பாடங்களில் வகுப்பி லேயே நான் கணக்குகள் போடவேண்டியதாக இருந்தது. பௌதிக சாஸ்திரத்திலும் கணக்குகள் வந்தன. ஒரு ப்ரெய்ல் எழுத்துச் சாதனம் வாங்கும் வரையில் என்னால் வகுப்பிலேயே கணக்குகளைப் போட முடியவில்லை. கரும் பலகையில் உபாத்தியாயர் எழுதிய கோடுகளை (ஜியாமிதி பாடத்தில்) என்னால் கண்டுகொள்ள முடியவில்லை. இதற்கு கம்பியாலான சாதனம் ஒன்று தயார் செய்துகொள்ள வேண்டியதாக இருந்தது. மிஸ்டர் கீத் அவருடைய அறிக் கையில் சொல்வதுபோல, எழுத்து உருவம், தேற்றம், ருஜு எல்லாவற்றையும் ஒருங்கே நான் என் மனத்தில் கற்பனை செய்துகொள்ள வேண்டியதாக இருந்தது. சுருக்க மாகச் சொன்னால் ஒவ்வொரு பாடத்திலும் ஒவ்வொரு தினுசான சிரமம் இருந்தது. சிலசமயம் நான் தைரியத்தை இழந்துவிடுவேன். என் உணர்ச்சிகளை வெட்கப்படத் தக்க முறையில் வெளிப்படக் காட்டிவிடுவேன். எல்லாக் கஷ்டங் களிலும் ஆறுதல் அளித்து என்னை ஊக்குவித்து முன் னேறச் செய்த என் சிறந்த உபாத்தியாயினியாகிய மிஸ் ஸல்லிவனுக்கு எதிராகச் சதி செய்து சிலர் என் அதைரி யத்தையும் குழப்பத்தையும் அதிகரித்ததுதான் எனக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது.

கொஞ்சம் கொஞ்சமாக என் கஷ்டங்கள் மறையத் தொடங்கின. ப்ரெய்ல் புஸ்தகங்களும் மற்றும் தேவை யான சாதனங்களும் வந்து சேர்ந்தன. புதுப்பிக்கப்பட்ட

நம்பிக்கையுடன் என் பாடங்களைத் தொடங்கினேன். என் முயற்சிகளை வியர்த்தமாக்கிய பாடங்கள் அல்ஜீப்ராவும் ஜியாமிதியும்தான்.

இந்தப் பாடங்களை மிஸ்டர் கீத் எனக்குப் படிப்பிக்க ஆரம்பிக்கும் வரையில் எனக்குத் தலைகால் புரியவில்லை என்றுதான் சொல்லவேண்டும்.

இந்தச் சிரமங்களெல்லாம் கடந்து சென்றுகொண்டிருக்கும்போது ஒரு சம்பவம் நடந்தது. அதெல்லாவற்றையும் அடியோடு மாற்றிய சம்பவம் அது.

ப்ரெய்ல் புஸ்தகங்கள் வருவதற்குக் கொஞ்சநாள் முந்தி நான் மிகவும் அதிகமாக உழைக்கிறேன் என்று மிஸ்டர் கில்மன் மிஸ் ஸல்லிவனிடம் வற்புறுத்தினர். என் பாட நேரங்களையும் குறைத்தார். நான் மறுத்துச் சொல்லியும் பயன் ஏற்படவில்லை. ஆரம்பத்தில் காலேஜுக்குப் போக ஐந்து வருஷங்களில் தயார் செய்வது என்று தீர்மானித்திருந்தோம். முதல் வருஷப் பரீக்ஷையில் எனக்குக் கிடைத்த வெற்றியினுல் ஐந்து வருஷங்கள் தேவையில்லை என்று மிஸ் ஸல்லிவனுக்கும் மிஸ்டர் கில்மனின் தலைமை உபாத்தியாயினி மிஸ் ஹார்போவுக்கும் தோன்றியது. இரண்டு வருஷங்களில் தயார் செய்துகொண்டு விடலாம் என்று திட்டமிட்டோம். ஆனுல் பாடங்களைத் தொடருவதில் என் தவிப்பு அதிகரித்ததைக் கண்டதும், மிஸ்டர் கில்மனுக்கு இது சரியான தீர்மானம்தானு என்று சந்தேகம் வந்துவிட்டது. இன்னும் மூன்று வருஷங்களாவது நான் அவர் பள்ளியிலிருந்து பாடங்களைப் படிப்பது நல்லது என்று அவர் அபிப்பிராயப்பட்டார். அவர் திட்டம் எனக்குப் பிடிக்கவில்லை. என் வகுப்புடன், மற்ற பெண்களுடன், அவர்களுக்குச் சமமாக, நானும காலேஜ் போக விரும்பினேன்.

நவம்பர் 17-ந் தேதியன்று எனக்கு உடம்பு சரியாக இல்லை. நான் பள்ளிக்கூடம் போகவில்லை. அப்படியொன்றும் பிரமாதமான விஷயமில்லை என்பது மிஸ் ஸல்லிவனுக்குத் தெரியும். ஆனால் மிஸ்டர் கில்மன் அதைக் கேள்விப்பட்டதும் என் பாடங்களை வெகுவாகக் குறைத்துவிட முயன்றார். அவர் சொன்னபடி நான் படித்தால் என் வகுப்புடன் நான் பரீக்ஷைக்கு உட்கார முடியாது. கடைசியில் இந்த அபிப்பிராயபேதம் காரணமாக என் தாயார் என்னையும் என் தங்கை மில்டிரெட்டையும் அந்தப் பள்ளிக்கூடம் போகவேண்டாம் என்று சொல்லிவிட்டாள்.

கொஞ்ச நாட்களுக்குப் பிறகு கேம்பிரிட்ஜ் பள்ளியைச் சேர்ந்த மிஸ்டர் மெர்டன் எஸ். கீத் என்பவருடன் என் பாடங்களைத் தொடங்குவது என்று ஏற்பட்டாயிற்று. போஸ்டன் நகரிலிருந்து இருபத்தைந்து மைல்களுக்கப்பால் இருந்த ரெந்தாமில் சேம்பர்லின் குடும்பத்துடன் நானும் மிஸ் ஸல்லிவனும் அந்த மாரிக்காலத்தில் பாதி நாட்களைக் கழித்தோம்.

1898-ல் பிப்ரவரி முதல் ஜூலைவரை, வாரம் இரண்டு தடவை ரெந்தாமுக்கு வந்து மிஸ்டர் கீத் எனக்கு அல்ஜீப்ரா, ஜியாமிதி, கிரேக்க, லத்தின் பாஷைகள் முதலிய பாடங்களைச் சொல்லித் தந்தார்.

அக்டோபர் 1898-ல் நாங்கள் போஸ்டன் திரும்பினோம். எட்டு மாதங்களுக்கு வாரத்தில் ஐந்து நாட்கள் எனக்குப் பாடங்கள் சொல்லித் தந்தார் மிஸ்டர் கீத். ஒவ்வொரு பாடமும் ஒரு மணி நேரத்துக்கு அதிகம் போகாது. ஒவ்வொரு தடவையும் முந்திய பாடத்தில் புரியாத பகுதிகளை விளக்கிவிட்டு புதுப்பகுதியும் சொல்லித்தருவார். புதுக்கேள்விகள், கணக்குகள் தருவார். நான் எழுதிய

கிரேக்க லத்தீன் பாஷை வியாசங்களைத் திருத்த எடுத்துச் செல்வார்; திருத்திக் கொணர்ந்து தருவார். இப்படியாகக் காலேஜுக்குத் தயார் செய்து கொள்ளுகிற என் படிப்பு இடைவிடாது நடந்துவந்தது. வகுப்பில் மற்றவர்களுடன உட்கார்ந்து படிப்பதில் வந்ததைவிடச் சுலபமாகவும் தெளிவாகவும் தனியாகக் கற்றுக்கொண்டதில் எனக்குப் பாடங்கள் வந்தன. குழப்பமோ அவசரமோ ஏற்படவே யில்லை. எனக்குப் புரியாததைப் புரியும்படிச் சொல்லித்தர என் உபாத்தியாயருக்கும் அவகாசம் இருந்தது. ஆகவே, நான் சுலபமாகவும் வேகமாகவும் என் பாடங்களைக் கற்றுத் தேர்ந்தேன். என் கல்வியின் தரமும் அதிகப்பட்டது. பாஷைகளும் இலக்கியமும் எனக்கு வந்தமாதிரிச் சுலபமாக அல்ஜீப்ராவும் ஜியாமிதியும் வரக்கூடாதா என்று எண்ணி னேன் நான். ஆனால், கணக்குகளைக்கூட மிஸ்டர் கீத் சுவாரஸ்யமாக, புரிந்து கொள்ளும்படியாக, சொல்லித் தந்தார். என் மூளையைக்கூட எட்டும்படியாகப் பிரச்னை களைச் சொல்லுவதல் மிஸ்டர் கீத் சாமர்த்தியம் காட்டினர். ஆர்வத்துடனும் சுருசுருப்பாகவும் என் பாடங்களை எனக்கு மிஸ்டர் கீத் கற்றுத் தந்தார். தொடர்ந்து விடாப்பிடியாக எதற்கும் காரண காரியங் காணக் கற்றுத்தந்தார். கண்ணை மூடிக்கொண்டு எதையும் அணுகக்கூடாது என்று சொல்லித்தந்தார். நான் என்ன பிசகு செய்தாலும் அதை மறந்து என்னைப் பாராட்டி ஊக்கமளிப்பார்.

1899-ல், ஜூன் 29, 30 தேதிகளில், ராட்கிளிப் காலேஜுக்குச் சேருவதற்கான முடிவான பரீக்ஷைகள் எழுதினேன் நான். முதல் நாள் கிரேக்க, லத்தீன் பாஷைப் பரீக்ஷைகள் நடந்தன. இரண்டாவது நாள் ஜியாமிதி, அல்ஜீப்ரா, கடினமான கிரேக்க பாஷை மூன்று பரீக்ஷைகளும் நடந்தன.

மிஸ் ஸல்லிவன் கேள்வித் தாள்களை எனக்குப் படித்துக் காட்டக்கூடாது என்று சொல்லிவிட்டார்கள் கலாசாலை அதிகாரிகள். பெர்கின்ஸ் ஸ்தாபனத்தைச் சேர்ந்த மிஸ்டர் யூஜின் ஸீ. வைனிங் என்பவர் வந்தார். அவர் கேள்வித் தாள்களை அமெரிக்க ப்ரெய்ல் எழுத்தில் எழுதித் தந்தார். மிஸ்டர் வைனிங் எனக்கு முன் பின் அறிமுகமாகாதவர். என்னுடன் ப்ரெய்ல் எழுத்து எழுதித்தான் அவர் பேசமுடியும். புரோக்டர் வந்தவரும் எனக்குப் புதுசுதான். என்னுடன் பேச அவர் முயலவே இல்லை.

பாஷைகளைப் பற்றியவரையில் ப்ரெய்ல் எழுத்து சிரமம் இல்லாமல் இருந்தது. ஜியாமிதியில் சிரமங்கள் தோன்றின. எனக்கு ஒரே குழப்பமாக இருந்தது. பிரச்னை என்ன என்று புரிந்துகொள்வதிலேயே பாதி நேரம் வீணாகி விட்டது. பாஷையைப் பற்றியவரையில்—ஆங்கில, அமெரிக்க, ந்யூ யார்க் ப்ரெய்ல் பாஷைகளில் உள்ள வித்தியாசங்கள் எனக்குத் தெரியும். ஆனால், அல்ஜீப்ரா ஜியாமிதியில் இவற்றின் பிரயோகம் மிகவும் மாறுபட்டதாக இருந்தது. அல்ஜீப்ராவில் ஆங்கில ப்ரெய்ல்தான் எனக்குத் தெரியும்.

ஆனால் பரீக்ஷைகளுக்கு இரண்டு நாட்களுக்கு முன் மிஸ்டர் வைனிங் உதாரணத்துக்காக ஒரு ஹார்வார்டு பரீக்ஷைத்தாளை ப்ரெய்ல் எழுத்தில் எழுதி எனக்கு அனுப்பினார். அல்ஜீப்ராவில் அவர் உபயோகித்திருந்த அமெரிக்க ப்ரெய்ல் எனக்குப் பரிசயமானதல்ல. குறிகளுக்கு என்னென்ன அர்த்தம் என்று அவரைக் கேட்டு அறிந்து கொள்ள முயன்றேன். குறிகளைச் சரிவரக் கற்றுக்கொள்ள எனக்குப் போதிய அவகாசம் அகப்படவில்லை. பரீக்ஷைக்கு முந்திய நாள் இரவில்கூட எனக்கு அமெரிக்க ப்ரெய்லில்

அல்ஜீப்ராக் குறிகள் சரிவர மனப்பாடம் ஆகவில்லை. மிஸ்டர் கீத்துக்கும் எனக்கும் பரீக்ஷை என்ன ஆகுமோ என்று பயமாகத்தான் இருந்தது. ஆனால் பரீக்ஷைக்குச் சில மணி நேரம் முன்னதாகப் பள்ளிக்குச்சென்று மிஸ்டர் வைனிங்கிடமே பல அல்ஜீப்ராக் குறிகளைக்கேட்டு அறிந்து கொண்டேன்.

ஜியாமிதியிலும் சிரமம் இல்லாமல் இல்லை. வழக்கமாகத் தேற்றங்களை வரிசை எழுத்திலாவது, என் கையில் எழுத்துக் கூட்டியாவது அறிந்து கொள்வது எனக்கு வழக்கம். ப்ரெய்லில் அதைக் கண்டு கொள்ள என்னால் முதலில் இயலவேயில்லை. மிஸ்டர் வைனிங் பரீக்ஷைக்கு ஒரு மணி நேரம் முன்தான் எல்லாக் குறிகளையும் சொல்லித் தந்திருந்தார் எனினும், ஜியாமிதிக் குறிகளும் எனக்குத் தெளிவாகப் புரியவில்லை, டைப்ரைடரில் கேள்விகளுக்கு நான் எழுதிய பதில்களையும் என்னால் வாசித்துத் திருத்தமுடியவில்லை. பிரச்னைகளை மானஸீகமாகத தீர்த்து விடை காண எனக்கு மிஸ்டர் கீத் சொல்லித்தந்துவிட்டார்; ஆனால் பரீக்ஷைத் தாள்களுக்கு விடையளிக்கிற வித்தையை அவர் எனக்குக் கற்றுத் தரவில்லை. ஆகவே, என் விடைகள் மிகவும் மெதுவாக, வெகு சிரமப்பட்டுத்தான் எழுதப்பட்டன. திருப்பித் திருப்பிக் கேள்விகளைப் படித்துத்தான் நான் அவற்றைச் சரிவரப் புரிந்துகொள்ள முடிந்தது. என் மூளையே குழம்பி விட்டமாதிரித்தான் இருந்தது.

இதறகாக நான் யாரையும் குறைகூறவில்லை—யார் மேலும் குற்றம் சாட்டவில்லை. என் பரீக்ஷைகளை எனக்கு எவ்வளவு கடினமாக்கினார்கள் என்பது ராட்கிளிப் ஆசிரியர்களுக்கும் அதிகாரிகளுக்கும் தெரியாதென்றே நான் நினைக்கிறேன். எனக்கிருந்த சிரமங்களை அவர்கள் புரிந்துகொள்ளவில்லை; ஆனால் பரீக்ஷையில் நான் தேறிவிட்டேன்.

# 20

காலேஜில் சேருவதற்கான ஆரம்ப முயற்சிகளில் நான் வெற்றிபெற்றுவிட்டேன், இனி எப்பொழுது வேண்டுமானாலும் நான் ராட்கிளிப்பில் சேர்ந்துவிடலாம். ஆனால், காலேஜில் சேருவதற்கு முன் இன்னும் ஒரு வருஷம் மிஸ்டர் கீத்திடம் பாடங்களைப் படிப்பது என்று ஏற்பாடாயிற்று. ஆகவே, 1900-ம் வருஷத்தில் தான் காலேஜுக்குப் போவது என்று நான் கண்டு கொண்டிருந்த கனவு நனவாகமாறியது.

ராட்கிளிப் காலேஜில் என் முதல் நாள் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது. சுவாரஸ்யமான தினம் அது. எத்தனையோ வருஷங்களாக அந்த நாளை எண்ணி நான் கனவுகள் கண்டுகொண்டிருந்தேன். என் நண்பர்களின் புத்திமதிகளையும் மீறிக் காலேஜ் செல்லவேண்டும் என்கிற ஒரு ஆசை என்னுள்ளே யிருந்து என்னை உந்தித் தள்ளிக் கொணர்ந்து சேர்த்துவிட்டது. கண்ணும் காதும் உள்ளவர்களுடன் போட்டியிட்டு வெற்றிபெற என்னாலும் முடியும் என்று இப்போது திடமாக நிரூபித்துவிட்டேன். வழி கடினமானது, இடையூறுகள் பல உள்ளது என்று எனக்கும் தெரியும். அவற்றை எல்லாம் கடந்து வெற்றி காண்பதில்தானே இன்பம் உண்டு? அறிவு என்கிற நேர்பாட்டையில் என்னால் நடக்க இயலாது என்பதற்காக அறிவு என்கிற ஆசையையே நான் ஒழித்துவிட வேண்டுமா என்ன? பழக்கப்படாத பல பாதைகளில் சென்று நான் காலேஜ் கல்வி என்கிற லக்ஷியத்தை எட்டிவிட்டேன். என்னைப் போன்ற மனமும் உள்ளமும் படைத்த பல பெண்கள் எனக்குச் சிநேகிதமாவார்கள். அவர்கள் அன்பும் சிந்தனைகளும் பேச்சும் வாழ்க்கையில் மேலே செல்ல எனக்கு மிகவும் உபயோகப்படும்.

ஆர்வத்துடன் என் பாடங்களைத் தொடங்கினேன். அழகும் ஒளியும் நிறைந்த ஒரு புது உலகம் என் முன் நின்று என்னை அழைத்தது. அறிவின் எல்லைகளையும் எட்டிவிட எனக்குத் தெம்பு உண்டு என்று எண்ணி மகிழ்ந் தேன் நான். மனிதர் மனம் என்கிற அதிசய உலகில் மற்ற வர்களுக்குச் சரிசமானம் நான் என்று எண்ணி இறும்பூ தெய்தினேன். உண்மையான உலகை நான் அறிய இந்த மனம் என்கிற உலகில் நடைபெறுகிற சம்பவங்கள், காரி யங்கள் எல்லாம் எனக்கு உதவும்; இந்த மனமெனும் உலகிலும் மனிதர்கள் இருந்தார்கள்; காட்சிகள் பல இருந்தன; சோக நாடகங்கள் பல நடந்தன; ஹாஸ்யமான சந்தர்ப்பங்கள் பல எழுந்தன. பெரியது அரியது என்று சொல்லக்கூடிய சிந்தனைகள் காலேஜின் கூடங்களில் நிரம்பியிருப்பதுபோலத் தோன்றியது எனக்கு. அங்குள்ள பேராசிரியர்கள் ஞானத்தின் காவலாளிகள், சின்னங்கள் என்று அறிந்து ஆனந்தமடைந்தேன் நான். பின்னர் இதெல்லாம் உண்மையல்ல என்று தெரிந்தாலும்கூட இதை நான் வெளியிட்டுச் சொல்வேனு என்ன?

ஆனால் சீக்கிரமே எனக்குத் தெரிந்துவிட்டது. என் கனவு லக்ஷியத்திற்கும் இந்தக் காலேஜ் வாழ்வுக்கும் அதிக ஒற்றுமை இருந்ததாகத் தெரியவில்லை. அனுபவமற்ற என் சிந்தனைகளுக்கு உருவகமாகி யிருந்த காலேஜ் வாழ்க்கை என்கிற லக்ஷிய பூமி, நேருக்கு நேராக நோக்கும் போது, உருமாறித் தோற்றமளித்தது. இரவெனும் அழகு ஒளி மறைந்து, "பகலெனும் மங்கலில் தேய்ந்துகொண் டிருந்தது." காலேஜுக்குப் போவதிலுள்ள அசௌகரி யங்கள் எனக்கு நாளடைவில் தெரிய வந்தன.

முக்கியமான குறை பொழுது போகவில்லை என்பது தான். நானும் என் மனமும் உல்லாஸமாக எல்லாவற்றை

யும் பற்றிச் சிந்தித்துச் சம்பாஷித்துக்கொண்டு பறவைகள் போலத் திரிந்துகொண்டிருந்தோம். காலேஜ் போனதும் அதற்கு முடிவு ஏற்பட்டுவிட்டது. ஆத்மாவின் உள் ளிசையை ஆனந்தமாகக் கேட்டுச் சுவைத்துக்கொண்டு அவசரப்படாமல் பொழுதைப் போக்குவோம். கவிதை படிப் பதற்கும், சுவைப்பதற்கும், அனுபவிப்பதற்கும் போதிய நேரம் இருந்தது; அவசரமே கிடையாது. ஆனால் காலேஜில் சேர்ந்தபிறகு சிந்திப்பதற்கு அவகாசம் கிடைப்பதே அருமையாக இருந்தது. பாடங்களைக் கற்றுக்கொள்ள அவகாசம் கிடைத்ததே தவிர, சிந்திக்க அங்கு நேரம் இல்லை; தானாக எழுகிற சிந்தனைகளை வளர்க்க அங்கு யாரும் கற்றுத் தருவதில்லை. கல்வி ஸ்தாபனத்தின் கதவு களைத் தாண்டியதுமே பிரியமான பல விஷயங்கள்— தனிமை, புஸ்தகங்கள், கற்பனை முதவியனவெல்லாம்—பின் தங்கி விடுகின்றன; காலேஜுக்கு வெளியேயுள்ள பைன் காடுகளில் அவை புகுந்து மறைந்துவிடுகின்றன. பின்னர் அனுபவிக்கக்கூடிய பல அறிவுத் தொகுதிகளைச் சேர்த்து வைத்துக்கொள்வதாக வேண்டுமானால் பெருமைப்பட்டுக் கொள்ளலாம். ஆனால் இன்று இன்பம் இல்லை; தனிமை என்கிற ஆனந்தம் இல்லை; கற்பனை என்கிற சிந்தனையே இல்லை.

முதல் வருஷத்தில் நான் பிரெஞ்சு, ஜெர்மன், சரித் திரம், ஆங்கில வியாசங்கள், ஆங்கில இலக்கியம் முதலிய பாடங்கள் படித்தேன். பிரெஞ்சு பாஷையில் கார்ணீல், மோலியர், ரஸின், ஆல்பிரட் டி.முஸே, ஸாந்த்ப்யூவ்முதலிய வர்களின் நூல்களில் சிலவற்றைப் படித்தேன். ஜெர்மனில் கேதேயும் ஷில்லரும் படித்தேன். ரோம் சாம்ராஜ்யத்தின் அழிவு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரையில் உள்ள சரித்திர வரலாறுகளைப் படித்தேன். ஆங்கில இலக்கியத்

தில் மில்டனுடைய கவிதையையும் அவனுடைய "அரியோ பஜடிகா" என்கிற நூலையும் இலக்கிய விமர்சன நோக்குடன் படித்தேன்.

காலேஜில் நான் படிப்பதற்குச் செய்துகொண்ட பிரத்தியேக ஏற்பாடுகளைப்பற்றி என்னைப் பலரும் அடிக்கடி கேட்கிறார்கள். வகுப்பில், பலருக்கு மத்தியில் இருந்தாலும்கூட, நான் தனியாக இருக்கிற மாதிரித்தான். பேராசிரியர் பேசுவது ஏதோ தூரத்திலிருந்து டெலிபோனில் பேசுகிற மாதிரித்தான் இருந்தது. வேகம் வேகமாக பேராசிரியர் சொன்னவற்றை என் கையில் மிஸ் ஸல்லிவன் எழுதிக் காட்டுவாள். அந்த வேகத்திலே பேராசிரியர்களின் தனித் தன்மை மறைந்துவிடும். முயலைத் துரத்துகிற வேட்டை நாய்கள்போல என் கையில் எழுத்துக்கள் ஓடும்; பல சந்தர்ப்பங்களில் முயல் தப்பிவிடும்தான். ஆனால் வகுப்பில் பாடங்களுக்குக் குறிப்பெடுக்கிற மாணவ மாணவிகளைவிட என் நிலைமை மோசமானது என்று நான் நினைக்கவில்லை. என்னால் குறிப்புகள் எடுக்க முடியாது. ஏனென்றால் என் கைகள் மூலமாகத்தானே நான் பாடத்தையே கேட்டாக வேண்டும்? வீடு திரும்பியதும் கேட்ட பாடங்களில் ஞாபகமிருப்பதைக் குறித்து வைத்துக் கொள்வேன். வகுப்புப் பாடங்கள், தினசரிக் கேள்விகளுக்கு விடைகள், பரீக்ஷை வினாக்கள், விமர்சனங்கள் எல்லாவற்றையும் நான் என் டைப்ரைட்டரில் எழுதி என் உபாத்தியாயர்களுக்குத் தருவேன்.

நான் உபயோகிப்பது ஹாம்மாண்டு டைப்ரைட்டர்; மற்ற டைப்ரைட்டர்களைவிட இது என் காரியங்களுக்கு அதிகமாக உபயோகப்படுகிறது. இதன் எழுத்துக்களை, கிரேக்க பாஷை, பிரெஞ்சு பாஷை, கணக்குக் குறிகள் முதலியவற்றுக்குத் தேவைப்படுகிறபடி மாற்றிக் கொள்ள

லாம். இந்த டைப்ரைட்டர் இல்லாவிட்டால் என்னல் காலேஜில் சேர்ந்து படிப்பதென்பதே சாத்தியமாகி யிருக்குமா என்பது சந்தேகந்தான்.

காலேஜ் படிப்புக்குத் தேவையான புஸ்தகங்களில் மிகவும் சிலவே குருடர்களுக்கு உபயோகப்படும்படியாகத் தயாராகியுள்ளன. நூல்களை நான் என் கையில் எழுத்துக் கூட்டித்தான் அறிந்துகொள்ள வேண்டியதாக இருப்ப தால், மற்ற மாணவர்களைவிட எனக்கு அதிக நேரம் பிடிக் கிறது. கால விரயமும், சிரமமும் சிலசமயம் எனக்கு அதைரியமூட்டுகின்றன. ஒரு சிறிய பாடத்தை நான் பல மணி நேரம் படித்து அறிந்துகொள்ள வேண்டியதாக இருக்கிறது. வெளியுலகில் உள்ள மற்ற பெண்கள் சிரித்தும், வெகு உல்லாசமாக இருந்தும் கழிக்குப் நேரத்தை நான் படிப்பதில் செலவிட வேண்டியதாக இருக் கிறது. ஆனால் இதெல்லாம் நல்லதற்குத்தான் என்கிற எண்ணம் என்னைப் பாடுபடத் தூண்டுகிறது. என் மனத் தில் தோன்றும் அதைரியத்தைச் சிரித்துச் சமாளித்துக் கொள்கிறேன். கல்வி, அறிவு என்னும் லக்ஷியத்தை அடைய விரும்புகிறவள் கஷ்டம் என்கிற மலையில் தனி யாகத்தான் ஏறி அப்பாற் சென்றாக வேண்டும். அறிவை அடைய ராஜபாட்டை எதுவும் கிடையாது. எனக்கென்று ஏற்பட்ட தறுகலான, கோணல் மாணலான, கரடுமுரடான பாதையிலே நான் நடந்தேயாக வேண்டும். பாதைகளும் கிடையாது; நடை தாளாமல் கால்கள் தடுமாறுகின்றன; கண்ணில்படாத பல கற்கள் முட்கள் காலில் தைக் கின்றன; கோபம் வருகிறது. ஆனல் கொஞ்சம் முன்னேறி யிருக்கிறேன் என்று கண்டவுடன் இதெல்லாம் மறைந்து விடுகிறது மறந்தும் விடுகிறது. லக்ஷியம் நெருங்கிக் கைகாட்டி அழைக்கிறது. ஒவ்வொரு போராட்டமும்

ஒவ்வொரு வெற்றியில் முடிகிறது. இன்னும் முயற்சி செய்தால் நீலவானத்தையே தொட்டுவிடலாம் என்று தோன்றுகிறது; மலை உச்சியை அடைந்துவிடலாம். தவிரவும் என் முயற்சிகளில் எனக்கு உதவத் துணை இருக்கிறது. மிஸ்டர் வில்லியம் வேட் என்பவரும், பென்ஸில் வேனியா குருடர் ஸ்தாபனத்துத் தலைமை அதிகாரி மிஸ்டர் ஈ. ஈ. ஆலனும் எனக்காகப் பல நூல்களைத் தயாரித்துத் தருகிறார்கள். அவர்களுக்குத் தெரிய நியாய மில்லை; ஆனால் அவர்களுடைய இந்தச் செய்கை எனக்கு மிகவும் உதவியாகவும் தைரியமளிப்பதாகவும் இருக்கிறது.

போன வருஷம்—அதாவது ராட்கிளிப் காலேஜில் என் இரண்டாவது வருஷத்தில்—நான் ஆங்கில நடை, ஆங்கில இலக்கியமாக பைபிள் நூல், அமெரிக்கா ஐரோப்பா முதலியவற்றின் அரசியல், ஹாரசின் கீதங்கள், லத்தீன் நாடகங்கள் முதலிய பாடங்களைப் படித்தேன். ஆங்கில நடை வகுப்பு மிகவும் சுவாரஸ்யமான வகுப்பு. வியாசங்கள் முதலியன எழுதுவதற்கு எங்களுக்குச் சொல்லித் தந்த மிஸ்டர் சார்ளஸ் டவுன்ஸெண்டு கோப்லண்டு உத்ஸாகமூட்டிக் கவனத்தைக் கவர்ந்து இழுக்கும் வகையிலே பாடம்சொல்லித் தருவதில் சமர்த்தர். இலக்கியத்தின் சக்தி பூராவையும், கற்பனை பூராவும் எங்கள் முன் கொண்டுவந்து நிறுத்திவிடுகிறார். குறுகிய காலம்தான், ஒரு மணி நேரம்தான், அவர் வகுப்பு; ஆனால் அந்த ஒரு மணி நேரத்திற்குள்ளாகவே அவர் பலவித விந்தைகள் புரிந்துவிடுகிறார். குறிப்புகள் தேவையில்லை; விவாதமும் தேவையில்லை; நேருக்கு நேர் நிறுத்தி விடுகிறார் பல சிறந்த எழுத்தாளர்களின் எழுத்தை. பல பெரும் ஆசிரியர்களின் சிந்தனைகள் எங்கள் உள்ளத்தைக் கிளறுகின்றன. ஜூஹ்வா, எலோஹிம்

எல்லாவற்றையும் மறந்துவிட்டு, என்னுல் "பழைய ஏற்பாட்"டின் இடிமுழக்கங்களை ஆனந்தமாக அனுபவிக்க முடிகிறது. "அழியாத ஒரு இசையிலே உள்ள லக்ஷியத்தைக் காணமுடிகிறது. காலம் எனும் மரத்திலே அழகு உண்மை எனும் பூக்கள் பூத்திருப்பதை உணர முடிகிறது." இலக்கியத்தில் இதைவிட வேறு என்ன வேண்டும்?

காலேஜ் என்ருல் நித்யமான நிரந்தரமான ஸர்வ வியாபகமான ஏதென்ஸ் நகரம் என்று நான் எண்ணிய காலம் போய்விட்டது. அப்படியல்ல என்று தெளிவாகவே நான் கண்டுகொண்டு விட்டேன். பெரியவர்களையோ அறிஞர்களையோ நேருக்கு நேர் பார்க்க அங்கு நான் எதிர் பார்த்த மாதிரியான சந்தர்ப்பங்கள் ஏற்படவில்லை. அவர் களுடைய உயிருள்ள பேச்சோ, நடவடிக்கைகளோ என் வரை எட்டுவதுகூட இல்லை. அங்கிருக்கிருர்கள் அவர்க ளெல்லோரும் என்பது உண்மைதான்; ஆனுல் அவர்கள் உயிரிழந்து சவப் பெட்டிகளில் அடக்கமானவர்கள் மாதிரி இருக்கிருர்கள். அவர்களை அவர்களுடைய மூலை முடுக்கு களிலிருந்து விடுவித்து அவர்களுக்கு உயிர் தந்து நம்முடன் பேசச் செய்யவேண்டியது நாமே தான். நமக்குக் காலேஜில் அறிமுகமாவது உண்மையிலேயே மில்டனு, இஸையாவா அல்லது ஏதோ ஒரு போலியா என்பது நம்மையே பொறுத்ததுதான். இலக்கியத்தில் ரஸனை என்பது ஆர்வம், ஈடுபாடு என்பதைப் பொறுத்ததே தவிர. அறிவு என்பதைப் பொறுத்ததேயல்ல என்பதைப் பலரும் மறந்து விடுகிருர்கள். பல பேராசிரியர்களுடைய அறிவு மிகுந்த விவரங்கள் பலருடைய மனசில் நிற்காமல் போவதற்குக் காரணம் இதுதான். பழுத்து அழுகிவிட்ட பழத்தை மரம் உதிர்த்து விடுவதுபோல மனமும்

இந்த வேண்டாத அறிவை உதிர்த்து விடுகிறது. பூ என்பதன் உருவம் பூராவையும், அதன் வேர், வாசனை, திறம் எல்லாவற்றையும் அறிந்தவனுக்குப் பூ என்கிற அழகு அனுபவம் ஏற்படாமலே இருந்து விடலாம். கண்ணில்லாத, திசை தெரியாத பறவைகள் போல விவரண வார்த்தைகள் என் மனத்தில் சிறகடித்து வியர்த்தமாகக் குறுக்கும் நெடுக்கும் பறந்து ஓடுகின்றன. பிரபலமான நூல்களை நாம் படிக்கும்போது அவற்றைப் பற்றிய "அறிவு" தேவையில்லை என்று நான் சொல்ல வில்லை. வியாக்கியானம், விமர்சனம் என்கிற பெயர்களில் புகுந்து கொண்டு, வார்த்தைகளால் குட்டை குழப்பி, ஆத்மானுபவத்தைச் சாத்தியமில்லாமல் செய்துவிடுகிற ஒரு காரியத்தைத்தான் நான் வெறுக்கிறேன். உலகில் எத்தனை மனிதர்கள் உண்டோ அத்தனை விதமான அபிப்பிராயங்கள் எதைப் பற்றியுமே இருக்கலாம். ஆனால் இதற்கு விலக்கான விமரிசகர்கள் இல்லாமலில்லை. போரா சிரியர் கிட்டரெட்ஜ் பேசினானல் "குருடனுக்குப் புதுக் கண் திறந்தது போலிருக்கும்." ஷேக்ஸ்பியர் என்கிற கவியை அவர் நம் கண்முன் கொணர்ந்து நிறுத்திவிடுகிறார்.

ஆனாலும் நான் கற்றுக்கொள்ள வேண்டும் என்று கலாசாலை அதிகாரிகள் எதிர்பார்ப்பதில் ஒரு பாதியை யேனும் ஒதுக்கிவிட்டால்தான் தேவலை என்று சிலசமயம் எனக்குத் தோன்றுகிறது. ஒரு அளவுக்குமேல் கஷ்டப் பட்டு சம்பாதித்துக் கொண்டதை மனத்தில் இருத்திக் கொள்ள சக்தியேயற்றுப்போய் விடுகிறது.

இப்போது என் மூளையில் புகுந்து கொண்டுள்ள விஷயங்களை முறைப்படுத்தி அனுபவிக்க என்னல் முடியாது என்றே நான் நினைக்கிறேன்.

நானே நிமிர்த்தி வைத்து பூஜை செய்து விக்கிரஹங்களைத் தள்ளி வீழ்த்திவிடலாமா என்றுகூட ஆத்திரம் ஏற்படுகிறது.

ஆனால் காலேஜ் வாழ்வு என்றால் பரீக்ஷைகள்தானே முக்கியம்? முழுக்க முழுக்க என்னை பயமுறுத்தும் கனவுகள் அவைதாம். எத்தனையோ பரீக்ஷைகள் எழுதிவிட்டேன்; ஒன்றிலாவது தோல்வியுறாமல் வெற்றியும் கண்டுவிட்டேன். எனினும் பரீக்ஷை என்றால் இன்னமும் பயமாகத்தான் இருக்கிறது.

தயாராக இருப்பதாக நம்பிக்கையிருந்தால் நீ அதிர்ஷ்டசாலிதான். எப்படியோ சரியான விஷயங்களை ஞாபகத்தில் வைத்திருந்து எழுதிவிட்டால் சரிதான். தேவை ஏற்படுகிறபோது ஞாபகம் என்கிற சக்தியும், அறிவு என்கிற சாதனமும், ஏன் உயரப்பறந்து ஓடி விடுகின்றன? எத்தனையோ சிரமப்பட்டுத் தேடி உருப்போட்ட விஷயங்கள் எல்லாம் எங்கேபோய் ஒளிந்துகொண்டன?

"ஹஸ்ஸையும் அவன் சாதித்ததைப் பற்றியும் விவரி." ஹஸ்ஸா? யார் அது? எந்த ஊர்க்காரன்? ஞாபகம் வைத்துக் கொள்ளும்படியாக அவன் என்னதான் செய்தான்? ஏதோ கேள்விப் பட்ட பெயர் மாதிரித்தான் இருக்கிறது. குப்பைத் தொட்டியிலே தவறிவிட்ட ஒரு சாமானுக்காகக் கிளறுவதுபோல நீ படித்ததையெல்லாம் அவசரம் அவசரமாகக் கிளறிப் பார்க்கிறாய். புரட்சிகள், மதச் சண்டைகள், கொலைகள், படுகளங்கள், அரசியல் முறைகள்—என்னவெல்லாமோ ஞாபகம் வருகின்றன. நமக்குக்கூட இவ்வளவு விஷயங்கள் தெரிகிறதென்று பெருமையாகத்தான் இருக்கிறது. ஆனால் அந்த ஹஸ் எங்கே?—எங்கே அந்த ஹஸ்? உனக்குத் தெரிந்த எத்தனை விஷயங்கள் பற்றிக் கேள்விகளை கேட்கப் படவில்லை என்

பது உனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. எவ்வளவு சாவதானமாக அவசரமே படாமல் வருகிறன் ஹய்!

ஆனால் மணியாகிவிட்டது. பரீக்ஷை விடைத்தாள்களை அதிகாரி கையிலிருந்து பிடுங்கிப் போய்விடுகிறார்! எவ்வளவு ஆத்திரமும் கோபமும் கசப்பும் வருகிறது உனக்கு! ஏதாவது புரட்சி செய்து இந்தப் பரீக்ஷை முறையை ஒழித்துவிடத்தான் வேண்டும் என்று திட்டங்கள் போட்டுக்கொண்டு, ஹஸ்ஸும் நீயும் வீடு திரும்ப வேண்டியதுதான்!

ராட்கிளிப் காலேஜ் போவது என்கிற லக்ஷியம் எதிர்காலத்திலிருந்தபோது அதில் எல்லையற்ற கவர்ச்சியிருந்தது. இப்போது காலேஜில் சேர்ந்து படிக்கும்போது அந்தக் கவர்ச்சி அடியோடு மறைந்துவிட்டது. ஆனால் இந்த முயற்சியை நான் செய்திராவிட்டால் இப்போது நான் அறிந்து கொண்டிருக்கிற பல விஷயங்களை அறிந்தேயிருக்கமுடியாது. முதல் பாடமாக நான் அறிந்துகொண்டது பொறுமை என்கிற பெரும் பாடம்தான். அவசரப்படாமல் நிதானமாக நாட்டுப்புறத்தில் மக்கள் நடப்பது போல நடந்து, சுற்றிலும் உள்ளதையெல்லாம் கவனித்து அறிந்து கொள்வதுதான் அறிவு என்று எனக்குத் தோன்றுகிறது. எந்தமாதிரியான உணர்ச்சிகள் ஏற்பட்டாலும் அவற்றிற்கு நம்மனம் திறந்திருக்கவேண்டும். சிந்தனை என்கிற ஓசையற்ற அலைகள் எழுந்து மனதை நிரப்ப இந்த அறிவு அடிப்படை மிக மிக அவசியம். "அறிவே சக்தி" என்று சொல்வதைவிட "அறிவே ஆனந்தம்" என்று சொல்வது பொருந்தும். சிறியது எது பெரியது எது என்று உணரவும், உயர்ந்ததிலிருந்து தாழ்ந்ததைப் பிரிக்கவும், உண்மையல்லாததி லிருந்து உண்மையைத் தெரிந்து கொள்ளவும் நமக்கு உதவுகிற

அறிவுதான் விசாலமான, ஆழ்ந்த அறிவு; எல்லையற்ற ஆனந்தத்தைத் தரவல்லது. மனிதனின் முன்னேற்றத்தில் மைல்களாகக் குத்திட்டு நிற்கும் சிந்தனைகளையும் சம்பவங்களையும் அறிவதென்பது மனிதகுலத்தின் வளர்ச்சி காலமெனும் பாதையிலே எப்படி சாத்தியமாயிற்று என்பதைத் தெரிந்துகொள்ள நமக்கு உதவுகிறது இந்தப் போக்கு வானையும் விண்ணையும் நோக்கிய ஒரு போக்கு என்று உணராதவன், மனிதவாழ்வின் அமைதியான, பூரணமான இசையைச் சிறிதும் அறியாதவன் என்றுதான் சொல்லவேண்டும்; காதிருந்தாலும் இல்லாவிட்டாலும் அவன் செவிடன்தான்.

# 21

என் வாழ்க்கையின் வெளிப்படையான சம்பவங்களை இவ்வளவு தூரம் சொல்லிவிட்டேன். ஆனால் என் வாழ்க்கையில் புஸ்தகங்களுக்குள்ள இடத்தை இன்னும் சொல்லவில்லை நான். புஸ்தகங்கள் எனக்கு ஞானத்தை மட்டும் தரவில்லை. கண்ணும் காதும் உள்ளவர்களுக்கு அந்தப் பொறிகள் எப்படி உதவுகின்றனவோ அப்படி எனக்கு, அந்தப் பொறிகளுக்குப் பதில், புஸ்தகங்கள் உதவியிருக்கின்றன. உண்மையில், என் கல்வியில் புஸ்தகங்களுக்குள்ள முக்யத்வம் அலாதியானது; மற்றவர்களுக்குத் தந்ததைவிட எனக்குப் புஸ்தகங்கள் அதிக அர்த்தம் தந்தன.

மே 1887-ல் நான் முதல் முதலாக ஒரு கதையைப் பூராவும் தொடர்ந்து படித்தேன். எனக்கு அப்போது வயது ஏழு. எழுத்துப் பசியுடன் உள்ள என் விரல்களுக்கு எட்டியதையெல்லாம் அன்று முதல் இன்று வரை நான் படித்திருக்கிறேன்.

கையால் தொட்டுப்பார்த்து அறிந்து கொள்ளக்கூடிய புஸ்தகங்கள் வெகு சிலவே எனக்கு முதலில் கிடைத்தன; முக்கியமாக ஆரம்ப வாசக நூல்கள், குழந்தைகளுக்கான ஒரு கதைத் தொகுதி. இதைத் தவிர "நம் உலகம்" என்கிற தலைப்புடன் பூமியைப் பற்றி ஒரு புஸ்தகமும் கிடைத்தது. அவ்வளவுதான். ஆனால் இவற்றை நான் திரும்பத் திரும்பப் படித்தேன். என் கைவிரல் பட்டுப்பட்டு எழுத்துக்கள் தேயும் அளவுக்குப் படித்தேன். சில சமயம் மிஸ் ஸல்லிவன் எனக்குப் படித்துக் காட்டுவாள். எனக்கு புரியக்கூடிய கதைகளையும் கவிதைகளையும் என் கையில் எழுத்துக் கூட்டுவாள்.

முதல் தடவையாக நான் போஸ்டன் நகருக்குப் போன போதுதான் நிறையவே படிக்கத் தொடங்கினேன் என்று சொல்லலாம். வாசித்ததில் பத்தில் ஒரு பங்குக்கு அதிகமாக எனக்குப் புரியாது. புரியாத வார்த்தைகளைக் கூட வாசித்துவிடுவதில் ஆனந்தம் கொண்டேன் நான். வாசித்ததை எல்லாம் என் பிரக்ஞையில் வைத்துக்கொள்ள நான் முயலவில்லை. ஆனால் என் முயற்சி சிறிதும் இல்லாமலே வாசித்ததில் பெரும் பகுதி என் மனசில் தங்கிவிட்ட மாதிரித்தான் இருக்கிறது. அர்த்தம் புரியாமலே பல வார்த்தைகளையும் வாக்கியங்களையும் நான் மனசில் ஊறப்போட்டு வைத்திருந்தேன். பின் நான் பேசவும் எழுதவும் தொடங்கும்பொழுது இந்த வார்த்தைகள் வாக்கியங்கள் நானும் அறியாமலே எனக்கு உபயோகப்பட்டன; என் நண்பர்கள் என் வார்த்தைச் செல்வம் பற்றி ஆச்சரியப்பட்டார்கள். அந்த நாட்களில் நான் ஒரு புஸ்தகத்தையும் முழுவதும் படித்ததாக ஞாபகம் இல்லை; எங்காவது மத்தியில் ஆரம்பித்து மத்தியில் விட்டுவிடுவேன். புரிந்துகொள்ளாமலே நான் பல கவி

களையும் படித்தேன். நான் புரிந்துகொண்ட முதல் புஸ்தகம் என்று சொல்லக்கூடியது "சின்னப் பிரபு பாண்டில்ராய்"தான்.

ஒரு குழந்தையின் அந்தக் கதையைபடிக்க ஆரம்பித்தது எனக்கு இப்போது நன்கு ஞாபகம் இருக்கிறது. ஆகஸ்டு மாதத்தில் சற்று வெப்பமாக இருந்த ஒரு நாள் மாலையில் படிக்க ஆரம்பித்தேன். வீட்டிலிருந்து சிறிது தூரத்திலிருந்த பைன் மரங்களில் கட்டித் தொங்கிய ஊஞ்சலில் நானும் மிஸ் ஸல்லிவனும் உட்கார்ந்திருந்தோம். சாப்பிட்டுவிட்டு, வீட்டுவேலைகளைச் சற்று அவசரமாகவே செய்து முடித்தோம், புஸ்தகத்தைப் படிக்க நேரம் அதிகம் இருக்கட்டும் என்று. எங்களைச் சுற்றி வெட்டுக் கிளிகள் விர்விர் வென்று பறந்தன. ஊஞ்சலிலும் எங்கள் ஆடைகளிலும் ஒட்டிக்கொண்டிருந்த வெட்டுக் கிளிகளை எடுத்து எறிந்துவிட்டுத்தான் ஊஞ்சலில் உட்காரவேண்டும் என்றாள் உபாத்தியாயினி. வெட்டுக் கிளிகளைத் தவிர ஊஞ்சலில் பைன் ஊசிகளும் விழுந்திருந்தன. அவற்றையும் அப்புறப்படுத்தினோம். சூரிய ஒளியிலும் வெப்பத்திலும் பைன்மர வாசனை வெளிப்பட்டு மூக்கைத் துளைத்தது. கடல் வாசனையும் வீசுவதுபோல இருந்தது. கதையைப் படிக்கத் தொடங்கு முன்னரே பல விஷயங்களை எனக்குப் புரியும்படி விவரமாகச் சொன்னாள் மிஸ் ஸல்லிவன். பல வார்த்தைகள் எனக்குப் புது வார்த்தைகளாக இருந்ததால் வேகமாகப் படிக்க இயலவில்லை. ஆனால் கொஞ்ச நேரத்தில் கதைப் போக்கைக் கொண்டு தனி வார்த்தைகளின் அர்த்தத்தை அனுமானித்துக்கொள்ளத் தொடங்கினேன். அப்படியும் விளக்கம் தேவை என்று எண்ணி மிஸ் ஸல்லிவன் படிப்பை நிறுத்தி நிறுத்திச் செய்த பிரசங்கங்கள் எனக்கு எரிச்சலை ஊட்டின. அலுத்துப்போய்

மிஸ் ஸல்லிவன் என் கையில் எழுதுவதை நிறுத்தினாள். "எனக்குக் கண்ணில்லையே, ஐயோ!" என்று இருந்தது. கதையில் என் ஈடுபாடு அன்று உச்சஸ்தாயியை எட்டியது.

பின்னர் நான் வருந்திக் கேட்டுக்கொண்டதின்பேரில் மிஸ்டர் அனக்னஸ் இந்தக் கதையைக் குருடர்கள் எழுத்தில் செய்து எனக்குத் தந்தார். படித்துப் படித்து அது பூராவுமே எனக்கு மனப்பாடமாகிவிட்டது. சின்னப்பிரபு பாண்டில் ராய் என் நண்பனேயாகிவிட்டான் என்று சொல்லலாம்.

அதுமுதல் புஸ்தகங்களில் எனக்குள்ள உத்ஸாகம் சொல்லமுடியாது. அடுத்த இரண்டு வருஷங்களில் நான் பல நூல்களைப் படித்தேன். எந்த வரிசையில் அவற்றைப் படித்தேன் என்றோ, என்னென்ன நூல்கள் படித்தேன் என்றோ எனக்கு ஞாபகம் இல்லை. ஆனால் அதில் சில நூல்களின் பெயர்கள் ஞாபகம் இருப்பதைச் சொல்கிறேன். "கிரேக்க வீரர்கள்", லா பாண்டேனின் "கதைகள்", ஹாதார்ணின் "அதிசயக் கதைகள்", "பைபிள் கதைகள்", லாம்பின் "ஷேக்ஸ்பியர் கதைகள்", டிக்கன்ஸின் "குழந்தைகளுக்காக இங்கிலாந்து தேச சரித்திரம்", "அரபிக் கதைகள்", "ராபின்ஸனின் ஸ்விஸ் குடும்பம்", "இரக்ஷணிய யாத்திரை", "ராபின்ஸன் க்ரூஸோ", "சின்ன மாதுகள்", "ஹெய்தி" முதலியவை ஞாபகம் இருக்கின்றன. விளையாட்டு நேரத்துக்கும் பாடம் படிக்கும் நேரத்துக்குமிடையிலுள்ள நேரங்களிலெல்லாம் நான் இந்த மாதிரி நூல்களைப் படித்தேன். இவற்றில் எனக்கிருந்த ஆனந்தம் தினத்துக்குத் தினம் அதிகரித்தது. அவை நன்றாக எழுதப்பட்டிருக்கின்றனவா இல்லையா என்று நான் கவலைப்படவில்லை. ஆசிரியரைப்பற்றியோ, ஆசிரியரின் நடையைப் பற்றியோ எனக்குச் சிறிதும் சிந்தனை

கிடையாது. அவற்றில் உள்ள கதை ஐசுவரியத்தை என்னால் அனுபவிக்க முடிந்தது; அனுபவித்தேன்; சூரிய வெளிச்சத்தையும் நண்பர்களையும் அங்கீகரித்து அனுபவித்ததுபோல அங்கீகரித்து அனுபவித்தேன். "சின்ன மாதுகள்" கதை எனக்கு மிகவும் பிடித்திருந்தது; கண்ணால் பார்த்து காதால் கேட்கக்கூடிய சிறுவர் சிறுமியருக்கும் எனக்கும் உள்ள உறவைச் சற்று நெருக்கிக் காட்டியது அது என்று எண்ணினேன் நான். என் உலகத்துக்கு அப்பாற்பட்ட உலகத்துச் செய்திகளை அறிந்து கொள்ள நான் புஸ்தகங்களைத்தான் நம்பவேண்டியதாக இருந்தது.

"இரக்ஷண்ய யாத்திரை" அவ்வளவாக என் மனத்தைக் கவரவில்லை. லா பாண்டென் கதைகளில் ஆழம் போதாது; தன் மதிப்பு, பகுத்தறிவு என்கிற இரண்டு தத்துவங்களையும் தாண்டிச் செல்வதேயில்லை அவன். சுய கௌரவம் காரணமாகத்தான் மனிதனின் குணநிசயங்கள் எழுகின்றன என்பது அவன் கட்சி. கிண்டலாகவோ கேலியாகவோ எழுதுகிற மிருகக் கதைகள் பாதகமில்லை. பெரிய பெரிய உண்மைகள் என்று எண்ணிச் சொல்வதை குரங்குகள், நரிகள் வாயிலாகச் சொல்வது எனக்குப் பிடிக்கவில்லை.

ஆனால் "ஜங்கிள் புக்"கும் "நான் அறிந்த காட்டு மிருகங்கள்" என்ற நூலும் எனக்குப் பிடித்திருக்கின்றன. எனக்கு மிருகங்களைப் பற்றி அறிந்துகொள்வதில் ஆர்வம் இருக்கிறது. மிருகங்களின் காதல்கள் சண்டைகள், அவற்றின் வேடிக்கை விளையாட்டுகள், அவற்றின் சோக நாடகங்கள்எல்லாம் என் மனசுக்குத் திருப்தியளிக்கின்றன.

இயற்கையாகவே எனக்குப் பழமை என்பதில் ஈடுபாடு இருந்தது. பண்டைய கிரேக்க சரித்திரம், என்

மனசை வெகுவாகக் கவர்ந்தது. என் கற்பனையில், கிரேக்கத் தெய்வங்கள் எல்லாம் இன்னமும் பூமியில் நடமாடுகின்றனர். எனக்கு மிக்வும் பிடித்திருந்த சில ருக்கு நான் மானஸீகமாகக் கோயில்கள்கூடக் கட்டினேன். தவறு செய்யவிட்டுவிட்டுப் பிறகு தவறு செய்தவர் களுக்குத் தண்டனை தருவது என்பது சரியான காரிய மாக எனக்குப்படவில்லை. கிரேக்கர் கதைகளில் இந்தப் புதிர் என்னைப் பற்றிய வரையில் இன்னும் விடுபடத்தான் இல்லை: "காலம் எனும் அவருடைய வீட்டிற்குள் புகுந்து பாபம் கறைப்படுத்தும்வரை கடவுள் ஏன் பேசா திருக்கிறார்?"

முக்கியமாக இலியத் காவியம்தான் எனக்கு கிரேக்க நாட்டை ஸ்வர்க்கபூமி யாக்கியது. மூலத்தில் அதைப் படிக்குமுன்னரே டிராய்ப் போரின் கதை எனக்குத் தெரியும். இலக்கணம் சிறிது கற்றுக்கொண்ட பின் ஹோமரை அர்த்தப்படுத்திக்கொள்வது எனக்குச் சிரமமாக இல்லை. உயர்ந்த கவிதை, அது ஆங்கிலத்தில் எழுதப் பட்டதானாலும் சரி, கிரேக்க பாஷையில் எழுதப்பட்டதானா லும் சரிதான்; அதற்கு எதிரொலிதரக்கூடிய உள்ளத் தைத் தவிர வேறு ஒரு சாதனத்தையும் தேடுவதில்லை. அலசிப் பிழிந்து சக்கையைச் சுவைக்கிற வியாக்யான கர்த்தாக்களும் பள்ளி உபாத்தியாயர்களும் இந்த உண்மையை அறிந்துவிட்டார்களானால் நல்லது!

"ஏனியத்" பற்றி எனக்கு இவ்வளவு மதிப்புக் கிடை யாது. ஆனால் அதையும் நான் அனுபவிக்கத்தான் செய் கிறேன். அகராதியையோ, குறிப்புகளையோ புரட்டாமல் அதைப் படித்தேன். எனக்குப் பிடித்த பல பகுதிகளை நானே மொழி பெயர்த்துப்பார்த்திருக்கிறேன். சில சமயம் வர்ஜிலின் வார்த்தை வர்ணனைகள் அற்புதமாக இருக்கின்றன. ஆனால் வர்ஜிலின் கடவுள்களும் மனிதர்

களும் எலிஸபத் காலத்து நாடகங்களில் போல, கோபம் ஆனந்தம் ஹாஸ்யம் எதிலும் அதிக வேகமில்லாமல் அழகாக நகருகிறார்கள். ஆனால் இலியத்தில் அப்படி யில்லை; எது நேர்ந்தாலும் எல்லோரும் நாலு குதி குதித்துப் பாடுகிறார்கள்.

கடிதாசியினால் இறக்கைகள் செய்துகொண்டு பறப்ப தென்பது எவ்வளவு சுலபமான காரியம்! ஒரே நாளில் இந்தக் காரியம் நடந்துவிடவில்லை. வழி நெடுகிலும் இன்பமாக இருந்ததாகக்கூட என்னால் சொல்ல முடியாது. இலக்கண புஸ்தகங்கள், அகராதிகள் போன்ற எவ் வளவோ கடினமான நூல்களை நான் புரட்டிப் பார்த்து விட்டுத்தான் இலியத்தை எட்ட முயன்றது. பரீக்ஷைகள் என்கிற படுகுழிகள் வழிநெடுகக் காத்துக் கிடந்தன. அறிவைத் தேடிவருகிற அப்பாவிகளை அரட்டுவதற்காக ஏற்பட்டவை அவை.

எனக்குப் புரியத் தொடங்குவதற்கு முன்னரே நான் பைபிளையும் வாசிக்கத் தொடங்கிவிட்டேன். அதனுடைய அதிசய இசைகள் என் காதில் விழாதிருந்த காலமும் ஒன்று உண்டு என்று சொல்லிக்கொள்வதற்கே வெட்க மாக இருக்கிறது.

ஆனால் பின்னர் பைபிளில் நான் கண்ட அதிசயங் களை என்ன என்று விவரிப்பது! ஆனந்தமும், அனுபவ மும் பொங்க நான் பல வருஷங்களாக பைபிளைப் படித்து வந்திருக்கிறேன். மற்ற எல்லா நூல்களையும்விட இந்த நூலில் என் ஈடுபாடு நாளுக்குநாள் அதிகரித்து வந்திருக் கிறது என்று சொல்லத்தான் வேண்டும். ஆனாலும் சுபாவத்திலேயே எனக்குப் பிடிக்காத பல விஷயங்கள் பைபிளில் இருக்கின்றன. என் பொறிகள் அதில் சொல் லப்பட்டிருக்கிற பல விஷயங்களை ஏற்க மறுக்கின்றன.

ஆனாலும் நான் ஆரம்ப முதல் முடிவுவரையில் பைபிளைப் பல தடவைகள் படித்திருக்கிறேன். அதன் சரித்திரம், ஆதாரங்கள் எல்லாவற்றையும் நான் படித்து அறிந்து கொண்டிருக்கிறேன். ஆனால் மனதுக்குப் பிடிக்காத பல செய்திகளைக் கேட்கப் பிடிக்காவிட்டாலும், பைபிள் வாசகத்தில் கேட்டுத்தான் தீரவேண்டியதாக இருந்தது. அழகில்லாதது, அநாகரிமானது என்று சொல்லக்கூடிய அம்சங்களை எல்லாம் பழைய இலக்கியத்திலிருந்து அகற்றி விட்டால் நல்லது என்றுதான், நானும், மிஸ்டர் ஹவல்ஸானுடன், நினைக்கிறேன். ஆனால் இப்படிச் செய்தால் பல பெரிய நூல்கள் பாதியாகக் குறைந்துவிடும்; ஆசிரியரின் கற்பனையும் பொய்யாகிவிடும், பலஹீனமடைந்துவிடும்.

பைபிளில் எஸ்தர் பகுதி எளிமையாகவும் பயங்கரமாகவும் இருக்கிறது. அந்தக் கதை சொல்லும் நேர்மை பீதி தருகிறது. தன்னுடைய தீய பிரபுவின்முன் எஸ்தர் நிற்கும் காட்சியைப்போன்ற காட்சி இலக்கியத்தில் வேறு எந்த நூலிலும் இல்லை என்று சொல்லலாம்.

ருத்தின் கதைகூட கிழக்கு நாடுகளின் பாணியில் தான் இருக்கிறது. பாரசீகத்தின் தலைநகரின் வாழ்க்கைக்கும் ருத்தின் கதை சொல்கிற குடியானவர்களின் வாழ்க்கைக்கும் எவ்வளவு வித்தியாசம்? ருத் பக்தியுள்ளவள்; இளகிய மனதுள்ளவள்; அவளிடம் அன்பு பாராட்டாமல் இருக்க முடியாது, அரிவாள்களுடன் அறுவடை செய்து கொண்டு நிற்கும் ஆண்களுக்கு மத்தியில் நிற்கும் அவள் அழியாத சித்திரம்!

எனக்குத் தெரிந்து ஷேக்ஸ்பியரை எனக்குப் பிடிக்காத நாளே இல்லை. எப்போது லாம்பின் ஷேக்ஸ்பியர் கதைகளை நான் படித்தேன் என்பது எனக்கு ஞாபகம் இல்லை. ஒரு குழந்தையின் ஆச்சரியத்துடனும், ஒரு

குழந்தையின் அறிவுடனும் நான் அந்தக் கதைகளைப் படித்து அனுபவித்தேன். என் மனத்தில் வெகுவாகப் பதிந்தது "மாக்பெத்" கதைதான். அந்தக் கதையில் வருகிற சூனியக்காரிகளும் பிசாசுகளும் என்னைக் கனவுலகத்திலும் துரத்தி வந்தனர். கொலை செய்த குத்தீட்டியை என்னால் காண முடிந்தது. மாக்பெத் சீமாட்டியின் மெல்லிய வெண்மையான கையும் எனக்குத் தெரிந்தது. கையிலிருந்த இரத்தக் கறை எனக்கும் உண்மையாக இருந்தது.

பிறகு நான் "ராஜா லியர்" கதையைப் படித்தேன். க்ளஸ்டர் கண்களை அவிக்கும் கட்டம் எனக்கு மிகவும் பயங்கரமாக இருந்தது. என்ன கொடுமை! என்ன கொடூரம்! கோபம் என்னைப் பற்றிக்கொண்டது. மேலே கதையைப் படிக்க என்னால் கைவிரல்களை நகர்த்த முடியவில்லை. ஒரு விநாடி—அது மிக நீண்ட விநாடி—நான் அசையாமல் ஸ்தம்பித்து உட்கார்ந்திருந்தேன்.

சற்றேறக்குறைய ஒரே சமயத்தில்தான் எனக்கு ஷைலக்கும், சாத்தானும் அறிமுகமாகியிருக்க வேண்டும். இந்த இரண்டு உருவங்களும் ஒன்றோடொன்று உறவு கொண்டே என் மனத்தில் தோன்றுகின்றன. அவர்களைப் பற்றி என் மனத்தில் இரக்கம் பிறந்தது என்று ஞாபகம் வருகிறது. அவர்கள் விரும்பினாலுங்கூட அவர்களால் நல்லவர்களாக இருக்க முடியாது என்று தோன்றிற்று. ஏனென்றால் அவர்களை நல்லவர்களாக்க முயல ஒருவரும் தயாராக இல்லை; நல்லது செய்யச் சந்தர்ப்பம் கிடைக்கக் கூட வழியில்லாது செய்தார்கள் மற்றவர்கள். அவர்களை முழுமனத்துடன் வெறுத்து, அவர்கள்தான் குற்றவாளிகள் என்று தீர்மானமாகச் சொல்ல இப்போதும் கூட எனக்கு மனமில்லை.

ஷேக்ஸ்பியர் கதைகளை நான் முதல் முதலாகப் படிக்கும்போது வெறுப்புத் தருகிற உணர்ச்சிகளே மேலோங்கி நின்றதாக எனக்கு ஞாபகம் வருகிறது. பிரகாசமான, மிருதுவான, கற்பனை நிறைந்த நாடகங்கள் முதலில் என் மனசில் பதியவில்லை. குழந்தைப் பருவத்துக்குரிய ஆனந்தத்தையே அவை பிரதிபலிப்பதால் அவை முதலில் எனக்குப் பிடிக்கவில்லையோ? ஆனால் "குழந்தையின் மனத்தைப்போலக் கட்டுப்படுத்த முடியாதது எதுவும் இல்லை; அது எதைப் பிடித்துக்கொள்ளும், எதை விட்டு விடும் என்று நிச்சயமாகச் சொல்ல முடியாது."

ஷேக்ஸ்பியரின் நாடகங்களை நான் பல தடவைகள் படித்திருக்கிறேன். பல பகுதிகள் எனக்குப் பாராமலே தெரியும். ஆனால் எந்த நாடகம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது என்று என்னால் நிச்சயமாகச் சொல்ல முடியவில்லை. என் மனோபாவத்துக்கேற்றமாதிரி அவற்றில் என் ஈடுபாடு மாறுகிறது. நாடகங்களைப்போலவே பாட்டுக்களும் ஸான்னெட்டுகளும் அர்த்தபுஷ்டி யுள்ளவையாகவும், அதிசயமானவையாகவும் எனக்குத் தோன்றுகின்றன. ஆனாலும், ஷேக்ஸ்பியர் நாடகங்களும் கவிதைகளும் எவ்வளவுதான் படித்திருந்தாலும், விமரிசகர்களும் வியாக்கியான கர்த்தாக்களும் சொல்லுகிற அளவுக்கு அவற்றில் அர்த்தங்கள் கண்டுகொண்டிருப்பது அனாவசியம். அனுபவிப்பது தவிர வேறு அர்த்தங் காண முயலுவது அவசியமில்லை என்று நான் தீர்மானித்துக்கொண்டு விட்டேன்.

கவிதைக்கு அடுத்தபடியாக எனக்குச் சரித்திரத்தில் ஈடுபாடு உண்டு. சரித்திர புஸ்தகம் என்று கையில் அகப்பட்டதை எல்லாம் படித்திருக்கிறேன். சுவாரஸ்யமே இல்லாத பாட புஸ்தகம்முதல் க்ரீனுடைய பக்ஷபாத

மற்ற, வர்ணனை மிகுந்த "ஆங்கிலேயர்களின் சரித்திரம்" வரையில் படித்திருக்கிறேன். என்னுடைய பதிமூன்று வது பிறந்த தினத்தன்று எனக்கு அளிக்கப்பட்ட ஸ்விண் டனின் "உலக சரித்திரம்" என்ற புஸ்தகம்தான் என்னைச் சரித்திரத்தில் ஆவலுடன் ஈடுபடச் செய்தது. அந்த நூல் சரியல்ல என்று இப்போது சொல்கிறார்கள்; மனித ஜாதிகள் எங்கிருந்து எங்கு சென்றன, நகரங்களை எப்படிக் கட்டின, எப்படிச் சில அமானுஷ்யமான வீரர்கள் உலகை அடக்கி ஆண்டார்கள், எப்படி ஒரு வார்த்தையினால் புதுவழிகளை உண்டாக்கி லக்ஷக்கணக்கானவர்களை உய்வித் தார்கள், லக்ஷக்கணக்கில் ஜனங்களை அழித்தார்கள், கலை யிலும் அறிவு முயற்சியிலும் எந்தெந்த தேசங்கள் எந்தெந்த வழிகளில் பாடுபட்டன, இன்றைய வளர்ச்சி யைச் சாத்தியமாக்கியது யார் யார், எப்படி முதிர்ந்த ஒரு நாகரிகம் அஸ்தமித்தது, அதன் பாழிட்ட ஸ்தானத்திலே எப்படிப் புது நாகரிகங்கள் தோன்றின, எப்படிச் சுதந் திரம், பொறுமை, கல்வி என்கிற தத்துவங்கள் மனிதரை உயர்த்தியது என்று அந்தப் புஸ்தகத்தைப் படித்து நான் அறிந்துகொண்டேன்.

காலேஜ் படிப்பிலே எனக்கு ஜெர்மன், பிரெஞ்சு இலக் கியங்கள் சுமாராகப் பரிசயமாயின. வாழ்க்கையிலும் இலக்கியத்திலும் ஜெர்மானியன் அழகுக்கும் மேலான தாகப் பலத்தைப் போற்றுகிறான்; வழக்கம் என்பதற்கு மேலாக உண்மையைப் போற்றுகிறான். ஜெர்மானியனின் எழுத்திலே வேகமும், சம்மட்டி கொண்டு அடிப்பது போன்ற ஒரு தன்மையும் காணக்கிடக்கின்றன. பிறர் போற்றவேண்டுமென்று அவன் பேசுவதில்லை; உள்ளத்தை எரிக்கிற உண்மைகளை வெளியிடவேண்டும் என்கிற ஒரு சக்தி அவனைத் தூண்டுகிறது.

பிரெஞ்சு ஆசிரியர்களில் எனக்கு மிகவும் பிடித்தவர்கள் மோலியரும், ரஸீனும்தான். பால்ஸாக்கில் நேர்த்தியான விஷயங்கள் இருக்கின்றன. கடற் காற்றுப் போலச் சுள்ளென்று மேலே அடிக்கின்றன மெரிமியின் சில வாக்கியங்கள். விக்டர் ஹ்யூகோவையும் எனக்குப் பிடிக்கும். ஹ்யூகோ, ஷில்லர், கீதே போன்ற பெரிய கவிகள் மனித வாழ்க்கையில் நித்திய மானதை, அழிவில்லாததை எடுத்துக் கையாளுபவர்கள்.

பலம் பொருந்திய கார்லைலுக்கு வேஷம் எதுவும் பிடிக்காது என்பதால் எனக்குப் பிடித்திருக்கிறது. இயற்கையோடு ஒட்டி வாழ்பவனே மனிதன் என்று சொல்கிற வோர்ட்ஸ்வொர்த்தை எனக்குப் பிடித்திருக்கிறது. ஹூட்டின் வேடிக்கையான கோமாளித்தனங்கள் எனக்குப் பிடித்திருக்கின்றன. ஹெர்ரிக்கின் கவிதைகளில் ரோஜாவும் அல்லியும் மணக்கின்றன என்பதனால் அவை எனக்குப் பிடித்திருக்கின்றன. விட்டியரின் உத்ஸாகங்களும் அவருடைய நேர்மையான குணங்களும் எனக்குப் பிடித்திருக்கின்றன. எனக்கு அவரை நேரிலே தெரியும்; அதனால் அவர் கவிதைகளை நான் வெகுவாக அனுபவிக்கிறேன். மார்க் ட்வெயினையும் எனக்குப் பிடிக்கும்; யாருக்குப் பிடிக்காது மார்க் ட்வெயினை? அவன் உள்ளத்திலே எல்லா விதமான அறிவுகளையும் வைத்தார்கள் தெய்வங்கள்; கசப்புத் தோன்றி அறிவைப் பாழாக்கிவிடப்போகிறதே என்று, நம்பிக்கை, அன்பு என்கிற ஆதார வர்ணங்களினால் ஆன ஒரு வானவில்லையும் அமைத்தார்கள். புதுமையும் வேகமும் வெளிப்படையான நாணயமும் உள்ளவன் ஸ்காட் என்பதற்காக எனக்கு அவனையும் பிடிக்கும். நம்பிக்கை என்கிற குமிழி விடுகிற எல்லா ஆசிரியர்களையும் எனக்கும் பிடிக்கும். அன்பு, இன்பம், நல்லெண்ணம் என்பவற்றின்

ஊற்றுக்கள் இந்த ஆசிரியர்கள்; சில சமயம் அவர்கள் எழுத்திலே கோபம் தொனிக்கும்; உரிய இடங்களில் அன்பும் தொனிக்கும்.

ஒரு வார்த்தையில் சொல்லப்போனால் என் லக்ஷ்யபூமி இலக்கியம்தான். அங்கு எனக்குச் சகல உரிமைகளும் உண்டு. ஐம்பொறிகளில் எப்பொறி இல்லாததாலும் என் ஆனந்தம் அங்கு பாதிக்கப்படுவதில்லை. என் ஆசிரியர்களின் இன்பமான ஆத்மார்த்தமான சம்பாஷணையை நான் பூரணமாக அனுபவிக்கலாம். தயக்கமோ, தடுமாற்றமோ இல்லாமல் என் புஸ்தக நண்பர்கள் என்னை அங்கீகரிக்கின்றனர். "பரந்த அன்பு; வானம்போல விரிந்த தருமம்" என்பது புஸ்தகங்களின் தன்மை. மற்றப்படி நான் கற்றுக்கொண்டதோ உணர்ந்துகொண்டதோ எல்லாம் இந்த உண்மைக் கெதிரில் ஒளியிழந்து, கேவலமாகி, முக்கியத்துவம் இழந்துவிடுகின்றன.

## 22

புஸ்தகங்கள் மட்டும்தான் என் நண்பர்கள் என்றோ, எனக்கு ஆனந்தமளித்து பொழுது போக்குச் சாதனமாக உபயோகப்படுபவை வேறு எதுவுமே இல்லையென்றோ முந்திய அத்தியாயத்தைப் படித்துவிட்டு என் வாசகர்கள் முடிவு கட்டிவிடக்கூடாது. வேறு பலவற்றிலும் எனக்கு ஈடுபாடு உண்டு.

இயற்கையைப் பற்றியும், வெளியே உலாவுவதில் எனக்கு ஏற்படுகிற இன்பம் பற்றியும் நான் இதுவரை பல இடங்களில் எழுதிவிட்டேன். சிறுமியாக இருக்கும் போதே படகு தள்ளவும் நீந்தவும் கற்றுக்கொண்டு

விட்டேன் நான். கோடை நாட்களில் ரெந்தாம் (மஸாசு ஸெட்ஸ்) நகரில் இருக்கும்போது நான் அநேகமாக என் படகிலேயே வசிப்பது வழக்கம். படகில் என் நண்பர்களை தள்ளிச் செல்வது எனக்கு இன்பம்தரும் பொழுதுபோக்கு களில் ஒன்று. என்னுல் தனியாகப் படகை நேர் வழியில் செலுத்த முடியாது; யாராவது முன்னுல் உட்கார்ந்து எனக்குக் கண்ணுக உதவவேண்டும். மாற்றும் கருவிகூட இல்லாமல் காற்று அலை இவற்றுடன் போராடி வெற்றி பெற எனக்குப் பிடிக்கும்.

காேனு செலுத்துவதிலும் எனக்கு ஆர்வமுண்டு. நிலவு காய்கிற காலத்திலே எனக்குக் காேனு செலுத்துவது மிகவும் பிரியமான காரியம் என்ருல் உங்களுக்குச் சிரிப்பு வந்தாலும் வரலாம். நிலவு பைன் மரங்களில் ஏறி வானத்தின் உச்சிக்கு வருவதை நான் காணமுடியாது என்பது உண்மையே. நிலவு நீர்ப் பரப்பில் பட்டுப் பிரதிபலிப்பதும் என் கண்ணில் படாதுதான். ஆனுல் நிறைமதி வானிலே இருப்பது எனக்குத் தெரியும். தலைகணிகளில் சாய்ந்துகொண்டு ஜலத்தில் கையை விட்டுத் துழாவுவேன்; நிலவின் அழகான ஆடைகளைத் தொடுவதுபோல எனக்குத் தோன்றும். சில சமயம் தைரியமுள்ள ஒரு மீன் என் கைவிரல்களுக்கிடையில் புகுந்து நீந்தும்; சில சமயம் ஒரு அல்லி மொட்டு என் கையை முத்தமிடும்.

பாய்கள் விரித்துக் கடலில் மிதப்பதும் எனக்குப் பிடித்தமான பொழுதுபோக்குத்தான். 1901-ல் கோடையில் நான் நேவாஸ்கோஷியாவுக்குச் சென்றிருந்தேன். அது வரை எனக்குக் கிடைக்காத மாதிரியில் கடலை அறிந்து கொள்ள எனக்கு அங்கு சந்தர்ப்பங்கள் கிடைத்தன. லாங்பெல்லோவின் அழகிய கவிதை நித்தியமாக்கிவிட்ட எவான்ஜலின் பிரதேசத்தில் சிலநாள் தங்கினேம். பிறகு

ஹாலிபாக்ஸுக்குப் போய் அங்கு கோடை நாட்கள் பூராவையும் கழித்தோம். கடலும் துறைமுகமும்தான் எனக்கும் மிஸ் ஸல்லிவனுக்கும் ஸ்வர்க்கம். சுற்றுவட்டத்திலுள்ள எல்லாத் தீவுகளுக்கும் பாய் விரித்துப் படகில் சென்று ஆனந்தித்தோம்.

ஒருநாள் மயிர்கூச்செரியும் சம்பவம் ஒன்று நடந்தது. ஒரு படகுப் போட்டி பார்க்க நாங்கள் பாய்ப்படகில் போனோம். எங்கள் பாய்ப்படகைப் போன்ற நூற்றுக் கணக்கான பாய்ப்படகுகள் கடலிலே நெருக்கமாக மிதந்தன. கடல் வெகு அமைதியாக இருந்தது. போட்டிகள் முடிந்து நாங்கள் கரைக்குத் திரும்ப யத்தனிக்கும் போது, வானத்திலே கருமேகம் ஒன்று தோன்றியது. சிறிது நேரத்திற்குள்ளாகவே அந்தச் சிறு கருமேகம் வானம் பூராவுமே வியாபித்து விட்டது. காற்று விசிறி விசிறிச் சுழன்றது. அலைகள் பேரிரைச்சலுடன் ஒன்றோடொன்று மோதின. கண்ணுக்குத் தெரியாத சுவர்களைக் கடந்துசெல்ல முயல்வதுபோல அலைகள் வந்து வந்து மோதி ஓய்ந்தன. எங்களுடைய சிறிய படகு பயமின்றியே கடலையும் காற்றையும் எதிர்த்தது. பாய்கள் விரித்து, கயிறு இறுக, காற்றிலே மிதப்பதுபோல மிதந்து சென்றது. சுழலும் அலையிலே படகும் சுழன்றது. கோபித்து. எழுந்த அலைகள்மேல் எழும்பி, அடங்கிய அலைகளுடன் தணிந்து சென்றது படகு. பெரிய பாயைச் சுருட்டி விட்டோம். பாய்களையும் கயிறுகளையும் சரிப்படுத்தி மாற்றிக்கொண்டே காற்றின் கோபத்துக்கு வளைந்து கொடுத்தபடியே முன்னேறினோம். பயம் தோன்றவில்லை; எங்கள் இதயங்கள் வேகமாக அடித்துக்கொண்டன. வைகிங்குகளின் தைரியமும் அனுபவமும் எங்களுக்கு உதவி செய்தன. எங்கள் படகைச் செலுத்திய தலைவன் தன்

தொழிலில் மேதாவி; எத்தனையோ புயல்களில் மோதிச் சமாளித்தவன் அவன். பெரிய கப்பல்களும், ஸ்டீம் போட்டுகளும், போர்க் கப்பல்களும் எங்களுடைய சிறிய பாய்ப்படகைத் தாண்டும்போது "ஸலூட்" செய்தன, எங்களுடைய தைரியத்தையும் திறமையையும் மெச்சுகிற மாதிரி. அந்தப் புயலிலும் சமாளித்துக்கொண்டு வேறு உதவி நாடாமல் போய்க்கொண்டிருந்தது எங்கள் படகு ஒன்றுதான். அலுத்துப்போய், பசியுடன், குளிர் நடுக்க, நாங்கள் வெகு நேரம் கழித்துத் துறைமுகத்தை அடைந்தோம்.

போன கோடையை நான் ந்யூ இங்கிலாந்தில் உள்ள மிகவும் அழகான கிராமத்தில் மிகவும் அழகான மூலையில் கழித்தேன். ரெந்தாமில் பல வருஷங்கள் "சிவப்புப் பண்ணை" யில் ஜே. யி. சேம்பர்லினுடனும் அவருடைய குடும்பத்தினருடனும் நான் வசித்திருக்கிறேன். இந்த நண்பர்களை நான் நன்றியுடன் நினைக்கிறேன். அவர்களுடன் நான் செலவிட்ட நாட்கள் இன்பமயமானவை. அவர்களுடைய குழந்தைகளுடன் நானும் ஒரு குழந்தையாக விளையாடினேன். சிறுவர் சிறுமியரின் மழலைப் பேச்சுகளும், நான் சொன்ன கதைகளில் அவர்களுக்கேற்பட்ட ஆனந்தமும் மறக்கமுடியாத அனுபவங்கள். மரம், காட்டு மலர்கள் இவற்றின் ரகசியங்களை எனக்கு மிஸ்டர் சேம்பர்லேன் சொல்லித்தந்தார். ஓக் மரத்தின்மேல் அன்புக் காது வைத்து அதில் உயிர்ச்சத்து ஏறுகிற வேகத்தை நான் அறிந்துகொள்வேன். மரத்தின் இலைகளிலே சூரிய ஒளி பட்டுப் பிரகாசிப்பதை அன்பின் கண்கொண்டு காண்பேன் நான். "இருண்ட பூமியிலே புதைபட்டிருக்கும் வேர்களும் கூட மரத்தின் உச்சியிலுள்ள ஒளியிலும் காற்றிலும் இன்பத்திலும் பங்கு கொள்ளுகின்றன. ஒளியும், காற்றும், பறக்கும் பறவைகளும், வேர்களுக்குப் புதிய அனுபவமல்ல."

மனித குலத்தின் ஆரம்ப நாட்களிலிருந்து மனிதன் அனுபவித்திருக்கிற எல்லா அனுபவங்களையும், உணர்ச்சி வேகங்களையும், அவசரங்களையும் அறிந்து அனுபவித்து உணர ஒவ்வொரு தனி மனிதனுக்கும் சக்தி இருப்பதாகத்தான் எனக்குத் தோன்றுகிறது. பச்சையான பூமியும், முணுமுணுத்தோடும் அருவியும், பிரக்ஞைக்கு அப்பாற்பட்ட ஒரு நினைவில் எல்லோர் மனசிலும் இருக்கின்றன. கண்ணில்லாததோ, காது கேளாததோ இந்த நினைவு என்கிற ஐசுவரியத்தை அபகரித்துவிட முடியாது. ஆறுவது பொறி என்றும், பரம்பரையாக வருகிற மறைந்து கிடக்கும் ஒரு உயர்வு என்றும் இதைச் சொல்லலாம்.

ரெந்தாமில் எனக்குப் பல மர நண்பர்கள் இருக்கிறார்கள். அவற்றில் ஒன்று, பிரம்மாண்டமான ஒரு ஓக் மரம் என் உள்ளத்தை வெகுவாகக் கவர்ந்தது. அதற்கு ஆயிரம் வயசு ஆகியிருந்தாலும்கூட ஆச்சரியப்படுவதற்கில்லை.

இந்தப் பெரிய ஓக் மரத்தைவிடச் சற்றுத் தாழ்ந்த ஒரு மர நண்பனும் எனக்கு உண்டு. அது ஒரு லிண்டன் மரம்; சிவப்புப் பண்ணையின் வாசற்கதவைத் தொட்டாற்போல வளர்ந்திருந்தது. ஒருநாள் மாலை புயலின் கடுமை தாங்காமல் இந்த மரம் வீட்டின்மேல் சாய்ந்துவிட்டது. எத்தனையோ புயல்களைச் சமாளித்த வீரன்தான் அது. ஆனால் விழுகையிலும் தன் பலத்தைக் காட்டிக்கொண்டு விழுந்தது அது.

பரீக்ஷைகள் முடிந்ததும் ரெந்தாமின் பிரசித்தி பெற்ற மூன்று ஏரிகளில் ஒன்றின் கரையில் இருந்த எங்கள் குடிசைக்கு விரைந்தோம். சப்தம் நிறைந்த நகரையும், பரீக்ஷைகளையும், பாடங்களையும் மறந்துவிட்டு, நாளில்

உள்ள நாழிகைகள் எல்லாம் பூரணமாக என்னுடையதே என்கிற சிந்தனையுடன் காலங் கடத்தினேன். வெளி உலகில் நடந்த அக்கப்போர்கள் எங்களுக்கு எட்டின. போர், சமாதானம், சமூகப் போராட்டம் இவைபற்றிய செய்திகள் எங்களையும் எட்டின. எட்டாத் தொலைவிலிருந்த பசிபிக் மஹா யுத்தத்தில் நடந்த அர்த்தமற்ற யுத்தம் பற்றிக் கேள்விப்பட்டோம். முதலாளி, தொழிலாளிகளுக்கிடையே நடக்கும் வர்க்கப் போராட்டம்பற்றியும் கேள்விப்பட்டோம். நெற்றியில் வியர்வை அரும்ப எங்களுடைய ஸ்வர்க்கத்திற் கப்பாற்பட்ட பிரதேசத்தில் மனிதர்கள் சரித்திரம் செய்து கொண்டிருந்தார்கள். அவர்கள் விடுமுறை எடுத்துக் கொண்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். அநித்திய மானவை இவை. ரெந்தாமில் எங்கள் குடிசையைச் சுற்றி, அழியாத உண்மைகளான ஏரிகளும், வனங்களும், பரந்த மலர் நிறைந்த வயல் வெளிகளும், வாசனை வீசும் புல் தரைகளும் இருந்தன.

கண்ணோ காதோ அற்ற நான், நகரத்துத் தெருக் களுக்கும் நாட்டுப்புறத்துப் பாதைகளுக்கும் இடையில் உள்ள வித்தியாசத்தை எப்படி அறிய முடியும் என்று ஜனங்கள் ஆச்சரியப்படுகிறார்கள். ஆனால் என் சுற்றுப் புறத்தை என் உடல் பூராவுமே அறிகிறது என்பதை அவர்கள் மறந்து விடுகிறார்கள். என் முகத்திலுள்ள நரம்புகளைப் பாதிக்கின்றன நகரத்தின் சப்தமும், கூட்ட மும். நகரத்தவர்களின் அவசர நடையும் ஓட்டமும் எனக் குத் தெளிவாகவே தெரிகிறது; அவர்கள் எழுப்பும் அர்த்தமற்ற அவசரக் குரல்கள் என் உள்ளத்தை அலட்டு கின்றன; பார வண்டிகள் நகரில் ஓடுவது தெரிகிறது எனக்கு. நகரத்திலுள்ள யந்திரங்களின் ஓயாத வேலை வேகம் என் ஆத்மாவை வெகுவாகப் பாதிக்கிறது.

நாட்டுப் புறத்திலோ இயற்கை என்பதைத் தவிர வேறு எதுவும் கிடையாது. அன்றாட வாழ்க்கை வாழ்வதற்காக மனிதன் சகோதர மனிதனுடன் நகரில் நடத்தும் போராட்டம் நாட்டுப்புறம்வரை எட்டுவதில்லை. எத்தனையோ சந்தர்ப்பங்களில் நகரில் ஏழைகள் வசிக்கும் பகுதிகளில் நான் நடமாடியிருக்கிறேன். இப்படி அவலமான நிலையில் தங்கள் சகோதரர்களை வாழவிடுகிற பணக்கார, சொத்துள்ள மனிதர்களை மனிதர்கள் என்று சொல்வதே தகாது என்று எனக்குத் தோன்றும். வெளிச்சமோ காற்றோ இல்லாதவீடுகளில், அழகில்லாத சுற்றுப்புறத்தில் வாழ்ந்து மனிதத் தன்மைக்கே ஆதாரமான அழகுணர்ச்சியை இழந்து விடும் ஏழைகளை எண்ணும்போது எனக்கு ஆத்திரம் பற்றிக்கொள்ளும். அரை நிர்வாணமாக, அரைப்பட்டினி கிடந்துகொண்டு, இந்தப் பகுதிகளில் உள்ள குழந்தைகள் நீ கையை நீட்டினால் அடிதான் கிடைக்கும் என்று எதிர்பார்ப்பதுபோலப் பயந்து ஒதுங்குகிறார்கள். பாவம்! வாழ்க்கை என்கிற அவர்களுடைய போராட்டம் முடிவற்றது, நிரந்தரமானது. போராட அவர்களுக்குத் தெம்பு ஏது? ஏதாவது செய்ய வேண்டுமே என்று செய்கிற, நம்பிக்கையேயற்ற ஒரு காரியம் அது. பலமில்லாதவன் மெலிந்த கையையும் காலையும் ஆட்டினால் அதைச் சண்டை என்று சொல்ல முடியுமா? எல்லோருக்கும் கடவுள் தந்திருக்கும் பொதுச் சொத்து காற்றும், ஒளியும் என்று நாம் சொல்கிறோமே, அது நிஜந்தானா? பணக்காரனுக்குக் கிடைக்கிற காற்றும் ஒளியும் ஏழைக்குக் கிடைக்கின்றனவா? நகரில் ஏழைகள் வசிக்கும் பகுதிகளிலே சூரியன் பிரகாசிப்பதில்லை; காற்றும் அடிப்பதில்லை.

உன் சகோதரனுக்கு உண்ண உணவு கிடையாது என்று அறிந்திருந்தும் நீ கடவுளை "என் உணவை இன்று

கொடு'' என்று பிரார்த்திக்கிறுபே: அது மனிதத்தன்மை தானு? மனிதன் நகரத்தின் ஆர்ப்பாட்டத்தையும், அதன் குழப்பத்தையும், அதன் பொன்னேயும் திரஸ்கரித்துவிட்டு, வயலுக்கும், வனத்துக்கும் எளிய தூய்மையான வாழ்க்கைக்கும் திரும்பிவிட்டாஞுல் அவனுக்கு நல்லது. மனிதக் குழந்தைகள் எல்லாம் நிமிர்ந்து நேர்த்தியான மரங்கள்போல வளரும்; அவர்களுடைய சிந்தனேகளும் பேச்சும் பாதை ஓரத்திலேயுள்ள காட்டு மலர்கள்போல இனிமையும் அழகும் பெறும்.

நடப்பேன். நடைக்கு அடுத்தபடியாக எனக்கு இன்பம் தந்தது என் சைகிளில் சவாரி செய்வது. இரும்புக் குதிரை ஏறி, காற்று என் முகத்திலே வீச, சைகிள் விடுவது மிகவும் ஆனந்தமான ஒரு அனுபவம்.

படகில் போனுலும், நடந்து போனுலும், ரெயிலில் போனுலும் என் நாயும் என்னுடன் வருகிறது. எனக்கு நாய் நண்பர்கள் பலர் இருந்திருக்கிருர்கள். பெரிய நாய்கள், வேட்டை நாய்கள், நரிபோன்ற நாய்கள், சிறிய நாய்கள், இப்படி எத்தனேயோ! இப்பொழுது எனக்குப் பிடித்தமான நாய் நண்பன் ஒரு புல் டெர்ரியர்; ஜாதி நாய் அது. வளேந்த வாலும், வேடிக்கையான முகமும் படைத்த நாய் அது. என் நாய் நண்பர்களுக்கு என் குணுதிசயங்களும், குறைபாடுகளும் நன்கு தெரிந்திருப்பதுபோலத் தோன்றும் எனக்கு. நான் தனியாக இருந்தால் அவை என்னே விட்டு நகரா.

மழை நாட்களில் நான் மற்றப் பெண்களேப்போல வீட்டுக்குள் உட்கார்ந்து நூல் தைப்பேன்; பூநூல் வேலே செய்வேன்; சில சமயம் ஏதாவதொரு புஸ்தகத்தை எடுத்து வாசிப்பேன். அதை வைத்துவிட்டு வேறு ஒரு

புஸ்தகத்தை எடுத்துப் புரட்டுவேன்; சில சமயம் செக்கர்ஸ் அல்லது சதுரங்கம் ஆடுவேன். எனக்காக செக்கர், சது ரங்கப் பலகை பிரத்தியேகமாகச் செய்யச் சொல்லி யிருந் தேன். பலகையில் சதுரங்கள் பள்ளமாக இருக்கின்றன. அவற்றில் காய்கள் பொருந்தி நிமிர்ந்துநிற்கும். கருப்புச் செக்கர் காய்கள் தட்டையாகவும், வெள்ளைக் காய்கள் மேலே வளைந்தும் இருக்கும்; தொட்டு அவற்றை நான் அறிந்துகொள்ள முடியும். ராஜாவுக்கும் மற்ற காய்களுக்கும் உள்ள வித்தியாசத்தைக் காட்டுவதற்காகப் பித்தளை ஆணிகள் அடித்திருக்கும் காய்களில். சதுரங்கக் காய்களும் எனக்காகப் பிரத்தியேகமாகச் செய்யப்பட்டவை தான்.

தனியாக இருந்தால் சீட்டுக்கட்டை எடுத்து ஸொலி டேர் ஆடுவேன். ப்ரெய்ல் எழுத்துக்கள் எழுதிய சீட்டு களை நான் உபயோகித்தேன்.

குழந்தைகள் யாராவது உடன் இருந்தால் அவர்க ளுடன் சரிசமானமாக விளையாடிக் களிப்பதுதான் எனக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்கு. மிகச் சின்னக் குழந்தையாக இருந்தாலும் எனக்குப் போதும். குழந்தை களும் என்னிடம் சுலபமாக ஒட்டிக்கொண்டு விடுகின்றன.

பொருட்காட்சிச் சாலைகள், கலைக்கூடங்கள் இவற்றிற் கும் நான் போவதுண்டு. குளிர்ந்த சலவைக்கல்லில் கண் பார்க்காமல் கையால் மட்டும் அசைவு, அழகு, அர்த்தம் எல்லாம் கண்டுகொண்டுவிட முடியும் என்றால். கலைப் பொருட்களையும், பெரிய பெரிய சித்திரங்களையும் சிற்பங் களையும் நான் என் கைகளால் தொட்டே சரிவர அறிந்து கொண்டு விடுவேன். கோட்டையும், கோணலையும், வளைவையும், நேர்மையையும் கைவிரல்களால் தொடர்ந்து நான் கலைஞனின் சிந்தனையையும் உணர்ச்சியையும் தெள்

ளென அறிந்துகொண்டு விடுவேன். கடவுளர்கள், வீரர்கள் இவர்களின் சிலைகளின் முகங்களைத் தொட்டுப் பார்த்து சுலபமாகவே முகபாவங்களை அறிந்துகொள்கிறேன், கலைஞன் எதைச் சிருஷ்டிக்க முயன்றிருக்கிருன், கோபத்தையா, வெறுப்பையா, தனிமையா, தைரியத்தையா என்று அறிந்துகொள்வேன். உயிருள்ளவர்களின் முகங்களைத் தொட்டுப் பார்த்துத் தெரிந்துகொள்கிற மாதிரியேதான் இதுவும். டையானுவின் உருவத்திலே, காட்டின் சுதந்திரத்தையும் அழகையும் காண்கிறேன்; மலைச்சிங்கத்தை அடக்கும் வீரத்தையும், ஆணவங்களையும் ஆங்காரங்களையும் அடக்கும் அழுத்தத்தையும் காண்கிறேன். வீனஸின் அழகும், வளைவுகளும், அமைதியும் எனக்கு இன்பமூட்டுகின்றன. பாரேயின் வெண்கலச் சிலைகளில் வனங்களின் ரகசியங்கள் பல எனக்குத் தெளிவாகின்றன.

ஹோமரின் உருவ மெடல் ஒன்று என் அறையில் என் கைக்கு எட்டும்படியான உயரத்தில் தொங்குகிறது. அழகும், அமைதியும், துயரமும் நிறைந்த அந்த முகத்தைப் பணிவுடன், அன்புடன் நான் அடிக்கடி தொட்டுப் பார்ப்பதுண்டு. கம்பீரமான அந்த நெற்றியின் ஒவ்வொரு கோடும் எனக்கு மிகமிகப் பரிசயமானதுதான்; வாழ்க்கை சென்ற பாதைகள் அவை. பார்வையற்ற அந்தக் கண்கள், அந்த உயிரற்ற பிளாஸ்டரிலும், எதையோ தேடுகின்றன. ஹெல்லாஸின் நீலவானத்தையும், படரும் ஒளியையும் தேடுகின்ற அந்த மூடிய கண்கள். தவிர ஒளியைத் தேடுவதென்பது வியர்த்தமான காரியம்தான். ஹோமரின் வாயில்தான் என்ன வேகமும், உண்மையும், இரக்க பாவமும், அழுத்தமும் கலந்திருக்கின்றன! கவியின் முகம் அது; மனிதகுலத்தின் துயரங்கள் பூராவையும் அறிந்தவனின் முகம் அது.

அவன் வாழ்ந்தது ஒரு முடிவில்லாத இரவில். "இருட்டு, இருட்டு, நண்பகலிலே ஒளி பெருகியும், அவனுக்கு இருட்டுத்தான். தப்ப முடியாத இருட்டு. பூர்ணமான இருட்டு. பகல் என்கிற நம்பிக்கைக்கே இடமில்லாத இருட்டு."

சிற்பங்களைப் "பார்ப்பதற்கு"க் கண்களை விடக் கைகள்தான் சக்தி பெற்றவை என்று சில சமயம் நான் நினைப்பதுண்டு. வேகத்துக்கும் பாவத்துக்கும் இடையே ஓடும் வளைவுகளைத் தொட்டுப் பார்ப்பதே சிலாக்கியமான வழி என்று நான் நினைக்கிறேன். கண்ணால் குத்து மதிப்பாக உணரலாம். கையால் பரிபூர்ணமாக எல்லாக் கோடுகளையும், வளைவுகளையும் அறிந்துவிட முடியும்.

நாடகசாலைக்குப் போய் நாடகம் பார்ப்பதும் எனக்கு ஆனந்தமளித்தது. ஆனால் இது அடிக்கடி நிகழாத அனுபவம். நாடகங்களைப் படிப்பதைவிட, நடிக்கும்போது மேடையில் என்ன நடக்கிறது என்று உடனிருப்பவர் சொல்லி வந்தால் எனக்கு ரசம் அதிகப்படுகிறது. அற்புதமான சம்பவங்களின் மத்தியில் அகப்பட்டுக் கொண்டவள்போல நான் இன்புறுகிறேன். சில பெரிய நேர்த்தியான நடிகர்களையும் நடிகைகளையும் நேருக்குநேர் சந்திக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. மிஸ் எல்லன் டெர்ரியின் முகத்தையும் ஆடையையும் நான் தொட்டுப் பார்த்திருக்கிறேன். நம்முடைய லக்ஷ்ய ராணி வேஷம் போட்டு அவள் நடிக்கும்போது தொட்டுப் பார்த்திருக்கிறேன்; சிந்தனைக்கெட்டாத சோகத்தை எட்டி வெளிகாட்டும் ஒரு தெய்விகம் அவளிடம் இருப்பதுபோல எனக்குத் தோன்றியது. அவள் பக்கத்தில், அரசனுக்குரிய சின்னங்களை அணிந்துகொண்டு ஸர் ஹென்ரி இர்விங் நின்றார். அறிவின் எல்லைகளை எட்டிய ஒரு கம்பீரம் இருந்தது அவருடைய ஒவ்வொரு அசைவிலும், ஒவ்வொரு வார்த்தை

யிலுமே. பிறரை அடக்கி ஆளும் அரசனின் தன்மை அவர் முகத்திலே தெளிவாகத் தெரியக்கிடந்தது.

மிஸ்டர் ஜெப்பர்ஸனையும் தெரியும் எனக்கு. என் நண்பர்களில் ஒருவர் அவர் என்று நான் பெருமையுடன் சொல்லிக்கொள்கிறேன். நான் ந்யூ யார்க்கில் பள்ளிக் கூடத்திலிருக்கும்போது முதல் தடவையாக அவர் நடிப்பதைப் பார்த்தேன். "ரிப் வான் விங்கில்" கதையை நாடகமாக நடத்தினர். நான் அந்தக் கதையை அடிக்கடி படித்திருந்தேன். ஆனல் ரிப்பின் அவசரப்படாத, வேடிக்கையான, இரக்கமான வழிகளை நாடகத்தின்மூலம் அறிந்துகொண்டதுபோலக் கதையைப் படித்து என்னல் அறிந்துகொள்ள இயலவில்லை. மிஸ்டர் ஜெப்பர்ஸனின் பரிதாபமான, அழகான நடிப்பு என்னைப் பரவசப்படுத்தியது ரிப்பின் உருவமும் நடையும் பாவனைகளும் என் கையில் பதிந்துவிட்டன நாடகம்முடிந்ததும் என்னை மிஸ் ஸல்லிவன் அவரைப் பார்க்க மேடைக்குப் பின்னல் அழைத்துச் சென்ருள். அவருடைய விசித்திரமான உடையையும் நீண்ட தாடியையும், தலைமயிரையும் ஆவலுடன் தொட்டுப் பார்த்தேன். அவர் முகத்தைத் தொட்டுப் பார்க்கவும் மிஸ்டர் ஜெப்பர்ஸன் என்னை அனுமதித்தார். இருபது வருஷம் தூங்கிவிட்டு ஒரு நாள் திடீரென்று விழித்துக்கொண்ட ரிப்பின் முகம் எப்படி இருந்தது என்று நான் தொட்டுப் பார்த்து அறிந்துகொண்டேன். பாவம்! கிழட்டு ரிப் எழுந்து எப்படித் தள்ளாடித் தடுமாறினன் என்றும் எனக்காக நடித்துக் காட்டினர் மிஸ்டர் ஜெப்பர்ஸன்.

நான் முதல் தடவையாக நாடகம் பார்க்கப்போனது எனக்கு ஞாபகம் இருக்கிறது. அது பன்னிரண்டு வருஷங்களுக்குமுன் நடந்தவிஷயம். குழந்தை நடிகை, எல்ஸி லெஸ்லி, போஸ்டன் நகருக்கு வந்திருந்தாள். "ராஜகுமாரனும்

ஏழையும்" என்ற கதையில் அவள் நடிப்பதைப் காண மிஸ் ஸல்லிவன் என்னை அழைத்துப் போனாள். சந்தோஷமும் துக்கமும் அலை அலையாக மாறி மாறி வந்து எங்களை இன்பசாகரத்தில் அழுந்தச்செய்தன. என்ன அற்புதமான நடிப்பு அந்தச் சிறுமியினுடையது! நாடகம் முடிந்ததும் பின்னால் சென்று எல்ஸியைப் பார்க்க எனக்கும் மிஸ் ஸல்லிவனுக்கும் அனுமதி கிடைத்தது. அவள் ராஜகுமாரியின் ஆடைகள் அணிந்திருந்தாள். அழகி அவள். அவளைவிட அன்புக்குரிய சிறுமியைப் பார்ப்பது அரிதுதான்.

பல குறைகள் இருந்தன என்றாலும் என் வாழ்க்கை பல இடங்களில் அழகான உலகத்தைத் தொட்டது என்று சொல்லத்தானே வேண்டும்?

சாத்தியிருக்கும் வாழ்க்கைக் கதவுக்கு வெளியே இருட்டில் உட்கார்ந்து தனிமையில் ஏங்கும்போது சில சமயம் தப்ப முடியாத பனிப்படலம் என்னை மூடி, மூச்சுக்கூட விடமுடியாதபடி திணர அடிக்கிறது என்று தோன்றும். கதவுக்கப்பால் வெளிச்சமும், சங்கீதமும் இனிமையான நட்பும் இருக்கின்றன; ஆனால் கதவு எனக்குத் திறக்காதுபோல இருக்கிறது. இரக்கமில்லாத மௌனமான விதி குறுக்கிட்டுக் கதவைத் திறக்க விடமாட்டேன் என்கிறது. அசைக்கமுடியாத அதன் தீர்ப்பை ஏற்க நான் மறுக்கலாமா, மறுக்க முடியுமா, மறுக்க வழியுண்டா என்று ஏங்குகிறேன். ஆனால் கசப்பும், ஏக்கமும் நிறைந்த உபயோகமற்ற வார்த்தைகளைச் சொல்ல என் நாக்கு மறுக்கிறது; சிந்தாத கண்ணீர் போல அந்த வார்த்தைகள் என் உள்ளத்திலே மீண்டும் விழுந்து விடுகின்றன. என் ஆத்மாவை மௌனம் என்கிற பிரம்மாண்டமான பக்ஷி விழுங்கிவிட்டதுபோல இருக்கிறது.

பிறகு ஒரு சிறிய புன்னகையுடன் வருகிறது நம்பிக்கை எனும் குட்டித் ,தேவதை; அது மெதுவாக என் அகக் காதுகளில் ஒலிக்குப்படியாக "தன்னையே மறந்து விடுவதில் எல்லையற்ற ஆனந்தம் இருக்கிறது" என்கிறது. அதைக் கடைப்பிடித்து ஒழுக முயலுகிறேன். பிறர் கண்களில் உள்ள ஒளி என் சூரியனாகிறது; பிறர் காதில் ஒலிக்கும் இசை என் பூர்ண சங்கீதம் ஆகிறது; பிறர் இதழ்களில் அரும்பும் இளநகை என் சந்தோஷம் ஆகிறது.

# 23

என் ஆனந்தத்துக்கு உதவியிருப்பவர்கள் எல்லோருடைய பெயர்களையும் இந்த வரலாற்றில் சேர்த்துவிட வேண்டுமென்று எனக்கு ஆசையாகத்தான் இருக்கிறது. அந்தப் பெயர்களில் சில நமது இலக்கியத்திலே அழியாத இடம் பெற்றுவிட்ட பெயர்கள்; சில பெயர்கள், என் வாசகர்களில் பெரும்பாலோருக்குத் தெரியாத பெயர்களாக இருக்கலாம். புகழ் தொடாத அவர்களின் பெயர்கள் கூட நித்யமானவை தான். அவர்களால் ஆனந்தமும் அமைதியும் பெற்ற வாழ்வு எப்போதும் அவர்கள் புகழைப் பாடிக் கொண்டுதானே இருக்கமுடியும்? சிலருடைய கை குலுக்கிலே எல்லையற்ற அனுதாபம் த்வனித்து நம் மனசைக் கவர்ந்து அடிமைப் படுத்துகிறது. இவர்களுடைய சந்திப்பு நமக்கு அதிசயமான ஒரு அமைதியைத்தந்து விடுகிறது; நமக்கு, குழப்பங்கள், எரிச்சல்கள், கவலைகள் இவற்றில் மூழ்கியிருந்த நாம் ஒரு விநாடியில் இவற்றை யெல்லாம் மறந்துவிட்டு நம் வாழ்வும் பரிபூரணமானதுதான் என்று உணர ஆரம்பித்துவிடுகிறோம். இவர்கள் நமக்கு அளிக்கும் அமைதி தெய்வீக

மானது; புதுக்கண்கள் கொண்டு உலகைப் பார்க்கவும், புதுக்காதுகள் கொண்டு கடவுளின் உலகத்தின் இசை வெள்ளத்தைப் பருகவும் நாம் தொடங்கி விடுகிறோம். ஒரு வார்த்தையில் சொல்லப்போனால், இந்த மாதிரி ஆசாமிகள் அருகில் இருக்கும்போது எல்லாம் சரிவர, நிறைந்து இருக்கிறது என்கிற உணர்ச்சி நமக்கு ஏற்படு கிறது. நாம் இந்த நண்பர்களை முன்பின் அறிந்திருக்க வேண்டும் என்கிற அவசியமே யில்லை; மறுபடியும் அவர்கள் நம் வாழ்க்கையில் குறுக்கிடாமல் இருந்து விடலாம். ஆனால் அவர்களுடைய நிம்மதியான, சாந்த மான, பண்பு நிறைந்த சுபாவம் நமது அமைதியின்மை என்னும் நெருப்பில் விழுந்து அதை அணைக்கும் நீர். தன்னுடன் வந்து கலக்கும் இனிப்பான ஆற்று ஜலத்தை உப்பான கடல் உணருவதுபோல நாம் இவர்க ளுடைய நல்லதன்மையையும் அதனால் நமக்கு ஏற்படுகிற நன்மைகளையும் உணருகிறோம்.

நான் சந்திக்கிற மனிதர்களின் கைகள் என்னிடம் மௌனமாகப் பேசி அவர்களைப் பற்றிய உண்மைகளைச் சொல்லிவிடுகின்றன. சில பேருடைய கையைத் தொட் டாலே "சீ!" என்றிருக்கும். சிலருடைய கைகள் விஷமம் நிறைந்தவையாக இருக்கும். மனத்திலே சந்தோஷமோ அன்போ அமைதியோ அற்றவர்களின் கைகளைத்தொட்டுப் பார்த்திருக்கிறேன் நான்; அவர்களுடைய கைவிரல்கள் பனிக்கட்டி போல ஜில்லிட்டு மரத்திருக்கும்; வேறு சிலருடைய கைகளிலேசூரியன் குடிபுகுந்திருப்பது போல இருக்கும். அப்படிப் பட்டவர்களுடைய கைகளைக் குலுக்கு வதால் உள்ளத்திலே ஒரு உவகை துள்ளிவரும்.

நான் நேரில் சந்தித்திராத பல நண்பர்கள் எனக்கு உலகெங்கும் இருக்கிறார்கள். அவர்களின் எண்ணிக்கை

மிக அதிகம்; அவர்கள் எழுதுகிற கடிதங்கள் பலவற்றிற்குப் பதில் எழுதவே எனக்கு அவகாசம் கிடைப்பதில்லை, அவர்கள் கடிதங்களுக்கு நான் பதில் எழுதுகிறேனோ இல்லையோ ; அது வேறு விஷயம். ஆனால் அந்தக் கடிதம் கிடைத்தபோது என் உள்ளம் இறும்பூ தெய்தியது.

என் பாக்கியம் அது, பல மேதைகளை நான் நேருக்கு நேர் சந்தித்து அளவளாவியிருக்கிறேன். பிஷப் ப்ரூக்ஸ் என்பவரின் நட்பைப் பெறும் பாக்கியம் பெற்றவர்களுக்குத்தான் அது எப்படிப்பட்ட அதிர்ஷ்டம் என்பது தெரியும். குழந்தையாக அவர் மடியில் உட்கார்ந்து கொண்டு அவருடைய பெரிய கையில் என் சிறிய கையைக் கொடுத்துவிட்டு, கடவுளையும் ஆத்மிக வாழ்வு பற்றி அவர் சொல்கிற வார்த்தைகளை அர்த்தப் படுத்திக் கொள்ளும் அற்புத வாய்ப்பு இருந்தது எனக்கு. அழகாக வார்த்தைகள் சொல்வார் அவர். ஒரு குழந்தையின் ஆனந்தத்துடனும் ஆச்சரியத்துடனும் அவர் பேசியதைக் காதில் வாங்குவேன் நான். வாழ்க்கையில் இன்பம் பெற அவர் வார்த்தைகளும் உதாரணமும் எனக்கு உதவியன. அவர் சொன்ன ஒவ்வொரு வாக்கியமும் பின்னர் நான் வளர்ச்சி பெறப் பெற அர்த்தமும் அழகும் கூடி வளர்ந்தது. ஒரு தடவை உலகில் உள்ள மதங்கள் தத்துவ தரிசனங்கள் எல்லாம் பற்றி நான் கேட்டதற்கு அவர் சொன்னர்: " எல்லோருக்கும் பொதுவான, அடிப்படையான தத்தவம் ஒன்று உண்டு. அதன் பெயர்தான் அன்பு மதம், ஹெலன். உன்னுடைய நித்யமான பிதாவை நீ உள்ளன்புடன் நேசி. கடவுளின் மக்களான மனிதர்களை உன் சகோதரர்களை நேசிப்பதுபோல நேசி. கெடுதி என்பதைவிட உலகில் நல்லது என்பதுதான் அதிகம் என்பதை எப்போதும் மனத்தில் வை. இப்படி யெல்லாம்

முடிவு கட்டி நடந்து கொண்டாயானால் ஸ்வர்க்கத்தின் சாவி உன் கையில் இருக்கிற மாதிரித்தான்." இந்த உண்மைக்கு உதாரணம் போல அமைந்திருந்தது அவர் வாழ்க்கை. "உயர்த்துவது, சுதந்திரம் தருவது, பணிவு தருவது, இன்பமளிப்பது, ஆறுதலளிப்பது எல்லாவற்றிலும் கடவுளைக் கண்டார்" அவர்.

என் மனத்தில் பதியும்படியாக அவர் இரண்டு பெரும் தத்துவங்களை உபதேசித்தார். கடவுளின் தகப்பன் தன்மையையும், மக்களின் சகோதரத் தன்மையையும் அவர் எனக்கு உபதேசித்தார். கடவுள் என்பது அன்பு தான். கடவுளே நம் தகப்பன். நாம் கடவுளின் புதல்வர்கள். ஆகவே இருண்ட மேகங்களும் அகன்றுவிடும்; காலக்கிரமத்தில் அன்பு வெல்லும். நல்லது தோற்றுப் போனது போல இருந்தாலும் கெட்டது ஒருகாலும் வெற்றி பெறாது! இவை அவர் உபதேசங்கள்.

இப்போது இங்குள்ள ஆனந்தத்தில் எனக்கு வேறு ஒரு உலகத்தைப் பற்றி விசாரித்தறிய அவசியமே இல்லாது போய்விடுகிறது. ஆனால் கடவுளின் அந்த மறு உலகத்தில் எனக்காக என் அருமை நண்பர்கள் காத்திருப்பார்களோ என்கிற சந்தேகம் சில சமயம் எனக்குத் தோன்றும். ஆனால் அந்தமாதிரி நண்பர்களை நான் இழந்து பல வருஷங்களாகிவிட்ட போதிலும்கூட அவர்கள் என்னண்டையிலேயே இருந்து என் காரியங்களில் என்னை ஊக்கி விடுவதுபோலவும், என் திட சங்கல்பத்தில் என்னை ஆதரிப்பது போலவும் எனக்குப் பிரமை ஏற்படுவதுண்டு.

பிஷப் ப்ரூக்ஸ் இறந்தபிறகு நான் பைபிளைப் பல முறைகள் படித்துவிட்டேன். வேறு பல மதங்களைப் பற்றிய நூல்களையும் பலரகமான தத்துவ தரிசனங்களையும்

படித்து அறிந்துகொள்ள முயன்றேன்.ஸ்வீடன்போர்க்கின் "ஸ்வர்க்கமும் நரகமும்," டிரம்மாண்டின் "மனிதனின் வளர்ச்சி" முதலிய நூல்களைப் படித்தேன். பிஷப் ப்ரூக்ஸின் அன்பு மதத்துக்கு ஈடான தத்துவங்களை உபதேசிக்கிற நூல்கள் என் கண்ணில் படவில்லை. மிஸ்டர் ஹென்ரி டிரம்மண்டையும் நான் சந்தித்திருக்கிறேன். அவர் அறியாத விஷயம் இல்லை; எந்த விஷயத்தையும் எளிமையாகவும் தெளிவாகவும் சொல்லுவார் அவர்.

டாக்டர் ஆலிவர் வெண்டல் ஹோல்ம்ஸை நான் சந்தித்த சந்தர்ப்பமும் எனக்கு நன்கு ஞாபகம் இருக்கிறது. ஒரு ஞாயிற்றுக்கிழமையன்று காலை நானும் மிஸ் ஸல்லிவனும் வந்து அவரைச் சந்திக்கலாம் என்று சொல்லியனுப்பினர் அவர். நான் பேச ஆரம்பித்த புதுசு அது. வஸந்தகாலத்தின் ஆரம்பம். ஒரு பெரிய சாய்வு நாற்காலியில் திறந்திருந்த கணப்பண்டை, வாசகசாலையில் உட்கார்ந்திருந்தார் அவர். பழையநாட்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டு உட்கார்ந்திருப்பாகச் சொன்னர்.

"சார்லஸ் ஆற்றின் முணமுணப்பையும் கேட்டுக் கொண்டிருக்கிறீர்களோ?" என்றேன் நான்.

"ஆமாம். சார்லஸ் ஆறு எனக்கு எத்தனையோ நினைவுகளை எழுப்புகிறது" என்றார் அவர். அச்சுமையும், தோல் கட்டிடங்களும் வாசனை வீசின. கையை நீட்டி அகப்பட்ட புஸ்தகத்தை எடுத்தேன். டென்னிஸனின் கவிதைத் தொகுதி ஒன்று, மிக அழகான புஸ்தகம், என் கையில் அகப்பட்டது. டென்னிஸன் என்று மிஸ் ஸல்லிவன் சொன்னதும் நான் எனக்குத் தெரிந்த ஒரு கவியைச் சொன்னேன்: "குளுமையான சாம்பல் நிறக் கற்களிலே, ஓ கடலே, உன் அலைகளை மோதி

உடை, உடை, உடை !" திடீரென்று பாட்டைத் தொடரா மல் நிறுத்திவிட்டேன். என் கையில் சூடான கண்ணீர்த் துளிகள் இரண்டு விழுந்து தெறித்தன. எனக்கு மிகவும் கஷ்டமாகப் போய்விட்டது. என்னை அருகில் உட்கார வைத்துக்கொண்டு, சுவாரசியமான பல சாமான்களை என் கையில் தந்தார். அவருடைய கவிதை ஒன்றை ஒப்பித் தேன். அது எனக்குப் பூராவும் மனப்பாடமாக இருந்தது— எனக்கு மிகவும் பிடித்த கவிதை அது. பல தடவைகளில் நான் டாக்டர் ஹோல்ம்ஸைப் போய்ச் சந்தித்திருக்கிறேன் மனிதனுகவும் கவியாகவும் அவரை அறிந்து அவரிடம் அன்பு கொண்டேன் நான்.

பின்னர் ஒரு நாள், நானும் மிஸ் ஸல்லிவனும் போய், மெர்ரிமாக் ஆற்றங் கரையில் இருந்த அழகான அமைதியான வீட்டில், விட்டியரைப் பார்த்தோம். அவருடைய மிருதுவான சுபாவமும் விநோதமான பேச்சும் என் உள்ளத்தைக் கவர்ந்தன. அவரிடம் குருடர்கள் எழுத்தில் அச்சிடப்பட்டிருந்த ஒரு கவிதைத் தொகுதி — அவருடையதேதான் — இருந்தது. அதில், " பள்ளி நாட்கள் " என்கிற கவிதையைப் படித்துக் காட்டி னேன். என் உச்சரிப்பு அவருக்குப் புரிந்தது ; அதைப் பற்றி அவர் என்னைப் பாராட்டினர். அந்தக் கதையில் வந்த சின்னப் பையன் தானேதான் என்று விளக்கினுர் அவர். அதில் சொல்லப்பட்டிருந்த பெண்ணின் பெயர் ஸாலி என்று சொன்னுர். "லாவ்ஸ் தியோ" என்கிற அவ ருடைய கவிதையையும் சொன்னேன். கடைசி வரிகளை நான் ஒப்பிக்கும்போது அவர் என் கையில் ஒரு சிறு சிலை யைத் தந்தார். அது பதுங்கி எழத் தயாராக இருந்த ஒரு அடிமையின் சிலை. பின்னர் அவர் தன்னுடைய படிப்பு அறைக்குள் சென்று என் உபாத்தியாயினிக்குத் தன்

கையெழுத்தைப் போட்டுத் தந்தார்: அவளுக்காக ஒரு அர்த்த புஷ்டியான வாக்ய அர்த்தமும் எழுதித் தந்தார். என் உபாத்தியாயினி சாதித்திருப்பதை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினார். என்னிடம் "உன் ஆத்மாவுக்கு விடுதலை தேடித் தந்தவள் அவள்" என்றார். என்னை வாசல்வரையில் அழைத்துக்கொண்டு போய்விட்டு நெற்றியில் முத்தமிட்டார். மறுகோடையில் மீண்டும் வந்து அவரைப் பார்ப்பதற்கு வருவதாகச் சொன்னேன்; ஆனால் அவர் இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு இறந்துவிட்டார்.

டாக்டர் எட்வர்டு எவெரெட் ஹெல் என்னுடைய ஆதிநாளைய நண்பர்களில் ஒருவர். என் எட்டாவது வயது முதல் எனக்கு அவரைத் தெரியும். எனக்கு வயசு ஆக ஆக அவரிடம் என் அன்பு அதிகரித்தது.

எங்களைப்போல எத்தனையோ பேருக்கு, எத்தனையோ சந்தர்ப்பங்களில் உதவி செய்திருக்கிறார் அவர். அன்பு என்கிற தத்துவத்தை உயிருள்ளதாகச் செய்தவர் அவர். நம்பிக்கையுடன் வாழ்ந்து சுதந்திரம் பெறுவது எப்படி என்று அவர் தன் வாழ்க்கையிலே நிதரிசனமாகக் காட்டியவர். அவர் பழையகாலத்து மனிதர்.

நான் முதல் முதலில் டாக்டர் அலெக்ஸாண்டர் கிராஹம் பெல் என்பவரைச் சந்தித்தது பற்றி ஏற்கெனவே எழுதிவிட்டேன். அவரை அதற்குப் பிறகு பல தடவைகள் சந்தித்து அளவளாவி யிருக்கிறேன். வாஷிங்டன் நகரிலும் அவருடைய அழகான நாட்டுப்புற வீட்டிலும் பலதடவை சந்தித்திருக்கிறேன்.

ஆகாயக் கப்பல் கட்டுவதற்கான விதிகளையும் வழிகளையும் கண்டுபிடிப்பதற்காக அவர் பட்டங்கள் பறக்க

விட்டுக்கொண்டிருப்பார்; பட்டங்கள் பறக்க விடுவதில் அவருக்கு நான் உதவுவேன். டாக்டர் பெல்லுக்கு விஞ்ஞானத் துறையில் பல விஷயங்களில் பரிசயமுண்டு; அவர் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினாலும் தெளிவாகவும் எனக்கும் புரியும்படியாகவும் பேசுவார். மிகவும் சிரமமான விஷயங்களைக்கூட எளிய வார்த்தைகளில் கேட்பவருக்குப் புகட்டிவிடுவார். ஹாஸ்யமும் கவிதையும் அவருக்குச் சுலபமாகவே வந்தன. அவருடைய பிரதான ஈடுபாடு குழந்தைகளிடம்தான். மடியில் செவிட்டுக் குழந்தை ஒன்றை வைத்துக்கொண்டு அவர் விளையாடும் போதுதான் அவருக்குப் பரம ஆனந்தமாக இருக்கும். செவிட்டுக் குழந்தைகளுக்காக அவர் செய்திருக்கிற நன்மைகள் வருகிற தலைமுறைகளில் பல்லாயிரக் கணக்கான செவிட்டுக் குழந்தைகளின் வாழ்வைச் சுலபமாக்கும்.

ந்யூ யார்க் நகரில் நான் தங்கிய இரண்டு வருஷங்களில் நான் எதிர்பார்க்காமலே, தேடிப் போகாமலே, பல பிரபலஸ்தர்களைச் சந்தித்தேன். என்னுடைய அருமை நண்பர் மிஸ்டர் லாரன்ஸ் ஹாட்டன் வீட்டில் அவர்களில் பலரை நான் முதல் முதலாகச் சந்தித்தேன். அன்புமிக்க மிஸ்ஸஸ் ஹட்டனையும் அவரையும் போய்ப் பார்ப்பது என்பதே மிகவும் திருப்தி தருகிற விஷயம். அவர்களுடைய அழகான வீடும், வாசகசாலையும், பிரசித்தமானவை. நாட்டில் பெரியவர்கள், மேதைகள் என்று சொல்லத்தக்கவர்கள் எல்லோரும் அவருடைய நண்பர்கள். தான் சந்திக்கிற மக்களின் சிறந்த அம்சங்களை எல்லாம் வெளிக்கொணர்ந்து ஆனந்திக்கும் சக்தி மிஸ்டர் ஹட்டனுக்கு இருந்தது. எனக்குத் தெரிந்த அளவில் மிகவும் இனிமையான தோழர்; எந்தச் சமயத்திலும் நட்புரிமையுடன் உதவிகள செய்ய மு ன்வருவார் அவர்.

மிஸ்ஸஸ் ஹட்டன் எனக்குப் பல சந்தர்ப்பங்களில் உதவி செய்திருக்கிறார். என் வாழ்வில் சிறந்தது, நேர்த்தியானது, மறக்கமுடியாதது என்று நான் அங்கீகரிப்பவை எல்லாம் அவள் தயவால்தான் எனக்குக் கிடைத்தன. காலேஜ் படிப்பில் முன்னேற வழிகாட்டி, புத்திமதிகள் சொல்லி என்னை ஊக்கியவள் அவள்தான்.

தன்னுடைய இலக்கிய நண்பர்கள் பலருக்கு மிஸ்டர் ஹட்டன் என்னை அறிமுகம் செய்து வைத்தார். அவர்களில் இருவர், முக்கியமானவர்கள், மிஸ்டர் வில்லியம் டீன் ஹவல்ஸும், மார்க் ட்வெயினும், மிஸ்டர் ரிச்சர்ட் வாட்ஸன் கில்டர், மிஸ்டர் எட்மண்டு கிளாரன்சு ஸ்டெட்மன் என்பவர்களையும் நான் சந்தித்தேன். மிஸ்டர் சார்ளஸ் டட்லி வார்ணரையும் நான் அறிந்துகொண்டேன். இவர் வெகு அழகாகக் கதைகள் சொல்வார்; என் நண்பர்களில் மிகவும் முக்கியமானவர்களில் ஒருவர். ஒருதடவை காடுகளைப் பற்றிப் பாடும் கவி மிஸ்டர் ஜான் பர்ரோஸை என்னைப் பார்க்க அழைத்துவந்தார் மிஸ்டர் வார்ணர். அவர்கள் எல்லோரும் என்னிடம் அனுதாபம் காட்டினார்கள்—அன்பு பாராட்டினார்கள். அவர்களுடைய கவிதைகளையும் வியாசங்களையும் படித்து ரசித்ததுபோலவே நான் அவர்களுடன் அளவளாவி அவர்களுடைய சம்பாஷணைகளையும், தனிப் பழக்கங்களையும் நான் ரஸித்தேன். இந்த இலக்கிய மேதைகள் தங்களுக்குள் பேசிக்கொண்ட பேச்சுக்களை எல்லாம் பூரணமாகத் தொடர்ந்து நான் அறிந்துகொண்டேன் என்று சொல்வது சரியாகாது. பரந்த பாலைவனங்களிலே பிரமிட்களை நோக்கித் தான் செய்த பிரயாணங்கள் பற்றி மிஸ்டர் கில்டர் என்னிடம் சொன்னார். எனக்கு எழுதிய கடிதம் ஒன்றில் அவர் தன் கையெழுத்து என் கைவிரல்களுக்குப் புலனாகும்படியாக

அழுத்திப் பள்ளம் விழும்படியாகக் கையெழுத்திட்டிருந்தார். டாக்டர் ஹேல் எனக்கு எழுதிய கடிதங்களில் தன் கையெழுத்தை ப்ரெய்ல் எழுத்தில் எழுதுவார் எனக்காக. மார்க் ட்வெயினின் உதடுகளைத் தொட்டு அவர் எனக்கென்று சொன்ன கதைகள் இரண்டைக் கேட்டேன். அவருடைய பேச்சு, செய்கை, சைகை, வழி எல்லாமே அவருக்கே உரித்தானவை. என் கைகளை குலுக்கும் குலுக்கில் அவர் கண்ணைச் சிமிட்டுகிறார் என்று அறிந்துகொள்வேன் நான்.

இன்னும் எத்தனையோ சுவாரசியமான மனிதர்களை நான் ந்யூ யார்க்கில் சந்தித்தேன். "ஸ்ந்த நிகோலஸ்" பத்திரிகையின் ஆசிரியை மிஸ்ஸஸ் மேரிபேட்ஸ் டாட்ஜ்ட்ஜ், "பாட்ஸி" என்கிற நாவலை எழுதிய மிஸ்ஸஸ் ரிக்ஸ் (கேட் டக்ளஸ் விக்கின்) இவர்களையும் எனக்கு ஞாபகம் வருகிறது. அவர்களிடமிருந்து எனக்கு அன்பளிப்புகள் கிடைத்தன. என் நண்பர்கள் எல்லோரையும் பற்றிச் சொல்ல இங்கு எனக்கு இடம் போதாது. அச்செழுத்து எனும் உயிரற்ற சாதனத்தால் அளவிட்டு அறியமுடியாத பல விஷயங்களைச் சொல்லவே எனக்கு மனம் வரவில்லை. பல நண்பர்களைப் பற்றிப் பேசுவதே தவறு என்று எனக்குத் தோன்றுகிறது. மிஸ்ஸஸ் லாரன்ஸ் ஹட்டனைப் பற்றிக்கூட நான் தயக்கத்துடன்தான் இங்கு எழுதியிருக்கிறேன்.

இன்னும் இரண்டு நண்பர்களைப் பற்றி மட்டும் நான் இங்கு எழுத விரும்புகிறேன். பிட்ஸ்பரோவைச் சேர்ந்த மிஸ்ஸிஸ் வில்லியம் தா என்பவள் இவர்களில் ஒருத்தி, யாராவது ஒருவருக்கு ஏதாவது ஒருவிதத்தில் நன்மை செய்ய முயற்சி செய்துகொண்டிருப்பாள் அவள். எனக்கும்

என் உபாத்தியாயினிக்கும் என்று என்ன உதவி வேண்டு மானாலும் அவள் செய்யத் தயங்கியதே கிடையாது.

மற்ற இரண்டவது நண்பருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன். பெரிய பெரிய ஸ்தாபனங்களை யெல்லாம் மிகவும் அநாயாசமாக நடத்தி வெற்றி கண்டவர் அவர். மௌனமாக, பிறர் கண்ணில் படாமல், உலகில் உள்ள எல்லோருக்கும் உபயோகப்பட வேண்டும் என்று, அவர் தன் வழிகளில் உதவிசெய்து செல்கிறார். அவர் பெயரை வெளியிடுவதற்கில்லை. ஆனால் அவருடைய உதார குணத்துக்கு வணக்கம் செலுத்தாமல் என்கதையை முடிக்க எனக்கு மனம் வரவில்லை. என் காலேஜ் வாழ்க்கை சாத்தியமானது அவரால்தான் என்று மீண்டும் ஒருதரம் சொல்லிவிடுகிறேன்.

என் கதையைப் பூரணமாக்கியவர்கள் என் நண்பர்கள் தான் என்று நான் கருதுகிறேன். ஆயிரக்கணக்கான வழிகளில் என் குறைபாடுகளையும், கண்ணில்லாமையை யும்கூடப் பயன்படுமாறு செய்து என் வாழ்வுக்கு அர்த்தம் தருபவர்கள் என் நண்பர்கள். புலன்கள் இரண்டு இல் லாத குறையையும் மறந்து சந்தோஷமாக நான் வாழ்க்கை நடத்துவது இன்று சாத்தியமாக இருப்பது இந்த நண்பர் களின் உதவியால்தான் !

---

# இந்நூலாசிரியை

**ஹெலன் கெல்லர்** என்றால் யார் என்று 1955-ல் இந்தியாவில் யாரும் கேட்கமாட்டார்கள். இவர் பிறவியிலேயே ஊமை, செவிடு. அத்துடன் தன்னுடைய 19-வது மாதத்தில் கண் பார்வையையும் இழந்தார். ஆயினும் அசைக்க முடியாத தன் நம்பிக்கையை மட்டும் இவர் இழக்கவில்லை.

இருபதாம் நூற்றாண்டு என்று சரித்திரம் கூறுகிற இந்தக் காலம் தோன்று முன்னரே,—விடா முயற்சியும், பிடிவாதமும் உள்ள, கல்வி அறிவு பெறவேண்டும் என்கிற லக்ஷியமும் படைத்த—இந்தச் சிறுமியைப்பற்றி அமெரிக்கா முழுவதும் அறிந்து கொண்டு விட்டது. ஹெலன் கெல்லரைப் பற்றிய தகவல்களும், அவள் கண்ணுள்ள, காதுள்ள மக்களுக்குச் சமமாக வாழ்க்கை நடத்தி வந்ததும், தன்னைப் போலப் பாதிக்கப்பட்டவர்களுக்காக அவள் செய்த முயற்சிகளும், நன்மைகளும் இந்த ஐம்பத்தி ஐந்து வருஷங்களில் உலகப் பிரசித்தமாகி விட்டன. அமெரிக்காவில் மட்டும்தான் ஹெலன் கெல்லர் போன்ற அதிசயங்கள் நடப்பது சாத்தியமென்பதில்லை. உலகில் எங்கும் சாத்தியமாக வேண்டும் என்பதே ஹெலன் கெல்லரின் நோக்கம். இதற்காக அவர் நினைவு தெரிந்த நாட்களாகப் பாடு பட்டு வந்திருக்கிறார். "என் கதை" என்ற தன்னுடைய சுய சரிதத்தில் ஆதி நாட்களின் போராட்டங்களை விவரித்திருக்கிறார். உலகத்தின் சிறந்த சுய சரிதங்களில் ஒன்றாகப் பாராட்டப் படவேண்டிய இந்த நூலை க. நா. சுப்ரமண்யம் மொழி பெயர்த்துள்ளார்.